# தனது சட்டையே வெண்மையென நினைத்தவன்
# ரின்ஸோவினால் வெளுக்கப்பட்ட
# ராமுவின் சட்டையைப் பார்த்ததும் பிரமித்தான்

ரின்ஸோவினால் வெளுக்கப்பட்ட துணிகள் கண்ணைப்பறிக்கும் வெண்மை புடையவை—பார்த்த மாத்திரத்தில் பளிச்சிடும் உன்னதமான வெண்மை! உங்கள் குடும்பத்தின் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகித்துப் பாருங்கள்! அதன் விறுவிறுப்பான நுரை எவ்வளவு இலகுவாகவும் விரைவாகவும் அழுக்கை அறவே அகற்றிவிடுகிறது. துணிகளுக்கு எவ்வளவு அற்புதமான சுத்தம் அளிக்கிறது என்பதைக் கண்டு திருப்தி அடைவீர்கள். ஞாபகமிருக்கட்டும். அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ தேவை யில்லை!

வெள்ளைத்துணிகள் அதிவெண்மையாவதற்கும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமடைவதற்கும் ரின்ஸோ சலவைப் பவுடர் உபயோகியுங்கள்!

பெரிய சைஸ் உபயோகியுங்கள்—அதனால் சிக்கனம் அதிகம்.




## அதி வெண்மையாக வெளுப்பது ரின்ஸோ

### உங்கள் வேலையை இலகுவாக்கும் அற்புத சோப் பவுடர்!

R. 15-50 TM

பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தயாரிப்பு

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17
இதழ் 33

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி
பங்குனிமீ 3உ

# வெற்றி முரசம் கேட்கிறது!

தமிழ்நாட்டில் எழுப்பிய முரசின் எதிரொலி வங்கத்தில் கேட்கிறது! பஞ்சாபில் கேட்கிறது! இன்னும் கொஞ்ச நாட்களில் பாரதநாட்டின் எட்டுத் திசைகளிலுமே கேட்கத் தொடங்கிவிடும் என்ற நல்ல சகுனம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது!

"இந்தி வேண்டாம், ஆங்கிலமே தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்!" என்று ராஜாஜி எழுப்பிய குரலுக்குத் தென்னகத்து அறிஞர்கள் எல்லாம் ஆதரவு கொடுத்தார்கள். தமிழ்நாட்டுப் பொது மக்களெல்லாம் ஊக்கமும் உற்சாகமும் அளித்தார்கள். சென்னையில் ஒரு மகாநாடு கூட்டி, தீர்மானங்கள் நிறைவேற்றினார்கள். இப்பொழுது அது வங்கத்தில் எதிரொலிக்கத் தொடங்கியிருக்கிறது.

வங்கத்தின் தலைநகரமாகிய கல்கத்தாவில் ஆட்சிமொழி மகாநாடு சென்ற வாரம் கூடியது. அங்கு பஞ்சாபின் எதிரொலியும் கேட்டது! பஞ்சாப் சீக்கியர்களின் தலைவர் மாஸ்டர் தாராசிங் அந்த மகாநாட்டில் கலந்துகொண்டு, "ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும்" என்று கர்ஜித்தார்.

இந்த மகாநாட்டுக்குத் தமிழ் நாட்டிலிருந்து 15 பிரதிநிதிகளும், கேரளத்திலிருந்து 6 பிரதிநிதிகளும், ஆந்திரத்திலிருந்து 10 பிரதிநிதிகளும், ஒரிஸ்ஸாவிலிருந்து 20 பிரதிநிதிகளும், கன்னட நாட்டிலிருந்து 3 பேரும், அஸ்ஸாமிலிருந்து 7 பேரும், மைதிலி மொழி பேசும் பகுதியிலிருந்து 17 பேரும், பஞ்சாபிலிருந்து 25 பேரும், சிந்தி பேசுபவர்கள் சார்பாக 3 பேரும், குஜராத் மொழி பேசுபவர்கள் சார்பாக 2 பேரும், மகாராஷ்டிரர்கள் மூவரும், வங்காளிகள் 250 பேரும் வந்திருந்தனர்.

இந்த மகாநாட்டில் டாக்டர் ராதா பிநோத் பால் தலைமையுரை நிகழ்த்தினார். இவர் கல்கத்தா நகரத்தின் பெரு வழக்கறிஞர். நல்ல சிந்தனையாளர். தீர்க்கதரிசனம் உள்ளவர். மிக அருமையான தலைமையுரை நிகழ்த்தினார். அந்தத் தலைமைப் பேருரையிலிருந்து, 1949 - லேயே ராதா பிநோத் பால் அவர்கள் ஆங்கிலமே ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று சொல்லியிருப்பதைக் காண்கிறோம்.

> "நாம் ஏன் நமது குறுகிய மனப்பான்மையை விட்டுத் தொலைத்து, ஆங்கிலத்தையே ஆட்சி மொழியாக ஏற்றுக் கொண்டு உலகத்துக்கு வழிகாட்டக் கூடாது? அப்படிச் செய்வது, நமது பாரத நாட்டின் பழம் பெரும் உயரிய பண்பாட்டுக்கு உகந்ததாகவே இருக்கும். இந்தியை உலக மொழியாக்க முயல்வதைவிடச் சிறந்ததாக இருக்கும்."

இவ்வாறு ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னால் அவர் பேசியிருப்பதை மேற்கோள் காட்டி அன்றையத் தலைமைப் பேருரையில் அவர் கூறியபோது, சபையில் கூடியிருந்த தென்னக மக்கள் எல்லோரும் வியந்தனர். எவ்வளவு தெளிவாகச் சொல்லியிருக்கிறார் என்று பேசிக் கொண்டனர். தமிழ் நாட்டுப் பெரியோர்களையும் அறிவாளிகளையும் போலவே, இந்தி ஆட்சி மொழியானால் ஆட்சியாளர்கள் விரும்பும் ஒற்றுமைக்குப் பதிலாக, எதிர்காலத்தில் பிரிவினைதான் வளரும் என்று வங்காளத்திலுள்ள அறிவாளிகளும் பெரியோர்களும் நீண்ட நாட்களாக உணர்ந்து வந்திருக்கின்றனர் என்பது அவர் பேச்சைக் கேட்டபோது சந்தேகமறத் தெரிந்தது. ஆனால் தங்களுடைய இந்த

# போலிப் போர்வை!




"மொழி வெறி, வகுப்புவாதம், எதேச்சாதிகாரம் ஆகியவற்றின் சின்னமாக ஹிந்தி விளங்குகிறது" என்று கல்கத்தா மொழி மகாநாட்டில் திரு அந்தோணி கூறினார்.

உணர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கக் கூடிய அகில இந்தியத் தலைவர் ஒருவரும் இல்லாமல், பாய் மரமின்றி நடுக் கடலில் விடப்பட்ட மரக்கலம் போல் தவித்தனர்! தமிழ் நாட்டிலிருந்து ராஜாஜி குரல் கொடுத்தவுடன், "தங்களைக் காப்பாற்ற ஒருவர் தமிழ் நாட்டில் இருக்கிறார்!" என்று ஒவ்வொரு வங்காளியும் நினைக்கத் தொடங்கினர். கல்கத்தாவில் நடைபெறும் ஆட்சி மொழி மகாநாட்டுக்கு ராஜாஜி வருகிறார் என்று தெரிந்ததும், தங்கள் ஆசைகளும் அபிலாஷைகளுமே ஓர் உருவம் பெற்று வருகிறது என்று நினைத்துக் குதூகலத்தில் ஆழ்ந்தனர். தங்கள் கனவுகளையெல்லாம் நனவாக்கும் மகான் வருகிறார் என்று மகிழ்ந்தனர்.

ராஜாஜி மேற்கு வங்கத்தின் கவர்னராக இருந்தபோது வங்க மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவர்.

அதைவிட இப்பொழுது ராஜாஜி மேற்கொண்டுள்ள பணியை நினைக்கும்போது, ராஜாஜி தமிழர் என்பதையே மறந்து தங்களில் ஒருவர், தங்களை உய்விக்க வந்தவர் என்று எண்ணி நெஞ்சுருகி நிற்கின்றனர்.

ஆட்சிமொழி மகாநாட்டில் ராஜாஜி மிக்க உணர்ச்சியோடு பேசினார். பல காரணங்களை எடுத்துச் சொன்னார். பல உதாரணங்களை எடுத்துக் காட்டினார். ராஜாஜியின் அன்றைய பிரசங்கத்தைக் கேட்டவர்கள் புது உற்சாகத்தையே கொண்டு திகழ்ந்தனர்.

ராஜாஜி முடிவுரையில் பின்வருமாறு கூறினார்: "நம்முடைய இந்தப் போராட்டத்தில் வெற்றி பெறுவோமா? இந்தி வெறியர்கள் அதிகமாக இருக்கும்போது, காங்கிரஸ் சர்க்கார் இந்தியைத் திணிக்க மும்முரமாக முயற்சி செய்யும்போது, நம்முடைய இந்தப் போராட்டம் வெற்றியடையுமா என்று சிலர் கேட்கின்றனர். வெற்றியடையக் கூடிய கட்சியில்தான், வெற்றி கிடைக்கும் போராட்டத்தில்தான் சேருவது என்று நினைக்கக் கூடாது. நமது கட்சியில் நியாயம் இருக்கிறது. நாம் சொல்வதில் நேர்மை இருக்கிறது. நியாயத்தை எடுத்து வற்புறுத்திப் போராட வேண்டியிருந்தால் போராடத்தான் வேண்டும். வெற்றி தோல்வியைப் பற்றிச் சிந்திக்காமல் போராடியே தீர வேண்டும். ஆனால் நாம் இந்தப் பிரச்னையில் இறுதியில் வெற்றி அடைவோம்" என்று ராஜாஜி கூறி முடித்தபோது, வங்கப் பொது மக்கள் அடைந்த பெருமஉற்சாகம் வானதிரக் கரகோஷம் மூலமாக வெளிப்பட்டது!

நாட்டின் சுதந்திரப் போரிலே முன்னணியில் நின்ற மக்கள் வங்க மக்கள்! ஆட்சி மொழிப் பிரச்னையில் "எது வந்தாலும் இறுதி வரை போராடியே தீருவது!" என்று முடிவு செய்திருக்கின்றனர்.

வங்கத்தின் எதிரொலி, ஆட்சிமொழி விஷயத்தில் நாம் வெற்றிப் பாதையில் முன்னேறி விட்டோம் என்று பறைசாற்றுகிறது!

# விவசாயிகளுக்கு மற்றொரு அடி

சென்னை நிதி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தின்மீது சட்டசபையில் நடந்த விவாதம் முடிந்து விட்டது. நூறு அங்கத்தினர்கள் விவாதத்தில் கலந்து கொண்டு வெளுத்து வாங்கி விட்டார்கள்.

ஆனால், புது வரி ஜாபிதாவில் அதிகமான கண்டனத்துக்கு உள்ளான விவசாய வருமான வரி பற்றிய பொதுஜன அபிப்பிராயத்தை, அரசாங்கம் எவ்வளவு தூரம் ஏற்றுக் கொண்டிருக்கிறது என்பது தெரியவில்லை.

இந்த வரி அவசியம்தானா என்பதற்கே நிதிமந்திரியின் 'பட்ஜெட்' உரையில் விளக்கம் தரப்படவில்லை. விவசாய நிலங்களுக்குச் சீக்கிரமே உச்சவரம்பு நிர்ணயிக்கப்படவிருக்கிறதென்று சர்க்கார் தீர்மானித்துள்ளனர். இது அமுலுக்கு வந்தால், இந்த வரியினால் யாதொரு உருவான பலனும் ஏற்படாமல் போகலாம் என்பதை நிதிமந்திரியே எடுத்துக் காட்டினார். எனினும், தாற்காலிகமாக ஒரு உச்சவரம்பு தீர்மானித்திருப்பதால், இவ்வரம்புக்கு அதிகமாக நிலம் வைத்திருப்பவர்களிடமிருந்து இடைக்காலத்துக்கு வருமான வரி வசூலிப்பது, சோஷலிச சமுதாயக் கொள்கைக்கு ஏற்றதுதான் என்று இதற்குச் சர்க்கார் சார்பில் சமாதானம் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த வாதத்தை ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஏனெனில், இடைக்காலத்தில் கிடைக்கக் கூடிய ஒரு வருமானத்துக்காக, விவசாயிகளுக்கு மிகுந்த இன்னல் விளைவிக்கக் கூடிய ஒரு வரியைப் புகுத்த வேண்டுமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்.

வரி விசாரணைக் கமிஷன், விவசாய வருமான வரி விதிக்கப்பட வேண்டியது அவசியம் தான் என்று சிபாரிசு செய்திருக்கிறது என்பதையும் ஆதாரமாகக் காட்டப்படுகிறது. விலைவாசிகளை ஒத்திட்டுப் பார்த்து, விவசாயிகள் இவ்வரிப் பளுவைத் தாங்கக் கூடும் என்பது அக்கமிஷனின் ஆராய்ச்சியாகும். இதன் யாதாஸ்து சமர்ப்பிக்கப்பட்ட பிறகு நடந்த பல மாறுதல்களினால், அக்கமிஷனின் ஆராய்ச்சியும் ஒரு விதத்தில் பாதிக்கப்பட்டுள்ளது. தற்போதைய நிலைமையில் அக்கமிஷனின் தீர்மானங்கள் பொருத்தமற்றவை என்றே தோன்றுகிறது.

ஆனால் விவசாயிகளுக்கு இக்காலத்தில் விவசாயம் லாபகரமான தொழில்தானா என்பதைப்பற்றி அதிகம் கூறத்தேவையில்லை. நிலத்தில் முதலீடு செய்வதும், விவசாயம் நடத்துவதும் எவ்வளவு தூரம் சமீப கால சட்ட திட்டங்களால் பாதிக்கப் பட்டிருக்கின்றனவென்பது எல்லோரும் அறிந்ததாகும். இந்த நிலையில், விவசாய வருமான வரி விதிப்பது, ஏற்கனவே மிகவும் பாதிக்கப்பட்டுள்ள ஒரு தொழிலை மேலும் சீர்குலைப்பதாக முடியும்.

இவ்வரியில் குறைபாடுள்ள மற்றொரு அம்சம் இதன் அமைப்பு முறை. ரூபாய் 3000

## மக்கள் பரிதவிப்பு !



வருமானமுள்ள நிலங்களுக்கு விலக்களிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் விவசாயிகளின் வருமானத்தில் அவர்களுடைய இதர வருமானத்தையும் சேர்த்துக் கொண்டு, மொத்த வருமானத்தின் மீது வரி விகிதம் நிர்ணயிக்கப்படும். வரி விகிதமும், தற்போது தோட்டப் பகுதிகள் மீது விதிக்கப்பட்டிருக்கும் அதிகப்படி விகிதத்தின்படியே இருக்கும். தோட்டங்கள் இப்போது தங்கள் வருமானத்தில் ரூபாய்க்கு 45 நயா பைசா வீதம் வரி கொடுக்கின்றன.

இவை யனைத்தும் ஆட்சேபகரமானவை. விவசாயிகளின் இதர வருமானங்களை விவசாய வருமானத்துடன் கூட்டி, உயர்ந்த வரி விகிதப்படி வசூலிப்பது அநீதியாகும். அரசியல் சட்டசபை ஷரத்துக்களின்படி இவ்வாறு சேர்க்கப்படுவது சட்ட விரோதம், தவிர்க்கப்பட வேண்டியது என்றுகூட ஒரு அங்கத்தினர் எடுத்துக் காட்டினார். வரிக் கமிஷன்கூட இம்மாதிரி சிபாரிசு செய்திருப்பதாகத் தெரியவில்லை.

* * *

விவசாயிகள் வேறு வருமானத்தை நாடுவது ஏன் என்பதையும் கவனிக்க வேண்டும். விவசாயம் லாபகரமான தொழிலாக இல்லாததால்தான், தங்களுடைய வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள இதர துறைகளில் விவசாயிகள் ஏதாவது வகைசெய்து கொள்ளுகின்றனர். எனவே, அதற்கும் சேர்த்து வரி வசூலிப்பது முறையாகாது.

வரி விலக்கு சம்பந்தமாகவும் ரூபாய் 3000 வரம்பு மிகவும் குறைவு என்றே கூற வேண்டும். மற்றத் துறைகளில் ரூ. 3000 வரையில் வருமான வரிக்கு விலக்களிக்கப் பட்டிருப்பதைக் கருத்தில் கொண்டு இதை ஒருகால் நிச்சயித்திருக்கலாம். ஆனால் இதர தொழில்களும் விவசாயமும் ஒரே விதமான தொழில்களல்ல. விவசாயத்தின் தரமே மாறுபட்டது. இதில் முதலீடு செய்வது லாபத்தை மட்டும் கருத்தில் கொண்டல்ல. கண்ணியமுடன், குறைந்த பட்ச வாழ்க்கையேனும் அமைதியாக நடத்தலாம் என்ற எண்ணத்தினாலேயே இத்தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர் பலர். அவர்களெல்லாரும் முக்கியமாக மத்தியதரக் குடும்பத்தினர்தாம். இப்பகுதியினர் ஏற்கெனவே பல வழிகளில் அநேக இன்னல்களுக்கு ஆளாகி, வாழ்க்கை நடத்துவதே கஷ்டமாகிக் கொண்டு வரும் நிலைமையில்தானிருக்கின்றனர். இவர்கள் தலையில்தான் இப்புது வரியான விவசாய வருமான வரியின் சுமை விழும். இதை உணர்ந்தே ஒரு அங்கத்தினர், வரி விலக்கு 5,000 ரூபாய்க்கு உயர்த்தப்பட வேண்டும் என்று கூறினார்.

குறைந்த நிலங்கள் வைத்திருப்போர் விஷயத்தில் சரிவரக் கணக்கு வைத்துப் பரிசீலனை செய்யப்படுவதைத் தவிர்க்க, விவசாய வருமான வரியை, 'கம்பவுண்ட்' செய்து, அதாவது, இருசாராரும் ஒப்புக்கொள்ளும் தொகையைக் கட்டிவிடச் சலுகையளிக்கப்படும் என்று நிதிமந்திரி விளக்கினார். இதில் அதிகாரிகளுடைய அட்டகாசத்துக்கு எவ்வளவு இடமிருக்கிறது என்பது சொல்லாமலே விளங்கும். ஏற்கெனவே விற்பனை வரி சம்பந்தமாக அதிகாரிகளின் தொல்லைகளுக்காளான பல சிறு வர்த்தகர்களின் பரிதாபகரமான நிலை எல்லோரும் அறிந்ததே. பல வருஷ காலமாக இத் தொல்லைகளை அனுபவித்த பின்னர், இப்போதுதான் அவற்றுக்கு ஒரு வகையில் நிவாரணமும் கிடைக்க வழியேற்பட்டிருக்கிறது. இப்போது அம்மாதிரி தொல்லைகள் விவசாயிகள் விஷயத்திலும் ஆரம்பமாகும். ஏனெனில், சென்னை ராஜ்யத்திலுள்ள நிலச் சொந்தக்காரர்களில் 70 சத வீதம் சிறு நிலச்சுவான்தார்கள்தான். அவர்கள் பெரும்பாலும் இவ்வரிக்கு உள்ளாகாதவர்களாகவே இருப்பார்கள். அவர்கள் நிகர வருமானம் வருஷத்துக்கு ரூ. 3000க்கு உட்பட்டேதானிருக்கும். ஆனாலும் இதை நிரூபிக்கக் கணக்கு வைத்துக் காட்டித்தானே ஆக வேண்டும். குத்து மதிப்பாகக் குறைந்த வருமானமுள்ளவர்கள் தானென்றால், அதிகாரிகள் ஒப்புக்கொள்ள வேண்டுமல்லவா? அவர்களுடைய அதிகார வேட்டைக்கும் லஞ்ச ஊழல்களுக்கும் விவசாயிகள் இவ்வரியின் மூலம் இலக்காகத்தானே வேண்டும்?

இதன் விளைவாக ஏற்படக்கூடிய மற்றொரு விபரீதம், உணவு உற்பத்தியில் உண்டாகக் கூடிய பாதகமான நிலையாகும். ஏற்கெனவே இயற்றப்பட்ட 60-40 விகித சட்டத்தினால், விவசாய நிலங்களில் முதலீடு செய்வது குறைந்து விட்டது. ஐக்கிய குடும்பங்களும், நிலங்களைக் குடும்பத்தினர்களுக்குள் பங்கீடு செய்வதால், பெரிய விஸ்தீரணமுள்ள நிலங்கள் சிறிய நிலங்களாக மாறிவருகின்றன. இதனால் உற்பத்தி பாதிக்கப்பட்டே தீரும்.

இது சம்பந்தமாக, சமீபத்தில் திரு க. சந்தானம் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தில் கூறியது கவனிக்கத் தக்கது. "60-40 விகிதத்தைச் சட்டமாக்கிய அதிகாரிகள், இதனால் ரயத்வாரி பட்டாதார்கள் தங்கள் நிலங்களின் அபிவிருத்தியில் சிரத்தை குறைந்து, தங்கள் வருஷ வருமானத்தில் கணிசமான பகுதியை எருவுக்காகவும், விதைக்காகவும், பண்படுத்துவதற்காகவும் செலவிடுவதும் குறைந்து வரும் என்பதையும் உணர்ந்திருக்க வேண்டும். இதற்கு மாறாக, பயிரிடுபவருடைய பங்கில் அதிகமாக வழங்கிய 20 சத வீதத்தை அவருக்கு உடனடியாக அளிக்காமல் விதைக்காகவும், எருவுக்காகவும், நிலச் சீர்திருத்தத்துக்காகவும் ஒதுக்கி வைத்திருந்தால், விவசாயம் எவ்வித இடையூறுமின்றி நடைபெறும்" என்று கூறியிருக்கிறார். அவர் கூறியவற்றில் பொதிந்துள்ள உண்மையை அனைவரும் ஒப்புக் கொள்ளுவர்.

விவசாய வருமான வரி எவ்வகையிலும் விதித்தேதான் ஆகவேண்டுமென்று வந்துவிட்டால், இதற்கான மசோதா சட்டசபை அங்கத்தினர்களைக் கொண்ட பரிசீலனைக் கமிட்டியிலாவது இதன் ஆட்சேபகரமான அம்சங்கள் விவாதிக்கப்பட்டு நீக்கப்பட வேண்டும். கீழ் சபையிலும் மேல்சபையிலும் நடந்த விவாதத்தின்போது அங்கத்தினர்கள் தெரிவித்த அபிப்பிராயங்களையும் அரசாங்கம் ஏற்று, நாட்டின் நலம் கருதிக் குறைகளை நிவர்த்திக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

# அருள் வாக்கு

நாடகங்கள் த்ருச்ய (பார்க்கப்படும்) காவியங்கள் என்ற வகையைச் சேர்ந்தவை. கருத்துக்களைப் புத்தகங்களில் விளக்குவதைவிட நாடகங்களாக நடித்துக் காட்டினால், பார்ப்பவர்கள் மனத்தில் இன்னும் நன்றாகப் பதிகின்றன. இதனால்தான் காளிதாஸன், பாஸன், பவபூதி போன்ற மஹா கவிகள் நாடகங்கள் எழுதியிருக்கின்றனர்.

இப்பொழுது சினிமா வந்திருப்பதால் ஒரு நாடகத்தை ஒருமுறை நடித்தால் போதும். அதை சினிமாப் படமாக எடுத்துப் பன்முறை காட்டலாம். நடிகர்கள் நாடகத்தைத் திரும்பத் திரும்ப நடிக்க வேண்டியதில்லை.

ஒவ்வொரு நாடகத்திலும் நவரஸங்களும் பல்வேறு அளவுகளில் கலந்திருக்கும். ஆனால் ஒவ்வொரு நாடகத்திலும் ஒவ்வொரு ரஸமே பிரதானமாக இருக்கும். ''மஹா வீர சரித்திர''த்திலும் ''வேணி ஸம்ஹார''த்திலும் வீர ரஸம் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. இதேபோல் மற்ற நாடகங்களில் சோகம், ஹாஸ்யம் முதலிய ரஸங்கள் பிரதானமாக விளங்குகின்றன. இந்த ஒன்பது ரஸங்களில் கடைசியாக உள்ளதும், உன்னதமாக விளங்குவதும் சாந்த ரஸமாகும். மற்ற ரஸங்கள் மனத்தில் பரபரப்பும் விகாரமும் ஏற்படுத்தக் கூடியவை. மனத்தின் அமைதிக்கும் ஆனந்தத்துக்கும் அவை உதவி புரிவதில்லை. ஆனால் சாந்த ரஸம் மனத்துக்கு அமைதி யூட்டுகிறது. ''சாந்தமு லேக ஸௌக்யமு லேது'' என்று தியாகராஜர் பாடியிருப்பதுபோல், மனத்துக்குச் சாந்தமில்லையானால் சந்தோஷமில்லை. இதனால்தான் சாந்தம், மற்ற ரஸங்களைப்போல் பரபரப்பூட்டும் தன்மையதாக இல்லாதபோதிலும், இது ஒரு ரஸமாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. வெண்ணெயின் தெவிட்டாத மதுரச் சுவையை இதற்கு ஒப்பிடலாம்.

சிருங்காரம் (காதல்), வீரம், சோகம், பீபத்ஸம் (அருவருப்பு), ரௌத்ரம் (கோபம்), பயானகம் (பயம்), ஹாஸ்யம் முதலிய ரஸங்களைச் சித்திரிக்கும் நாடகங்கள் பல இருக்கின்றன. ஆனால் சாந்த ரஸத்தைப் பிரதானமாகக் கொண்ட நாடகங்கள் அதிகமில்லை. தற்கால நாடகங்களுக்கு இது அதிகம் பொருந்தும். தற்கால நாடகங்கள் உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு, அவற்றைச் சமனப்படுத்தாமலே விட்டுவிடுகின்றன. காமம், குரோதம் முதலிய உணர்ச்சிகளை இவை பயன்படுத்திக் கொண்டு மனிதத் தன்மையை இழிவுபடுத்தி விடுகின்றன. நவீன நாடகங்களில் ஒன்றுவது சாந்த ரஸத்தைப் பிரதானமாகக் கொள்ளவில்லை.

சாந்தரஸத்தையே முக்கியமாகக் கொண்ட புராதன நாடகம் ஒன்று உள்ளது. அது ''ப்ரபோத சந்திரோதய'' நாடகம். மேடையில் நடிக்கப்படும் நாடகங்கள் மனத்தைக் கெடுக்காமல், மன நிலையை உயர்த்துவதாக இருக்க வேண்டும். பார்ப்பவர்களின் மனத்தில் பரபரப்பூட்டும் உணர்ச்சிகளை எழுப்பி விடாமல் அவர்கள் மனத்தில் சாந்தி நிலவச் செய்யவேண்டும்.

ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடிபீடம்

# விற்பனை வரிச் சீர்திருத்தங்கள்

சென்ற மார்ச்சு முதல் தேதியன்று சென்னை சட்டசபையில் ராஜ்ய பட்ஜெட்டைச் சமர்ப்பித்துப் பேசுகையில் நிதி மந்திரி திரு. சி. சுப்பிரமணியம், டாக்டர் லோகநாதன் செய்துள்ள விற்பனைவரி சிபார்சுகளைப் பரிசீலனை செய்து ஒரு விரிவான மசோதா தயாராகிக் கொண்டிருக்கின்றதென்று தெரிவித்தார். இம் மசோதா இவ்வாரத்திய கெஜட்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. இம் மசோதாவில், டாக்டர் லோகநாதன் செய்துள்ள சிபாரிசுகள் பெரும்பாலும் இணைக்கப்பட்டுள்ளன. முக்கியமாக ரூ. 25,000 வரையில் வியாபாரம் செய்பவர்கள் விஷயத்தில் விரிவாகக் கணக்கு வைத்துக் கொள்ளும் நிர்ப்பந்தத்தைத் தவிர்த்து, உத்தேச மதிப்பின்படி மொத்தமாக வரி செலுத்த அவர்கள் இனி அனுமதிக்கப்படுவார்கள். இது போற்றத்தக்க ஒரு செய்கையாகும். இதற்காக ராஜ்ய அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம்.

*

சென்னை ராஜ்யத்தில் அமுலிலிருக்கும் விற்பனை வரி விஷயத்தில் முக்கியமாக ஒரு குறைபாடு அடிக்கடி எடுத்துக் காட்டப்பட்டது. சில்லறை வியாபாரிகளுக்கும் குறைந்த அளவு விற்பனையுள்ள கடைக்காரர்களுக்கும், சரிவரக் கணக்கு வைத்துக் கொள்ள முடியாததால், விற்பனை வரி இலாகா அதிகாரிகளிடமிருந்து ஓயாது ஏற்படும் தொல்லைகளைப் பற்றிக் குறை கூறப்பட்டு வந்தது.

வரி அமைப்பு முறையிலும் நிர்வாகத்திலுமுள்ள இரண்டு குறைபாடுகளையும் பரிசீலனை செய்து எவ்விதம் பரிகாரம் அளிக்க முடியும் என்பதை ஆராய டாக்டர் லோகநாதனைச் சென்னை ராஜ்ய சர்க்கார் கேட்டுக் கொண்டார்கள். அவர் சமர்ப்பித்துள்ள சிபாரிசுகள் இவ்விரண்டு அம்சத்திலும் ஓரளவுக்குக் குறைகளை நீக்கும் வகையில் அமைந்திருக்கின்றன.

வரி அமைப்பு விகிதம் சம்பந்தப்பட்ட வரையில் ஒரு முனை வரி விதிக்கப்படும் பண்டங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தி, வரி விகிதத்தையும் உயர்த்தியிருக்கிறார். பலமுனை வரி விதிக்கப்படும் பண்டங்களின்மீது வரி விகிதத்தைக் குறைத்தும், சிபாரிசுகள் செய்யப்பட்டிருக்கின்றன. இவற்றின் மூலம் ராஜ்ய அரசாங்கத்துக்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் வருமானம் சிறிதேனும் குறையாத வகையிலே தான் வரி விகிதங்கள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் பொது மக்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவர்களுக்கு அநுகூலம் ஒன்றுமில்லை. ஒரு கோடி ரூபாய் அதிகம் கொடுக்கவேண்டியிருந்தாலும் இருக்கலாம். அரசாங்கத்துக்கு நஷ்டம் ஒன்றுமில்லை. ஏனெனில் இப்போது கிடைத்துக் கொண்டிருக்கும் வருவாய்க்குப் பஞ்சமில்லை.

ஆனால் குறிப்பிட்ட சில பண்டங்களின்மீது ஒரு முனை வரி விகிதம் கணிசமான அளவுக்கு உயர்த்தப்பட்டிருப்பது அந்தந்தப் பொருளை உபயோகிப்போர்களுக்கு விலை உயர்வு மூலம் கஷ்டம் விளைவிக்கும். வீடு கட்டுவதற்கு உபயோகமாகும் செங்கல், ஓடுகள்மீது மூன்று சத விகிதமும், சிமிட்டிமீது ஐந்து சத விகிதமும் விதிக்கப்பட்டுள்ள வரி வீடு கட்டுபவர்களைக் கவலையிலாழ்த்தும். வனஸ்பதியின் மீதும் மருந்துகள் மீதும் ஆறு சதம் வரியும் சாதாரண மத்தியதரக் கீழ்த்தரக் குடும்பத்தினர்களுக்குக் கவலைதரும். இம்மாதிரி விஷயங்களைக் கவனித்து, சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கையில், வரி விகிதத்தையும் இவ்வளவு உயர்வாக விதிக்க வேண்டுமா என்பதையும் சர்க்கார் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

# பிரச்னை தீரக் குறுக்கு வழி!

இலங்கையில் இந்தியர்கள் சட்டவிரோதமாகக் குடியேறுவதாகவும், அதனால் இலங்கை சர்க்கார் மிகுந்த கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காக வேண்டியிருக்கிறதென்றும் இலங்கை அரசாங்கப் பிரமுகர்கள் முன்பு அடிக்கடி கூறி வந்தனர். இவ் விஷயத்தில் இந்திய சர்க்கார் தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொண்டார்கள். பல மாதங்களுக்கு முன்பே கள்ளக் குடியேற்றப் பிரச்னை பெரிதும் தீர்ந்து விட்டது எனலாம். ஆனால் இலங்கை இந்தியர் பிரஜா உரிமை சம்பந்தமாக இலங்கை சர்க்கார், இந்தியாவுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை, இரண்டு வருஷங்களுக்கு மேலாகியும், நிறைவேற்ற முன் வராதது மிகவும் வருந்தத்தக்கதாகும்.

இந்நிலையில் இந்தியர் பிரச்னை தீர இலங்கைப் பிரமுகர்கள் இப்போது சில 'அற்புதமான' குறுக்கு வழிகளைக் கண்டு பிடித்துக் கூறத் தொடங்கியிருக்கிறார்கள். இலங்கையில் சட்டவிரோதமாகக் குடியேறும் இந்தியர்களைக் கண்ட இடத்தில் சுட்டுத் தள்ளிவிட வேண்டுமென்று, இலங்கை வர்த்தக மந்திரி ஸ்ரீ ஆர். ஜி. சேனநாயகா முன்பு பார்லிமெண்டில் கூசாமல் கூறினார். இலங்கைத் தொழில் மந்திரி ஸ்ரீ இலங்க ரத்னா தோட்டங்களில் உள்ள இந்தியத் தொழிலாளர்களை இலங்கையிலிருந்து விரட்டுவதற்கு ஒரு குறுக்கு வழியைக் கண்டு பிடித்திருக்கிறார். அவர்களுக்கு வேலை கொடுக்க மறுத்துப் பட்டினி கிடக்கும்படி செய்து விட்டால், அத்தொழிலாளர்கள் பசி பொறுக்க முடியாமல், தாங்களாகவே இந்தியாவுக்கு ஓடிவிடுவார்கள் என்ற யோசனையைக் கூறியிருக்கிறார். இந்தியர்களைச் சுட்டுத் தள்ளுவதாலோ, பட்டினி போட்டு விரட்டுவதாலோ அவர்கள் பிரச்னை தீர்ந்து விடாது. நீதியையும் ஜனநாயகப் பண்பையும் அடிப்படையாகக் கொண்டு இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை அளிப்பது தான் இலங்கை இந்தியர் பிரச்னை நிரந்தரமாக, சுமுகமாகத் தீருவதற்கான ஒரே வழி என்பதை நாலாவது தடவையாக வற்புறுத்திக் கூற விரும்புகிறோம்.




தத்தம் தாய்மொழியை அவரவர்கள் காதலிப்பது இயற்கையாகும். உரிமையும்கூட. தமிழர் தமிழைத் தம் அன்னையாக பூஜிக்கிறார்கள். ஹிந்தியரும் அதைப்போலவே ஹிந்தியை மிகவும் கௌரவிக்கின்றனர். இதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. தமிழைப்போலவே ஹிந்தியும் கலைமகளின் வாச மலர்களில் ஒன்று. ஆனால் தமிழர் தமிழைப் போற்றுவதற்கும் ஹிந்தியர் ஹிந்தியைப் போற்றுவதற்கும் இடையில் ஒரு வித்தியாசம் தற்போது ஏற்பட்டிருக்கிறது. தமிழர் தமிழைப் பாரத சிம்மாசனத்தில் வைக்க வேண்டும் என்று ஆசைப்படவில்லை. ஹிந்தியர் தம் தாய்மொழியைப் பாரத அரியாசனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்கிறார்கள். இதற்குத்தான் நம்முடைய ஆட்சேபனை.

பாரத சிம்மாசனம் என்பது பாரத நிருவாகச் சின்னம். அந்த நிருவாகம் ஒரு மொழியாளருக்கு மட்டும் உரிமையானதல்ல. பாரத தேசத்தில் சேர்ந்துள்ள எல்லா ராஜ்யங்களுக்கும் சம உரிமை. அதில் பெருந்தொகை சிறு தொகை என்று பிரித்து, சிறு தொகையாளரை மட்டரகமாக வைப்பது அநீதியும் அவிவேகமுமாகும்.

அந்த அந்த ராஜ்யம் அந்த அந்த ராஜ்யத்துக்குரித்தான தாய்மொழியைக் கொண்டு நிருவாகம் நடத்த வேண்டும். பரஸ்பர வேலைகள் ஆங்கிலத்தில் தற்போதைப் போலவே நடந்து கொண்டு போக வேண்டும். இவ்வாறு நடத்துவதே பாரபட்சமற்ற முறையாகும். இதை விட்டு விட்டு வடநாட்டு மொழியை மத்திய ஆட்சி மொழியாக அமைத்துக் கொள்ளுவது பட்சபாதமாகும். தென்னாட்டவருக்கும் மற்ற நாட்டவருக்கும் அநீதி இழைப்பதாகும். ஒற்றுமைக்கு பங்கம் விளைவிப்பதாகும்.

தமிழில் நடத்தக்கூடியதையெல்லாம் தமிழில் நடத்துவோம். தமிழில் நடத்தாத காரியங்களை ஆங்கிலத்தில் நடத்த வேண்டும், ஹிந்தியில் வேண்டாம் என்பது நம்முடைய கட்சி.

தமிழன்பர்கள் சிலர் குழப்பப்படுவதால் இதைத் தெளிவாகச் சொன்னேன்.

ஆங்கிலம் அன்னிய பொருள், அது நமக்கு வேண்டாம் என்பது மடமை. நம்முடைய பொது நிருவாகத்திலும் குடும்ப நிருவாகத்திலும் அன்னிய பொருள், அன்னிய அறிவு, அன்னிய வழக்கங்கள் அறவே ஒழிப்பது சாத்தியமா? சாத்தியமாயினும் விவேகம் ஆகுமா? அன்னிய ஆதிக்கத்தை ஒழித்தால் போதும்; அதை ஒழித்தோம். ஆயினும் ஆங்கிலக்கூட்டுறவுக்குச் சின்னமாகிய காமன்வெல்த்தைக் கூட நாம் விட்டொழிக்க வில்லை. அப்படியிருக்க ஆங்கில பாஷையை வெறுப்பதில் ஒரு பொருளுமில்லை.

'பாரத நாடு முன்னேற்றம் அடைய வேண்டுமானால் ஹிந்திச் சுவர் எழுப்பி இந்தியாவை வேறுபடுத்திக் கொள்ளுவது வழியாகாது. ஆங்கிலம் நம்மைப் பொருத்தளவு புத்தறிவுக் களஞ்சியமாகும். ஆங்கிலம் ஒன்றே உலக மொழியல்ல, பிற பாஷைகளும் உண்டு என்று சிலர் ஞாபகம் ஊட்டுகிறார்கள். இது ஒரு சமாதானமாகாது. வேறு மொழிகள் கற்பவர்கள் கற்றுக்கொள்ளலாம். ஆங்கிலத்தை விட வேண்டாம் என்றுதான் நாம் சொல்லுவது. கேந்திர நிருவாகம் ஒன்றே பிரச்னை. அது எந்த மொழியிலிருக்க வேண்டும் ,என்பதே கேள்வி. இதை மற்ற விஷயங்களோடு குழப்புவது தவறு.

ஜனவரி மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற

**“பொய்யும் மெய்யானால்....!”**

என்னும் கதை அடுத்த இதழில் பிரசுரமாகிறது.

பரிசு பெற்றவர் : ஸ்ரீரங்கம் நரசிம்மன்,

108, அம்மா மண்டபம் ரோட், ஸ்ரீரங்கம்: திருச்சி.

★ கல்வித் துறையில் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் பெரியோர்கள் பலர் நம் பாரதத்தில் தோன்றி, கல்விக்கே ஒரு அணிகலன் எனும்படி வாழ்ந்து வருகின்றனர். அப்படிப்பட்ட பெரியார்களுள் மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த திரு கே. சம்பத்கிரி ராவ் ஒருவர். கோலார் ஜில்லாவில் பிறந்து, தொண்டை மண்டலத்தைச் சேர்ந்த காஞ்சீபுரம் பள்ளியில் பயின்று, சென்னை கிறிஸ்துவக் கல்லூரியில் இலக்கியத்தில் ஆனர்ஸ் பட்டம் பெற்றார். பெங்களூரில் லண்டன் மிஷன் உயர் பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி, தேசியக் கல்லூரியில் போதகாசிரியராகச் சேவை புரிந்தார். அக் கல்லூரியின் பிரின்ஸிபலாகவும் பல ஆண்டுகள் பணியாற்றி யிருக்கிறார். கல்வித் துறையில் மட்டுமல்ல, பல்வேறு துறைகளிலும் ஈடுபாடு உள்ளவர். காந்தீயத்தில் உறுதியான பற்றுள்ளவர். சிலகாலம் 'திரிவேணி' என்னும் ஆங்கில இலக்கிய சஞ்சிகைக்கு ஆசிரியர் பதவி ஏற்றுத் திறம்பட நிர்வகித்தார். மைசூரில் ஸ்ரீ ஹனுமந்தய்யா திவானாக இருந்த காலத்தில் மேல் சட்டசபைக்குத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். சமீபத்தில் திரு சம்பத்கிரி ராவ் பீஹார் ராஜ்யத்திலுள்ள ரான்சி பொதுப் பள்ளிக்குத் தலைவராகப் பதவி ஏற்று ஒரு புனிதமான பணியை மேற்கொண்டிருக்கிறார். அவருடைய படத்தைத் தான் இவ் வாரக் 'கல்கி' அட்டையில் மகிழ்ச்சியுடன் வெளியிட்டிருக்கிறோம். அவருடைய நெடுநாளைய நண்பர் ஸ்ரீ நவரத்ன ராமராவ் அவர்கள் மனமுவந்து அனுப்பியுள்ள சிறப்புரையையும் கீழே பிரசுரித்திருக்கிறோம்.

— ஆசிரியர்

# இதோ ஒரு பெரிய மனிதர்!

**நவரத்ன ராமராவ்**

பீஹார் ராஜ்யத்தில் ரான்சி என்னும் நகரத்திலுள்ள பொதுப் பள்ளிக்குத் தலைவராகப் பதவி நியமனம் பெற்ற எனது நண்பர் ஸ்ரீ கே. சம்பத்கிரி ராவ் அப் பதவியை ஏற்கச் சமீபத்தில் பெங்களூரிலிருந்து புறப்பட்டுச் சென்றார். நகரின் பல பகுதிகளிலிருப்பவர்களுக்கும் பலதரப்பட்ட மக்களுக்கும் அப் பெரியவரிடத்தில் தாங்கள் வைத்திருந்த அன்பையும் கௌரவத்தையும் வெளிக்காட்ட இந்தச் சந்தர்ப்பம் ஒரு வாய்ப்பாக இருந்தது. மக்களது அன்பை இவ்வளவு தூரம் தாம் கவர்ந்திருந்ததைக் கண்டு ஸ்ரீ ராவ் அவர்களே ஒருகால் ஆச்சரியமடைந்திருக்கலாம். ஆனால் அவரை நன்குணர்ந்து பழகியவர்களுக்கு இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை.

ரான்சி பொதுப் பள்ளித் தலைவர் பதவிக்கு இவரைவிடச் சிறந்த அபேட்சகரைத் தேர்ந்தெடுக்க முடியாதென்றே கூறலாம். இங்கிலாந்தில் ரக்பி பொதுப் பள்ளியின் சிறப்புக்கும் பெருமைக்கும் எவ்வாறு தாமஸ் ஆர்னல்ட் என்னும் அறிஞர் பணியாற்றினாரோ, அவ்வாறே ரான்சி பொதுப் பள்ளியின் உயர்வுக்கு ஸ்ரீ சம்பத்கிரி ராவ் சேவை புரிவார் என்பதில் ஐயமில்லை. ஆர்னல்டின் மேற்பார்வையில் ரக்பி பொதுப்பள்ளி ஒரு தலைசிறந்த கல்விக்கூடமாக மட்டும் விளங்கவில்லை. சமயப் பண்பாட்டிலும், ஒழுக்கத்திலும், அறிவுத் துறையிலும் பிள்ளைகளை நன்கு நிலைக்கச் செய்வது; பிற்காலத்தில் வாழ்க்கையில் மாணவர்கள் மேற்கொள்ள வேண்டிய கடமைகளையும் பொறுப்புக்களையும் சரிவரக் கற்கச் செய்வது; எதிர்ப்படும் இன்னல்களைச் சமாளித்துத் திடத்துடன் நடந்து கொள்ளுவதற்கு ஏற்றவாறு மாணவர்களை உருவாக்குவது; ஆகியவற்றில் மிகுந்த கவனம் செலுத்தினார்கள் என்பது பிரசித்தமானது. ரக்பி பொதுப் பள்ளி மாணவன் என்றாலே ஒரு தனிச் சிறப்பு.

சிறுவர்களின் அறிவைச் சீரிய முறையில் வளர்த்து அவர்களின் நடத்தையைப் பண்பாட்டுக்குட்பட்டு உருவாக்குவது ஒரு புனிதமான பணி. எல்லோராலும் இப் பணியை மேற்கொள்ள முடியாது. அதற்கென அநுபவமும் ஆற்றலும் வேண்டும். இயற்கையிலேயே அமைந்த நற்பண்புகளும் இன்றியமையாதவை. இவையனைத்தும் ஒருங்கே அமையப் பெற்ற சில பேர்களில் ஸ்ரீ சம்பத்கிரி ராவ் ஒருவர். அவருடைய நிர்வாகச் செயல் திறனுக்கும், தம்முடைய தனித்திறனையும் லட்சியங்களையும் தாம் எடுத்துக் கொண்ட எல்லாக் காரியங்களிலும் பதிவுற நிலைக்கச் செய்யும் சாமர்த்தியத்துக்கும் ஒரு சின்னம் போல் விளங்குகிறது பெங்களூரிலுள்ள தேசியக் கல்லூரி. இது முதலில் தேசீய உயர்தரப் பள்ளியாகத்தான் ஆரம்பமாயிற்று. இதன் தலைமை ஆசிரியர் பதவி கூட ஆசிரியர்களுக்குள்ளேயே மாறி மாறி வகிக்கப்பட்டது. ஜனநாயகக் கோட்பாடுகளில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட ஸ்ரீ ராவ் இப் பள்ளியின் நிர்வாகத்திலும் இக் கோட்பாடுகளைப் புகுத்திவிட்டார். எல்லா உபாத்தியாயர்களுடைய அங்கீகாரத்தின் பிறகு தலைமை ஆசிரியர் பதவி அவர்களுக்குள் ஒருவர் பின் ஒருவராக மாறி மாறி வகிக்க ஏற்பாடு செய்திருந்தார். தாமே பலவருஷங்கள் தலைமை ஆசிரியர் பதவி வகித்தாலும், அவர் சாதாரண உபாத்தியாயராகப் பதவி வகித்த இடைக்காலம்பல உண்டு.

இப்பள்ளி படிப்படியாக முன்னேறி, இரண்டாம் படிவக் கல்லூரி, பிறகு முதற்படிவக் கல்லூரி என்று உயர்ந்த போது, இதற்குப் பிரின்ஸிபால் பதவியும் இவரையே வந்தடைந்தது. காலஞ் சென்ற மகாகனம் வி. எஸ். சீனிவாச சாஸ்திரியார் அவர்கள் இவரைப் பற்றி ஒரு சமயம், குறிப்பிட்டபோது, "தலைமை ஆசிரியர்களுக்குள் இவர் ஒரு இளவரசர்" என்று கூறினார். இவ்விளவரசர் பிரின்ஸிபால் என்னும் அரசுரிமை எய்தியது முறைப்படியேதான் இருந்தது.

இப்பள்ளியைப் பற்றியும் கல்லூரியைப் பற்றியும் நினைக்கும்போது சரித்திரப் புகழ் பெற்ற சம்பவம் ஒன்று கவனத்துக்கு வரு

கிறது. பிரான்சு தேசத்தை அரசாண்ட பதினான்காவது லூயி மன்னர் மிகுந்த தற்பெருமையுடன், ''பிரஞ்சு ராஜ்யமா? நான்தான் பிரஞ்சு ராஜ்யம்'' என்று கூறினாராம். அதே பெருமையுடன், ''தேசியக் கல்லூரியா? நான் தான் தேசியக் கல்லூரி'' என்று இதைப் பற்றி ஸ்ரீ ராவ் கூறியிருந்தால் அது மிகையாகாது. அது முற்றிலும் உண்மையே. ஆனால் மிகுந்த தன்னடக்கம் வாய்ந்த ஸ்ரீ சம்பத்கிரி ராவிடம் அத்தகைய தற்பெருமையைக் கருத்திலகூடக் காணமுடியாது.

ஸ்ரீ சம்பத்கிரிராவ் உயர்ந்த கல்விமான். போதனை ஆற்றலையும் சக்தியையும் இயற்கையாகவே பெற்றவர். இத்துறையில் வெற்றி பெற்று முன்னணிக்கு வந்திருப்பவர். ஆனால் ஆசிரியர் வேலையோடு மட்டும் அவருடைய ஆற்றல்கள் நின்று விடவில்லை. அவருடைய அக்கறையை சார்ந்த விஷயங்களும் பள்ளிக் கூடத்துக்குள்ளேயே அடங்கிவிட வில்லை. அவர் பன்மொழி பயின்ற புலவர். மொழி இலக்கியங்களில் உயர்ந்ததெனக் கருதப்படும் தமிழ், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், கன்னடம், தெலுங்கு அனைத்தும் அவருடைய விசால அறிவுக்குட்பட்டவையே. இதைத் தவிர இந்தி மொழியிலும் கணிசமான அளவுக்கு ஞானமுள்ளவர். தெற்குப் பிராந்தியத்தில் ஹிந்தியைப் பரப்புவதற்காக முதன் முதலில் பணியாற்றியவர்களுள் ஸ்ரீ ராவும் ஒருவர். கன்னட சாகித்ய பரிஷத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளவர். அதனுடைய லட்சியங்களை நிறைவேற்றி வைக்கப் பல இடங்களுக்கு அலைந்து திரிந்து உழன்றவர். ராஜாஜி அவர்களுடைய இலக்கியங்களில் பெரும்பாலானவற்றைக் கன்னடத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். சம்பிரதாயங்களால் சூழப்பட்ட பல்வேறு துறைகளிலும் கூடப் புதுப்புது முறைகளைப் புகுத்திப் பரீட்சை பார்ப்பதற்கு அஞ்சாதவர். அவர் எடுத்துக்கொண்ட எந்த நடவடிக்கையிலும் அவருடைய பரந்த மனப்பான்மையும், புதுமைப் போக்கும், முன்னேற்ற ஆர்வமும் பிரதிபலிக்கும்.

ஸ்ரீ சம்பத்கிரி ராவின் திறமை பலவகைகளில் செயல்படும் தன்மையுடையது. அவருடைய அறிவாற்றலோ அவர் எடுத்துக் கொண்ட எந்தக் காரியத்தையும் சிறப்பிக்கச் செய்யும் சக்தி வாய்ந்தது. அவர் ஒரு பத்திரிகை எழுத்தாளராக இருந்திருக்கிறார். அரங்கங்களில் நடிகராகப் பெயர் வாங்கியிருக்கிறார். சுருக்கெழுத்து எழுதுவதில் உயர்தரத்தைச் சேர்ந்தவர். ஏன், அவர் ஒரு அரசியல்வாதியாகக்கூட இருந்திருக்கிறார். ஆனால் சத்தமிடும் கட்சி வாதிகள் கூட்டத்தைச் சேர்ந்தவரல்ல. பெங்களூரில் செயல்புரிந்து வரும் கோகலே பொது அலுவல் கழகத்தை நிறுவியவர்களுள் இவரும் ஒருவர். மக்களை நெறியுள்ள உயர்ந்த பிரஜைகளாக்க ணக்கமுடன் வேலை செய்து வரும் இக்கழகத்துடன் ஈடுபாடு உள்ளவர். இவ்வாறு பலதரப்பட்ட நடவடிக்கைகளினால் மைசூர் ராஜ்யத்தில் இவருடைய பெயர் வீட்டுக்கு வீடு ஒலிப்பதில் ஆச்சரியமில்லை. மைசூரில் மட்டுமில்லை, தென்னிந்தியா முழுதிலும் இவர் நன்கு அறிமுகமானவர். நான் கேட்டவர்களுள் ஆங்கிலத்திலும் கன்னடத்திலும் ஆற்றலுடன் பேசும் திறமையுள்ளவர்களில் இவர் தலை சிறந்தவர்.

மனிதப் பண்பு மிகவும் நிரம்பியவர். எல்லாருடனும் அன்புடன் பழகுபவர். ஆடம்பரமில்லாத எளிய சுபாவமுள்ளவர். இதனால்தானோ என்னவோ, ''இவர் மிகவும் சாது. போதுமான அளவு ஆணித்தரமாகப் பேசக்கூடியவரல்ல'' என்று சிலர் குறை கூறுவதுமுண்டு. ஆனால் தம் கொள்கையை நிலைநாட்ட, இவர் மிகுந்த வேகத்துடன் தம் கருத்தை வெளியிடக்கூடியவர் என்பதை நான் கண்டிருக்கிறேன். கொள்கையை நிலைநிறுத்தியபின் மற்றச் சில்லறை விஷயங்களில் கூச்சலிட்டுச் சத்த மிடுவதைவிட அடக்கத்துடனும் தனிவுடனும் இருப்பதே மேல் என்று நடந்து கொள்ளும் பண்புள்ளவர்.

உண்மையிலேயே ஒரு ''பெரிய மனிதர்'' என்பவர் எத்தன்மையுடையவர் என்பதை கார்டினல் நியுமென் என்னும் ஆங்கிலேய அறிஞர் ஒரு சமயம் விவரிக்க முயன்றார். எவர் தம்முடன் இருப்பவருக்கும் பிறருக்கும் மனம் புண்ணாகும்படியோ, விகார முண்டாகும்படியோ வார்த்தைகளை உதிர்க்க மாட்டாரோ, தம் முன்னிலையில் மற்றவர்கள் எப்போதும் சகஜமாகவும் உற்றார் உறவினருடனிருப்பது போல் பழகுவதையுமே எவர் கருத்தில் கொண்டிருப்பாரோ, சங்கோசமுள்ளவர்களிடம் கனிவுடனும், கசடர்களிடம் கருணையுடனும் எவர் எப்போதும் நடந்து கொள்ளுவாரோ, அவரே உண்மையில் 'பெரிய மனிதர்' என்கிறார்.

ஸ்ரீ சம்பத்கிரி ராவைப் பற்றிக் கூறும் போது மேற்சொன்ன கருத்துகள்தான் முன் நிற்கின்றன. இயற்கையிலேயே உருவான ''பெரிய மனிதர்'' ஸ்ரீராவ். அவரை நன்கு உணர்ந்த அன்பர்கள் பலரும், அவரை மேலும் மேலும் உணர்ந்து கொள்ளவே ஆசைப்படுவார்கள்.

பீஹார் ராஜ்யத்தில் அவர் மேற்கொண்டுள்ள பணி அவருக்கு மேலும் புகழைத் தேடித் தருவதாக! அவருடைய மேற்பார்வைக்குள்ளாகும் இந்தத் தலைமுறை மாணவர்களுக்கும் அவருடைய விலைமதிக்கவொண்ணாத அன்பும் ஆசிகளும் கிடைக்குமாக!

### ஒத்தாசை!

தாயார்:—உன்னிடம் ஓரணா வைத்திருக்காயே, ஏது காசு? யார் கொடுத்தாங்க?



சீனு:—நான் பாலுவுக்கு ஒரு ஒத்தாசை செய்தேன். அதற்காகக் கொடுத்தான், அம்மா!

தாயார்:—அவனுக்கு என்ன ஒத்தாசை செய்தாய்?

சீனு:—அவன் முதுகில் ஓங்கி ஓங்கி அடித்துக்கொண்டிருந்தேன். நிறுத்துன்னான்; நிறுத்திட்டேன்!

# தீவிரவாதிகளின் போக்கு!

கொழும்பு, மார்ச் 7வ.

இலங்கை இந்தியர்கள் சம்பந்தமாகப் பல முக்கியமான சம்பவங்கள் இவ்வாரம் இங்கு நடைபெற்றுள்ளன. பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகாவின் அரசியல் கட்சியான ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சியின் ஆறுவது வருடாந்திர மகாநாடு களனியில் நடைபெற்ற பொழுது சர்க்கார் கட்சியைச் சேர்ந்த பலர் இந்தியர்களைப் பற்றி நாவடக்க மில்லாமலும் கருணையின்றியும் தாறுமாறுகப் பேசுகிறார்கள். இலங்கையில் சட்ட விரோதமாகக் குடியேறுவதாய்க் கருதும் இந்தியர்களை யெல்லாம் கண்ட மாத்திரத்தில் கட்டுத் தள்ள வேண்டுமென்று வர்த்தக மந்திரி ஸ்ரீ ஆர். ஜி. சேனநாயகா முன்னொரு சமயம் பார்லிமெண்டில் பகிரங்கமாகவே சொன்னார். காட்டுமிராண்டித்தனமான இந்த யோசனையைக் களனி மகாநாட்டில் ஒரு அங்கத்தினர் திருப்பிச் சொல்லி அப்படிச் செய்தால் என்ன என்று பிரதமரிடம் கேட்டார்.

தொழில் மந்திரி ஸ்ரீ டி. பி. இலங்கரத்ன மேற்படி அங்கத்தினரையும் மிஞ்சிவிட்டார். வர்க்க பேதமில்லாமல் சகல வகுப்புத் தொழிலாளருக்கும் தொழிற் சங்க உரிமையளிக்க வேண்டுமென்று மகாநாட்டில் பேசிய தொழில் மந்திரி, இந்தியர்களுக்கு வேலை கொடுக்க ஏன் மறுக்கக்கூடாது என்று வினவினார். இந்தியத் தோட்டத் தொழிலாளரில் பலருக்கு ஏற்கனவே வேலையில்லை. மற்றவர்களையும் வயிற்றில் அடித்துப் பட்டினி போட்டால் பசி பொறுக்க மாட்டாமல் இந்தியாவுக்குப் பறந்து போய் விடுவார்களென்பது அவர் திட்டம். கருணையே உருவான புத்தர் பிரானின் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதாகக் கூறும் ஒரு நாட்டிலே உழைத்துக் கொடுக்கும் பாட்டாளி மக்களைக் கண்ட மாத்திரத்தில் கட்டுத் தள்ள வேண்டு மென்றும் பட்டினி போட்டுக் கொல்ல வேண்டு மென்றும் யோசனைகள் கூறப்படுவது விந்தையானது மட்டு மல்ல. விபரீதமானதும்கூட. பௌத்த தர்மத்துக்கும் மனித நீதிக்கும் இலங்கையின் பண்பட்ட கலாசாரத்துக்கும் இந்த யோசனைகள் எவ்வளவு தூரம் பொருத்தமானவைக ளென்பதைத் துவேஷம் தலைக்கேறிப்போன வகுப்பு வெறியர்கள் எப்படி உணர்ந்து கொள்ள முடியும்?

நல்ல வேளையாக, பிரதம மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா மனிதப் பண்பு மாறுமல் தீவிரவாதிகளின் வாயை அடைத்துப் பேசியது களனி மகாநாட்டில் ஒரு வரவேற்கத் தகுந்த அம்சம். பத்து லட்சம் இந்தியர்களைச் கட்டுத் தள்ளவோ, கடலில் அமுக்கவோ அல்லது பட்டினி போட்டுக் கொல்லவோ முடியாதென்றும் பொறுமையுடனேயே அவர்களுடைய பிரச்னையைத் தீர்க்க வேண்டுமென்றும் பிரதமர் சொன்னார். அதோடு இந்தியா சம்மதிக்கக் கூடியதும் சம்பந்தப்பட்ட ஜனங்களுக்கு அநீதி இழைக்காததுமான ஒரு சமரச முடிவு செய்வது அசாத்தியமல்ல வென்றும் அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

இலங்கை இந்தியர் பிரச்னையை விரைவில் தீர்த்து விடுவதாகச் சென்ற இரண்டு வருட காலமாக அவர் ஒரே பல்லவியைப் பாடி வருகிறாரே தவிர அதற்கு உருவான நடவடிக்கை எதையும் இது வரை அவர் எடுக்காதது இந்திய வட்டாரங்களுக்கு வருத்தத்தையும் கவலையையும் கொடுத்து வருகிறது. இந்தியப் பிரச்னையைப் பற்றிப் பேசும் பொழுதெல்லாம் முந்திய அரசாங்கங்கள் பிரச்னையைக் குழப்பிச் சிக்கலாக்கி விட்டதாகப் பிரதம மந்திரி குற்றம் சாட்டுகிறார். அந்தச் சிக்கலைத் தீர்க்க அவர் என்ன செய்திருக்கிறார் என்பதைப் பற்றிப் பேச்சேயில்லை.

* * *

இலங்கைப் பார்லிமெண்டில் தேசிய பிராவிடன்ட் நிதி மசோதாவைப் பற்றி விவாதம் நடந்த பொழுது அந்த நிதியில் நாடற்ற நிலைமையிலிருக்கும் இந்தியர்களைச் சேர்த்துக் கொள்ளக் கூடாதென்று தீவிரவாதிகள் காரசாரமாகப் பொழிந்தார்கள்.

பிராவிடன்ட் நிதியில் இந்தியர்களைச் சேர்த்ததை, அரசாங்கத்துக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்யச் சில தீவிரவாதிகள் பயன் படுத்தி வருகிறார்கள். —ரஜனி

# வட்டமேஜை

## புது மனிதனாக்கியது

சென்ற கல்கி 23-2-58 இதழில் திரு பிலஹரி அவர்கள் எழுதிய ''குடியிருந்த கோயில்'' என்ற கதையைப் படித்ததும், என் மெய் சிலிர்த்தது. என் நெஞ்சம் வேதனைக் கடலில் வீழ்ந்து துடிதுடித்தது. ஆம், நானும் சிலர் பேச்சுக்கு அடிமையாகி என் தாயை—அன்புத் தெய்வத்தை — புறக்கணித்த பாவியானேன். இந்தக் கதை என்னைப் புது மனிதனாக்கி விட்டது. அந்தப் பெருமையெல்லாம் கதாசிரியர் திரு பிலஹரி அவர்களுக்கே உரியதாகும்.

கோயமுத்தூர்
21—2—58 வி. ஏ. நஜீர் அஹமத்

## பரவசமடைந்தேன்

தங்களுடைய மார்ச் இரண்டாம் தேதி கல்கி இதழைப் பார்த்தேன். திருமதி மீரா பென் அவர்களின் கருத்தைத் தாங்கி வந்த கல்கி இதழுக்கு எமது பாராட்டுக்கள் பல.

திருக்கோவிலூர்
26—2—58 'செங்கோ', 'சேகர்'

## விமோசனம் உண்டா?

இங்கு வாழும் மலைநாட்டுத் தமிழருக்கு [இந்தியத் தமிழர்] எதிராக அரசாங்கம் செய்து வரும் கெடுபிடிகள் யாவரும் அறிந்தவையே. தோட்டத் தொழிலாளியின் பிள்ளைகளுக்குக் கல்வி மறுக்கப்படுகின்றது; அவன் இலங்கைப் பிரஜை அல்ல என்ற காரணத்தால். அதுமட்டுமா? அவன் இதுகாறும் தேயிலை, ரப்பர்த் தோட்டங்களில் கூலியாகவாவது வேலை செய்து பிழைத்து வந்தான். அந்தத் தொழிலுக்கும் வந்தது ஆபத்து.

வருங்காலத்தில் தோட்டங்களில் காலியாகும் இடத்துக்கு இலங்கையரை — அதாவது சிங்களவரையே, நியமிக்க வேண்டும் என்று சட்டம் கொண்டுவரத் தொழில் மந்திரி நடவடிக்கை எடுத்து வருகிறார். தனிப்பட்ட வர்த்தகர்களிடமோ, பிற தொழில் புரிபவரிடமோ வேலை பார்க்கலாமென்றால் அங்கும் கூட இதே நிலைதான். ஒவ்வொரு முதலாளியும் இலங்கையரையே வேலைக்கு வைத்துக் கொள்ளவேண்டுமாம். இவையெல்லாம் போக மலை நாட்டுத் தமிழருக்கு ஜீவனம் நடத்த எஞ்சியிருந்தது சொந்தமாக நிலம் வாங்கி உழைப்பதே. இப்போது மந்திரி தாம் கொண்டு வந்த நெற்காணி மசோதா மூலம் இந்த உரிமையையும் பறித்து விட்டார். மலை நாட்டுத் தமிழரின் வருங்காலச் சந்ததியின் எதிர் காலம் இருண்டிருக்கிறது என்பதை இங்குள்ள இடது சாரிக் கட்சிகள் கூடக் கவனிப்பதில்லை. இந்தத் திக்கற்ற நிலையில் எங்களை ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும்.

கொழும்பு
25—2—'58 ஓர் இலங்கைத் தமிழன்



சென்னை பின்னி மில்லின் மானேஜிங் டைரக்டர் திரு பி. மருதைப் பிள்ளை மலேயா கோலாலம்பூரில் நிகழும் 'இகாபே' மகாநாட்டில் கலந்துகொள்ள சென்றிருக்கிறார். அவர் வியாபார நிமித்தமாக ஆஸ்திரேலியா, ஜப்பான், ஹாங்காங் முதலிய நாடுகளிலும் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார்.

## விவசாயிகளின் துயரம்

கோவை மாவட்டத்தில் அதிலும் அவிநாசி தாலுக்கா வாழ் மக்களில் பெரும்பாலோர் ஏழை விவசாயிகள். அவர்கள் அனைவரும் தங்களுக்கு உள்ள ஒரு ஏக்கர் அல்லது இரண்டு ஏக்கர் நிலத்தில் உழுது சாகுபடி செய்து புகையிலை, நெல், சோளம், கேழ்வரகு போன்ற வெள்ளாமைகளை மிகுந்த சிரமத்துடன் பயிர் செய்து சாகுபடி செய்ய வேண்டியிருக்கிறது. அப்பயிர்கள் முளைத்து மூன்றிலை விடுவதற்குள் விஷப் பேன்கள், பூச்சிகள், நிலத்தின் சாரமின்மையால் கெட்டு விடுகின்றன. அப்பயிர்களுக்குத் தேவையான, பாஸ்பேட், சல்பேட் உப்புக்கள் பாலிடால் போன்ற மருந்துகள் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது. அம் மருந்துகளைக் கோவை, மேட்டுப்பாளையம், காரமடை போன்ற இடங்களில் உள்ள கூட்டுறவு பண்டக சாலைகளிலோ அல்லது இதர ஸ்டோர்களிலோ வாங்கவேண்டும். இம்மூன்று இடங்களைத் தவிர வேறிடங்களில் விற்கப்படுவதில்லை. எங்களைப் போன்ற ஏழை விவசாயிகள் அரை ஏக்கர், 1 ஏக்கர், 2 ஏக்கர் நிலத்தில் சாகுபடி செய்யப்பட்டுள்ள பயிர்களுக்குத் தகுந்த அளவு ஸல்பேட் உரேனியம் உப்புக்களை [illegible] மணங்கு கணக்கில் மேற்கண்ட ஸ்டோர்களில் கேட்டால், அதற்கு அவர்கள் சில்லறையாகத் தருவதில்லை. வேண்டுமானால் மூட்டைக் கணக்கில் தருகிறோம் என்கிறார்கள். பணம் படைத்த விவசாயிகளில் சிலர் மூட்டைக் கணக்கில் மேற்படி உப்புக்களை வாங்கிக் கறுப்பு மார்க்கட்டில் விற்பனைசெய்து தங்கள் பணத்தினை விருத்தி செய்து கொள்ளுகிறார்கள். மேற்படி கறுப்பு மார்க்கெட்காரர்கள் மணங்கு 1-க்கு ரூ. 3—00 அதிகம் வைத்து விற்கின்றனர். நாங்கள் கோவையில் போய் வாங்குவதென்றால் பஸ்செலவு ரூ. 2. மேல் செலவு ரூ. 1. மணங்கு 1-க்கு ரூ. 3. அதிகம். ஆக ரூ. 5, 6 நஷ்டம் ஏற்படுகிறது. ஏழை விவசாயிகளின் துயர் என்று நீங்குமோ?

அதேபோன்று நெல், புகையிலை பருத்தி, மிளகாய் போன்ற பயிர்களில் விழும் விஷப் பேன்களை நீக்க உபயோகிக்கப்படும் 'பாலிடால்' என்ற மருந்து வாங்க ஸ்டோர்களில் கேட்டால் அவர்கள்கிராமஅதிகாரிகளின்

கையெழுத்து தேவை என்று கூறுகிறார்கள். ஆனால் அதே போன்று அதிகாரிகள் கையெழுத்து பெற ரூபாய் இரண்டு முதல் ஐந்து வரை தரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. இந்த நிலைமையில் அதே பாலிடால் மருந்து ரூ. 2-75வுக்கு விற்கப்பட வேண்டியது கறுப்பு மார்க்கெட்டில் ரூ. 5-50 க்கு விற்கிறார்கள். நாங்கள் ஏழை விவசாயிகள். அதிகப்படி தொகை கொடுத்து வாங்கக் கூடிய நிலைமையிலா யிருக்கிறோம்?

ஆகவே இது சம்பந்தமாக அதிகாரிகள் தக்க நடவடிக்கை எடுத்து ஏழை விவசாயிகளைக் காப்பாற்ற முன்வர வேண்டும்.

ஊரூர்
26—2—58 ஓர் ஏழை விவசாயி

## துயில் கொண்ட வண்ணன்

இவ்வாண்டு பள்ளியிறுதி வகுப்பு (எஸ். எஸ். எல். ஸி) க்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ள சிறப்புத் தமிழ் நூலில், வில்லி பாரதப் பகுதியாகிய, வாசுதேவனைப் படைத்துணையழைத்த சருக்கப் பாடல்கள் வெளியிடப்பட்டுள்ளன. அதில் உள்ள, 'வந்தமை யறிந்து' என்று தொடங்கும் செய்யுளின் கண்வந்துள்ள 'சந்திரன் ஒடுங்கி நிற்பத் தபனனே சரிக்குமாறு, பந்தனையிலாதான் யோகத் துயில்வரப் பள்ளி கொண்டான்' என்ற அடிகளுக்கு உரை நூல்கள் விளக்கம் கூறும்பொழுது, சந்திரகலை ஒடுங்கி நிற்கச் சூரியகலை நடக்குமாறு கண்ணன் வலப்பக்கம் சாய்ந்து அறிதுயில் கொண்டான் என்றுரைக்கின்றன. மேலும், நாம் எப்பக்கத்தில் சாய்ந்து படுத்திருக்கின்றோமோ, அப்பக்கத்தில் சுவாசம் மிகுதியாக ஓடுமென்றும், மற்றப் பக்கத்தில் சுவாசம் குறைவாக ஓடுமென்றும், அதனால் கண்ணன் வலப்பக்கம் சாய்ந்து படுத்திருந்தான் என்றும் கூறுகின்றன. இதற்கு, திருவரங்கத்தில் திருமால் துயிலுங் கோலத்தைப் பற்றிக் கூறும் 'குடதிசை முடியை வைத்து' என்ற தொண்டரடிப் பொடி யாழ்வாரின் பாடலைச் சான்று காட்டுகின்றன. முன்னர் உரைத்த விளக்கமும், பின்னர் காட்டிய சான்றும் பொருந்தாது. உரை நூல்கள் கூறிய விளக்கம் யோக நூற் கருத்துக்கு முற்றிலும் முரணானது.

உரை நூல்கள் கூறும் கூற்றுக்குச் சான்றாகத் திருவரங்கத்தில் திருமால் துயிலுவதைக் காட்டுதல் பொருந்தாது. தென்னிலங்கையில் அரசாளும் விபீடணனைப் பார்த்துக் கொண்டே துயில்வதற்காக, நூல் முறைக்கு மாறாகத் திருமால் பள்ளி கொண்டுள்ளார் என ஆழ்வார்கள் காரணம் கூறியிருக்கின்றனர். 'மன்னுடைய வீடணற்காய் மதிலிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண் வைத்த, என்னுடைய இன்னரங்கா' என்ற குலசேகர ஆழ்வார் பாடல் அடிகள் இதனை வலியுறுத்தும்.

மானிட உருவம் தாங்கி, மானிட தருமத்தை, உயிர்களுக்கு உணர்த்துவதற்காகப் பிறந்த கண்ணன், மாந்தர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தைக் காட்ட, யோக நூற் கொள்கைப்படி இடது கையைக் கீழே வைத்து, அதாவது இடப்புறம் சாய்ந்து அறிதுயில் கொண்டான் என்பதுதான் மேற்படி பாடலுக்குச் சரியான விளக்கமாகும்.

சேத்துறை
27—2—58 அ. சௌந்தரநம்பி
தமிழாசிரியர்



## அநாதைக் கால்வாய்

நெற்களஞ்சியமான தஞ்சை மாவட்டத்தில் 1950ம் ஆண்டு முதல் நாளது வரை வெட்டப் படாத கால்வாய்கள் நூற்றுக்கணக்காயிருக்கின்றன. ஒவ்வொன்றும் ஆயிரம் ஏக்கருக்கு மேல் பாசனமுள்ளது. பிரதி ஐந்து கிராமங்கள் சேர்ந்த வட்டாரத்தில் கிராம சேவக் என்ற ஒரு புதிய அதிகாரி தோற்றுவிக்கப்பட்டு ஊதியம் பெற்று வருகிறார். அந்த அதிகாரி தனது வட்டாரத்திலுள்ள கால்வாய்களை வெட்டுவதற்கான முயற்சியெடுத்துக் கொண்டால் நடைபெறக் கூடும். அந்த அதிகாரி என்ன செய்கிறார் என்பதே ஒருவருக்கும் தெரியாது.

குடி மராமத்து சட்டமானது செயல் முறையில் பயன்பட வில்லையென்பதை அறிந்த 'ராஜாஜி' அவர்கள், பிரதமராயிருந்த போது அந்தச் சட்டத்தைத் திருத்தினார். திருத்திய பிறகு அதை எளிதாய்ப் பயன்படுத்தி, கால்வாய்கள் மராமத்து செய்ய உதவக் கூடியதாயிருந்தும், பயன் படுத்தவில்லை. நான் வைத்தது சட்டமென்று பலசட்டங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் அடுக்கப்பட்டு வருகின்றன. சுமுகமாயிருந்த கிராம உறவு கெட்டு வருகிறது. பல மகஜர்கள் எழுதினாலும், பல



ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் ஆணையின்படி மார்ச் இரண்டு மூன்று தேதிகளில் சமூக உபநயனம் சிறப்பாக நடைபெற்றது. படத்தில் மேலேயிருப்பது: சென்னை மேற்கு மாம்பலம் சங்கரமடத்தில் நடைபெற்ற உபநயனத்தில் கலந்து கொண்டு பிரம்மோபதேசம் பெற்ற சிறுவர்கள். கீழே: தியாகராயநகர் வேதவிலாஸில் பிரம்மோபதேசம் பெற்ற பாலகர்கள்.

தடவைகள் எடுத்துக் காட்டினாலும் கண் இருந்தும் பாரார், காதிருந்தும் கேளார் என்றகதையாக இருக்கிறது. தூர்ந்துபோன கால்வாய்களைச் செப்பனிட்டால் பல மடங்கு பயன் உண்டாகும்; உடனடியாகப் பலன் கிடைக்கும். இந்தக் காரியத்தைச் செய்யாமல், இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு பயன் தரக் கூடியதும், பணச் செலவுடையதுமான திட்டங்களை ஆரவாரமான விளம்பரத்துடன் கைக்கொண்டு வருகிறார்கள்.

குடிவாரம் அறுபது என்ற சட்டத்தில் கால்வாய் செப்பனிட வேண்டிய பொறுப்பு யாருடையது என்று தெளிவுபடுத்தவில்லை. "எந்த வாய்க்கால் வெட்டவில்லையோ, அந்த வாய்க்கால் சம்பந்தப்பட்ட வாரக்காரர்களுக்கு அறுபது வாரம் செல்லாது" என்று ஒரு விதி கண்டிப்பாய் இருந்து அமுல் நடத்தினால், தவறாது வெட்டப்படுமென்பதில் ஐயமில்லை. அம்மாதிரி செய்வார்களா? வழவழவென்ற சட்டத்தால் இருதரப்பாரும் துன்பமடைகின்றனர். வாரத்தை உயர்த்தினால் உணவுப் பெருக்கம் ஏற்படும் என்று கருதலாமா? கால்வாய் வெட்டாமலும், மழை பெய்யாமலும், உணவுப் பெருக்கம் எப்படிக் காண முடியும்?

ஆலங்குடி
27-2-58 மு. வைத்தியநாதன்

## வியப்பிலும் வியப்பே!

"எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை
இந்தியா உலகிற்கு அளிக்கும் — ஆம்"

என்றார் பாரதியார். ஆனால் இந்தியாவில் நடைபெறுவது அதற்கு நேர்மாறாக இருக்கிறது. சமாதானம் என்ற சொல்லை இந்திய சர்க்கார் பேச்சளவில்தான் வைத்திருக்கிறார்கள். சென்னையில் ஜனவரி ஆறாந்தேதி நடந்த கலவரமும், முதுகுளத்தூர் கலகமும், மற்றும் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் நடைபெற்றிருக்கும் கலகங்களும் காங்கிரஸ் ஆட்சி ஜனநாயக ஆட்சியல்ல, சர்வாதிகார ஆட்சி என்பதை எடுத்துக் காட்டுகிறது.

பாஷை, எல்லை, உணவு, உடை, கல்வி, தொழில், பொருளாதாரம் ஆகிய பிரச்னைகளுக்கு வழி காணமுடியாத இந்தியா, இதர நாடுகளுக்கு எவ்விதம் சமாதான உபதேசம் செய்ய முடியும்? பாரதியாரின் கனவுகள் பலித்து விட்டன என்று சொல்லிக் கொண்டிருக்கும் இந்த சர்க்கார் பாரதியார் இந்தக் கவிதையில் உள்ள கனவைப் பலிக்கச் செய்யாதிருப்பது வியப்பிலும் வியப்பே!

அதிராம்பட்டணம்
28—2—58 க. சிங்காரவேலு

## கேள்விமுறை உண்டா?

என்னுடைய கிராமம் சைதாப்பேட்டை தாலூக்காவைச் சேர்ந்த திருவான்மியூர். சர்க்கார் உத்தரவுப்படி, என் வயல்களுக்கு எருப் போட ரூ 120 அதிகாரிகளைக் கடன் கேட்டேன். அந்த விண்ணப்பத்தில் அப்பொழுது (டிசம்பரில்) நடவுநட்ட வயலுக்குப் போடவும், பிறகு பிப்ரவரி மாதக் கடைசியில் நாற்று விட்டு, நட இருக்கும் வயலுக்குப் போடவும் சேர்த்துக் கேட்டிருந்தேன். இப்பொழுது மார்ச்சு மாதம் பிறந்து விட்டது. மனுவினால் ஒரு பலனும் இல்லை.

ஒரு தடவை எருப் போடாமலே அறுவடை ஆகி விட்டது இன்னொன்று இப்பொழுது எருப் போடாமலே நாற்று விட்டிருக்கிறது. எனக்கு எரு கடன் கொடுக்க முடியாது என்று சொல்லியிருந்தால், வேறு வழி தேடி இருக்கலாம். விவசாயிகள் எருப் போடாமல் பயிர் செய்தால் செலவு செய்த பணம் வராது.

விவசாயிகள், உற்பத்தி பெருக அதிக ஊக்கம் காட்ட வேண்டும் என்று சொல்லப்படுகிறது. இரண்டாவது ஐந்து ஆண்டுத் திட்டத்தில் ரூ 40,000- விவசாயிகளுக்கு உதவி செய்ய அனுமதித்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனால், உற்பத்தி பெருக எரு வாங்கக் கடன் கேட்டால் அந்தத் தொகை கொடுக்கப்படுவதில்லை.

இந்த நிலையில் விவசாயி எரு இல்லாமல் பயிர் செய்து நஷ்டம் அடைந்து நிலத்தை அடகுவைத்தோ, சொற்ப விலைக்குவிற்கவோ பயிரிடாமல் தரிசு போடவோ தான் செய்வார். இந்தப் பெரும் குறையை அதிகாரிகள் கவனித்து ஆவன செய்வார்களா?

திருவான்மியூர்
1—3—58
பு. இராமானுஜ முதலியார்

## பட்டு நெசவாளர் பரிதவிப்பு

இன்று பட்டு இறக்குமதி இல்லாததாலும்உள்நாட்டுஉற்பத்தி போதாததாலும் பல லட்சம் பட்டுத் தறிகள் பாதிக்கப்பட்டுள்ளன. பள்ளிபாளையத்தில் மட்டும் சுமார் 2500 பட்டுத் தறிகளில் லுங்கி, வேஷ்டி, சேலை, சோலி முதலியன தயாரிப்பவர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த நெருக்கடியை நீடிக்க விடுவது ஆபத்தாக முடியும். இந்தத் தொழிலை நம்பி வாழும் பல லட்சம் மக்கள் பாதிக்கப்படாமல் இருக்க வேண்டுமாயின் கீழ்க்கண்டஆலோசனைகளைஆராய்ந்து ஆவன செய்ய வேண்டியது அவசியம்.

1. நம் பட்டுத்தறித் தொழிலுக்குப் போதுமான பட்டு உற்பத்தி செய்யும் வரை இறக்குமதியைத் தடை செய்யக் கூடாது. 2. முன்பு இறக்குமதி செய்த பட்டுக்கு உடனே மீண்டும் இறக்குமதி அனுமதி கொடுக்க வேண்டும். 3. தறியுள்ள இடத்தில் நெசவாளர், மாஸ்டர்வீவர், பட்டு வியாபாரிகள் கொண்ட முக்கூட்டு கமிட்டி ஏற்படுத்த வேண்டும். 4. நாட்டில் உள்ள பட்டுத் தறிகளையும் பட்டு நெசவாளர்களையும் கணக்கு எடுக்க வேண்டும். 5. பட்டு உபயோகிப்பவர்களுக்குக் கிடைக்கச் சரியான விநியோக முறையையும் ஏற்படுத்த வேண்டும்.

பள்ளிபாளையம்
26—2—'58
ஏ. நாச்சிமுத்து

## மூடிக்கிடக்கும் வைத்தியசாலை

வாணியம்பாடி பிர்க்கா எழுபத்திரண்டு கிராமங்களைக் கொண்டது. ஏறத்தாழ இரண்டு லட்சம் மக்கள் வாழக்கூடிய நிலையில் உள்ளது. இங்கு வாழும் தாய்மார்களுக்கென நகரசபையும் அரசாங்கமும் சேர்ந்து ஓர் பெண் வைத்தியசாலை திறந்திருந்தது. இந்த வைத்தியசாலையில் பணிபுரிந்து வந்த டாக்டர் அம்மையார் பணியை விட்டு விட்டுப் பாகிஸ்தானுக்குச் சென்று விட்டார்களாம். சுமார் நான்கு மாதங்களாக இந்த வைத்தியசாலை பெண் டாக்டர் இல்லாமையால் மூடிக் கிடக்கிறது. ஓரளவு பொருளாதார வசதி உள்ளோர் தனிப்பட்டவர் நடத்தும் வைத்தியசாலையில் சிகிச்சை பெறுகின்றனர். வாய்ப்பு வசதி இல்லாதோர் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். எனவே வாணியம்பாடியில் மூடிக்கிடக்கும் பெண் வைத்தியசாலையில் விரைவில் பெண் டாக்டர் நியமிக்கச் சர்க்கார் முன்வர வேண்டும்.

வாணியம்பாடி
4—3—'58
வி. என். தத்தப்பன்




21

**பொ**ருள் சம்பாதிப்பது இரு வகையில் நடைபெறலாம். தர்மத்துக்கு விரோதமில்லாத வழியில் பொருள் ஈட்டலாம். அறத்தைப் புறக்கணிக்காத வழியில் ஈட்டின பொருள் தனக்குப் பின் தன் மக்களுக்குப் போய்ச் சேரும்போது, அவர்கள் அதைப் பற்றி வெட்கப் படாமல் பெருமையுடன் அநுபவிப்பார்கள். இதை ஒருவன் கொஞ்சம் உன்னிப் பார்த்தால் நல் வழியில் பொருள் தேடி வைப்பதே விவேகமும் சிறப்பும் இரண்டும் ஆகும் என்று உணர்வான். நல்ல வழியில் சம்பாதித்த பொருள் ஒரு குறையுமின்றித் தன் குழந்தைகளுக்குத் தனக்குப் பின் உதவும். பழிக்கு இடம் தரும் வழியில் ஈட்டிய பொருளை அந்தப் பழியோடு தான் அநுபவிக்க முடியும். பிதுரார்ஜிதப் பொருளோடு பிதுரார்ஜிதப் பழியும் அடைவார்கள். இது ஆக்கத்தில் பெரும் சிதைவு. அதாவது பெருங் குறைபாடாகும்.

செப்பம் உடையவன்
ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்(கு) ஏமாப்பு உடைத்து.

அறம் சிதையாத வழியில் வந்த ஆக்கம் ஒரு குறையுமின்றி ஏமாப்பு உடையதாகும்.

ஏமாப்பு—வலிமை, காப்பு, சிறப்பு. எச்சம்—மக்களும் மற்றச் சந்ததியாரும். செப்பம்—அறம் கோணாத நிலை.

பழியாகிய குறை இல்லை என்பதோடு. பிறகு எக்காரணத்திலாவது வறுமையோ கஷ்டமோ நேர்ந்தால் காப்பாகவும் அமையும், சம்பாதித்தவனுடைய அறமும் அதன் வழி உண்டாகிய புகழும்.

அறம் வழுவாத முறையில் சம்பாதித்த செல்வம் நிலையாக நிற்கும். குற்றம் கலந்த வழியில் சம்பாதித்தது நிலைத்திருப்பது நிச்சயம் இல்லை. அது மேலும் மேலும் பாவத்துக்கு மனிதனை இழுத்துச் செல்லும். அத்தகைய செல்வம் புத்தியைக் குழப்பி, தீமையிலும் லாபம் பெறலாம் என்று ஆசை காட்டி முடிவில் மனிதனைக் கெடுக்கும்.

பொருளைக் கொண்டுதான் சுகம் அடையலாம் என்பதைக் காட்டிலும், தனக்குப் பின் தன் மக்கள் வறுமைப் பிணியின்றி இன்ப வாழ்க்கை நடத்த வழியாகும் என்கிற கருத்தே ஒருவனைச் செல்வம் தேடி வைக்கத் தூண்டுகிறது. பாமர மக்களுடைய மனம் எவ்வாறு இயங்குகிறது, சாதாரணமாக எப்படிச் செல்கிறது என்பதைக் கொண்டு முனிவர் "உன் குழந்தைகளுக்கு இதுவே லாபமாகும், வேறு முறையில் சேர்த்த செல்வம் அவர்களுக்குப் பயன்படாது, அவமானந்தான் உண்டாகும்'' என்று எச்சரிக்கை செய்கிறார். நேர்மையான முறையில் சம்பாதித்த பொருள் தான் நிலைக்கும், மற்றது நிலைக்காது என்கிற பொதுக் கொள்கையை மட்டும் வற்புறுத்தி நிறுத்தி விடாமல், காரியவாத முறையில் உபதேசிக்கிறார். சமூகத்திலுள்ள மக்கள் குறைசொல்லக் கூடிய செல்வம் வலிமையற்றது. நியாய முறையில் சம்பாதித்த பொருளே சாசுவதமாக நிற்கும் என்கிறார்.

**எ**ந்த வழியில் சம்பாதித்தால் என்ன, முறையின் தவறு அந்த முறையில் வந்த பொருளைப் பற்றிக் கொள்

ளாது என்கிற மட எண்ணம் மக்களுக்குத் தோன்றும். அப்படி ஏமாற்றம் அடையாதே. அந்த எண்ணத்துக்கு இடம் கொடுத்தால் நீ கெடுவாய். அதை உடனே அகற்றிவிடு-என்கிறார் முனிவர்.

**நன்றே தரினும்**
**நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.**

இந்தப் பணத்தைக் கொண்டு பல நல்ல காரியங்களைச் செய்யலாமே. சிறு குற்றம் செய்து பெரு நன்மை செய்யலாமே என்று பாப எண்ணத்துக்குக் கொஞ்சம் இடம் தந்தால், கெட்டுப் போவோம். ஆனபடியால் அத்தகைய எண்ணத்துக்குக் கொஞ்சமும் அவகாசம் தராதே—என்கிறார். "அன்றே ஒழிய விடல்" என்பதன் கருத்து இதுவே. பாபத்திற்கு மனத்தில் இடம் கொடுத்தால் அது நம்மையறியாமல் வேரூன்றி விடும். மனவுறுதியில்லாத மக்களுக்கு இது மிகவும் முக்கியமான எச்சரிக்கை. ஒரு எண்ணத்துக்கு இடம் கொடுத்தால் நினைக்க நினைக்க அபாயம் அதிகமாகும் என்று கண்ணனும் கீதையில் பலமுறை எச்சரிக்கிறான். 'அன்றே' என்னும் சொல் தமிழில் அழகாக உபதேசத்துக்கு அழுத்தம் தருகிறது.

**கெடுவல்யான் என்ப(து)**
**அறிக தன் நெஞ்சம்**
**நடுவுஒரீஇ அல்ல செயின்**

அதர்ம எண்ணம் மனத்தில் தோன்றினால் "நீ கெட்டுப் போகும் காலம் வந்து விட்டது என்பதற்கு அது ஒரு அறிகுறி ஆகும். ஜோதிஷனைக் கேட்க வேண்டியதில்லை, பறவை சாஸ்திரம் பார்க்க வேண்டியதில்லை. நெஞ்சத்தில் தோன்றும் எண்ணங்களே சகுனமாகும். வரும் அபாயத்தினின்று தப்பிப் பிழைக்க வழி தேடு என்கிறார். மற்றவர்களுக்குத் தெரிவதற்கு முன் உன் நெஞ்சத்தின் எண்ணம் உனக்கு முதலில் தெரியுமல்லவா? ஒரு எண்ணம் செயல் உருவம் எடுத்த பிறகே பிறருக்குத் தெரியும். ஆனால் அதற்கு முந்தியே வெறும் எண்ணமாக இருக்கும் பொழுதே நீ அதைக் கண்டு கொண்டு 'இது நான் கெட்டுப் போவதற்கு அறிகுறியாகும்' என்று உணர்ந்து அபாயத்தினின்று விலகுவதற்கு வழி தேடு" என்கிறார்.

குறள் கடைசியில் வரும் 'செயின்' என்கிற சொல்லை, 'நெஞ்சம்' என்கிற அதன் எழுவாயோடு வைத்துப் பொருள் கொள்ள வேண்டும். 'நெஞ்சம் செயின்' என்பதற்குப் பொருள் நெஞ்சத்தில் எண்ணினால். எண்ணத்தை மனத்தின் செயலாக வைத்துச் சொன்னார். நடுவிலிருந்து விலகி, அல்ல (நடுவு அல்லாதன) செய்ய எண்ணினால் அதுவே நீ கெடும் காலம் வந்தது என்பதற்கு உற்பாதம் ஆகும் என்கிறார்.




ஸ்ரீமான் சள-சளவை உங்களில் யாருக்கும் தெரியாமல் இருக்க நியாய மில்லை. பஸ்ஸ்டாண்டில் யாராவது ஒரு வரை நிறுத்தி வைத்துக்கொண்டு, அவர் தப்பி ஓடிப் போய்விடப் போகிருரே என்பதற்காக எதிரில் போய் நின்று கொண்டு உரத்த குரலில், "இதோ முடித்து விட்டேன். எங்கேயோ அவசர மாகப் போய்க்கொண்டிருக்கிறீர்களே!" என்று ஐந்து நிமிஷத்துக்கொருதரம் சொல்லிக் கொண்டே ஒரு மணி நேரம் பேசித் தீர்க்கிருரே, அவர் தான் ஸ்ரீமான் சள்ளசள.

அவருடைய அப்பாவும் அம்மாவும் அவ ருக்கு அளித்த பெயர், தொட்டிலுக்கடியில் நெல்லைப் பரப்பி அதில் பிரியமாக எழுதிய பெயர் வேறு. இருபது வருஷத்திய ஏழு மலையான் பக்தியின் அவதாரமாக வந்து அவதரித்த பிள்ளையாதலால் வேங்கடாசலம் என்று பெயர் வைத்திருந்தார்கள். ஆனல் ஒன்று: அந்த நெல்லைப் பரப்பிய இடத்தில் கடைசி எழுத்தான "ம்" என்பதை எழுத முடிய வில்லை. ஆகவே அவர் பெயர் சித்திர குப்தன் கணக்கிலே 'வேங்கடாசல' என்று தான் இருக்கும். அதுவேதான் சள சள என்று ஆயிற்ரு என்னவோ!

வேங்கடாசலத்தின் வீட்டுப் போர்வழிகள் இரண்டொருவரை எனக்கு நன்ருகவே தெரி யும். அதனல் அவருடைய குழந்தைப் பருவத் தைப் பற்றிப் பிறர் சொல்லக் கேட்டிருக் கிறேன் நான். "இப்போ இப்படிப் பேசு கிருனே என்று நினைக்கிறீர்களா? அப்போது பிறந்து ஐந்து வயதாகிற வரைக்கும் அவ னுக்குப் பேச்சே வரவில்லை ஸார். இடித்து வைத்த புளி மாதிரி வைத்த இடத்திலே உட் கார்ந்திருப்பான். ஊமைப்பிள்ளையோ என்று கூட அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சந்தேகம் வந்து விட்டது. சிதம்பரத்து டாக்டர் அடித் தால் அழத் தெரிகிறதா என்று சற்று ஓங்கியே அடித்துப் பார்த்தார். அது எனக்கு நன்ருக ஞாப கம் இருக்கிறது!"

"அழுதானு?" என்று கேட்டேன்.

"அழுதான்! அழு தான்" என்ருர் கிழவர். "அவன் அன்று போட்ட சத்தத்தில் என் காதே செவிடாகி விட்டது."



இது நிஜமோ, பொய் யோ எனக்குத் தெரியாது. ஆனல் பெரியவர் எதற் காகப் பொய் சொல்லப் போகிருர்? ஒன்று மட்டும் சொல்லலாம். வேங்கடாசலத்தைத் தெருவில் சந்திக்கும்படி ஏற்படலாமோ என் கிற பயம் இருந்தால் விமானப் பிரயாணத் துக்குத் தருகிருர்களே அந்த மாதிரி பஞ்சை வாங்கிக் காதில் அடைத்துக் கொள்ளத் தயா ராக வைத்துக் கொள்வதுதான் நல்லது. இல்லாவிட்டால் உங்கள் காதும் செவிடாகு வும் ஆகலாம்.

"என்ன ஸார்! உங்களைப் போன செவ் வாய்க்கிழமை பார்த்தேனு? அதற்குப் பிறகு பத்து நாளாகி விட்டதே. நடந்ததை யெல் லாம் சொல்லி விடுகிறேன்" என்று ஆரம்பிப் பார் ஸ்ரீமான் சள — சள.

"சனிக்கிழமையன்று பார்த்துப் பாதி சொல்லி விட்டீர்கள்" என்று அவருக்கு நினைவுபடுத்த முயன்ருல் தோல்வியுறவேண்டி யதுதான். ஏனென்ருல் ஸ்ரீமான் சள - சள வுக்கு நாம் சொல்வது எதுவும், அவர் பேசிக் கொண்டிருக்கும்போது, காதில் விழாது.

அவர் கையிலே கடிகாரம் கட்டியிருப்பார். ஆனல் அந்தக் கடிகாரத்தைப் பார்த்து லாபம் இல்லை. ஏனென்ருல் அது ஓடுவதை நிறுத்திப் பல வருஷங்களாகின்றன.

"ஏனையா அதை ரிப்பேர் செய்யக் கொடுப் பதுதானே!" என்று ஒருவர் சொன்னதற்கு வேங்கடாசலம் சொன்ன பதில் எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது. "ரிப்பேர் செய்பவனிடம் எடுத்துக் கொண்டு போனேனே. ஆசாமி எப்படி என்று அவ னிடம் பேசிப் பார்க்கலாம் என்று ஆரம்பித் தேன். ஆசாமி கொஞ்சம் ஸ்க்ரூலூஸ் போல இருக்கிறது. நான் பேசிக் கொண்டிருக்கையி லேயே கடையை விட்டே அவன் தெருவில் இறங்கி ஓடிவிட்டான். பைத்தியம்போல இருக்கிறது. கடிகாரத்தைக் கொடுத்தால் குட்டிச்சுவராக்கி விடுவான் என்று திரும்பி விட்டேன்" என்ருர் ஸ்ரீமான் சள — சள.

பேசுவதற்கு விஷயம் அகப்படாமல் அவர் தட் டித் தயங்கித் திணறி யதை நான் இதுவரையில் கண்டதே யில்லை. பத்தி ரிகை உலகத்துச் செய்தி கள் முதல் பணக்கார உல கத்து அந்தரங்கச் செய்தி கள் வரையில் எல்லாம் அவருக்குத் தெரியும். அவர் மூலம் எனக்கும் இப் போது தெரியும். எங்க ளூரில் வசிக்கிற 75000 போர்வழிகளைப் பற்றியும் வேங்கடாசலபதிக்குத் தெரியும் என்று சொன்னுல் வியப்பாகத்தான் இருக்கும். ஆனல் உண்மை அதுதான். ஏழுரை லக்ஷம் போர்வழிகளைப் பற்றியும் அறிந்து சொல்லும் திறன் உள்ளவர்தான் அவர். இதில் விசேஷம் என்னவென்ருல் அவர் தஞ்சாவூர் வந்து இரண்டே வருஷங்கள்தான் ஆகின்றன. நானே பிறந்தது முதல் இங் கேயே இருக்கிறேன்.

ஏதோ ஒரு பட்டணத்துச் செக் ஒன்றை உடனடியாகப் பணமாக்க வேண்டிய அவசி யம் எனக்கு இருந்தது. வேங்கடாசலத்துக்குத்

தான் ஊரில் எல்லோரையும் தெரியும் என்று அவரைத் தேடிக் கொண்டு சென்றேன். முடிவில் அவர் வழக்கமாகச் சாப்பிடுகிற ஹோட்டலில்தான் போய்க் கேட்டேன். பெயரைச் சொல்லிக் கேட்டேன்.

''யாரது வேங்கடாசலமா? அப்படி ஒருத்தரும் தெரியாதே எங்களுக்கு'' என்றார் ஹோட்டல் முதலாளி.

அடையாளம் சொன்னேன். முகம் நீண்டு, குதிரை முகம் மாதிரி இருக்கும். கறுப்பு, ஒல்லி என்றெல்லாம் கூறியும் அவருக்குப் புரியவில்லை. ''ஓயாமல் பேசிக் கொண்டே விருப்பார்'' என்று சொன்ன பிறகுதான் அவருக்குத் தெரிந்தது.

''ஸ்ரீமான் சள-சளவா! அப்படிச் சொல்லிக் கேட்டால் தெரியும். வேங்கடாசலம் என்றால் எப்படித் தெரியும்? ஸ்ரீமான் சள-சள உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார். அதாவது சாப்பிடுகிறவர்களைச் சாப்பிட விடாமல் பேசிக் கொண்டிருக்கிறார். காது கேட்கவில்லையா உங்களுக்கு?'' என்றார் முதலாளி.

வேங்கடாசலத்தின் பெயர் ஸ்ரீமான் சள—சள என்று அன்றுதான் எனக்குத் தெரிந்தது. உள்ளேயிருந்து அவர் பேசியது என் காதிலும் இப்போது விழுகிறமாதிரிதான் இருந்தது.

''உங்களுக்குப் புண்ணியமுண்டு. போய் அவரிடம் பேச்சுக்கு மாட்டிக்கொண்டு, மற்றவர்களுக்கு விடுதலை அளியுங்கள்'' என்றார் ஹோட்டல் முதலாளி.

பஞ்ச தந்திரத்திலே சக்கரத் தலையன் கதை என்று ஒன்று உண்டு. ஹிமாலய மலைச் சரிவிலே ஒருவன் தலையிலே சக்கரம் ஓயாமல் சுற்றிக் கொண்டிருந்ததாம். யாராவது எதிர்ப்பட்டு ''ஏன் இப்படி உன் தலையில் சக்கரம் சுற்றுகிறது?'' என்று கேட்டவுடன் சக்கரம் கேட்டவன் தலைக்கும் தாவிச் சுற்றத் தொடங்கி விடுமாம். முதல் கிறுக்கியான் விடுபட்டுத் திரும்பலாம். மூன்றாவது ஆசாமிவரும் வரையில் தலையில் சக்கரம் சுற்ற இரண்டாமவன் காத்திருக்க ; வேண்டும். ஹோட்டல் முதலாளி சொன்னதைக் கேட்டதும் எனக்கு இந்தக் கதை ஞாபகம் வந்தது.



''இல்லை. இங்கேயே இருக்கேன், வரட்டும்'' என்றேன்.

''அரை மணியாவது இருக்க வேண்டும்'' என்றார் ஹோட்டல் முதலாளி.

இதற்குள் அந்தப் பக்கம் வந்த ஒரு ஸர்வர் வந்து இன்று ஸ்ரீமான் சள—சளவுக்குக் கொழுத்த வேட்டை கிடைத்திருக்கிறது. இடப்பக்கத்தில் ஒருவர், வலப் பக்கம் ஒருவர், எதிரில் ஒருவர் ஆக மூன்று பேர்கள் அவர் சொல்வதைக் கேட்கக் கிடைத்திருக்கிறார்கள். ஆகவே நீங்கள் ஒன்றரை மணி நேரங் காத்திருக்க வேண்டியிருக்கும்'' என்றான்.

ஒரு மணி நேரம்தான் ஆயிற்று. ஸ்ரீமான் சள-சள வெளியே வர. அப்படியும் எதிர்ப்பட்டவர்களை எல்லாம் தாண்டிக் கொண்டு, பேச்சு அலைக்கெல்லாம் எதிர்நீச்சுப் போட்டு, நாங்கள் பாங்கைப் போய் அடையும்போது, பண அலுவல்கள் நேரம் முடிந்து எத்தனையோ நிமிஷங்கள் ஓடி மறைந்து விட்டன.

இந்த ஸ்ரீமான் சள சளாவுடன் குடித்தனம் நடத்துகிற சஹதர்மிணியை நினைத்தால் தான் எனக்குப் பரிதாபமாக இருந்தது. வாரத்தில் ஒரு நாள் இரண்டு நாள் ஒரு போது இரண்டு போது சந்திக்கிற நமக்கே தாளவில்லையே, இவர் பேச்சைச் சகித்துக் கொள்ள அந்த அம்மாள் எவ்வளவு பொறுமைசாலியாக இருக்க வேண்டும் என்று எண்ணினேன் நான். புண்ணியவதியானால் அவள் செவிடாகக் கூட இருக்கலாம். தஞ்சாவூரில் இருந்த வரையில் அவர் ஹோட்டலில் தான் சாப்பிட்டுக் கொண்டு தனியாக இருந்தார். மனைவியை அழைத்து வரவில்லை. வீடு, மாடு கன்று, தோட்டம், குழந்தைகள் படிப்பு எதையும் விட்டு விட்டுச் சென்னையிலிருந்து கிளம்பி அந்த அம்மாளால் வர இயலவில்லை. இரண்டு வருஷங்களில் ஸ்ரீமான் சள-சளாவும் மாற்றிக் கொண்டு சென்னை போய் விட்டார். அதற்குப் பிறகு ஒரு நாள் வீட்டில் எப்படியிருக்கிறார் மனிதர் என்று பார்க்கலாம் என்று அவர் வீடு தேடிப் போனேன்.

''வா சுப்பிரமணியம்'' என்பதற்கு மேல் மாலை இரண்டு மணி முதல் ஐந்து மணி வரையில், அதாவது வீட்டை விட்டுக் கிளம்பும் வரையில் ஒரு வார்த்தையுமே பேசவில்லை வேங்கடாசலம். 'இவர் தானா ஸ்ரீமான் சள சள?' என்று எனக்குச் சந்தேகமாகி விட்டது. வீட்டில் காப்பியும் டிபனும் சாப்பிட்டு விட்டு வெளியேறினோமோ இல்லையோ பழைய வேங்கடாசலமாகி விட்டார் அவர்.

''மாற்றல் விவகாரம் எல்லாம் எப்படி நடந்தது என்று நான் சொல்லவில்லையே உனக்கு'' என்று ஆரம்பித்து மாலை 5-10 முதல் இரவு 9-05 வரையில் தான் வண்டி ஏறுகிறவரைக்கும் சள-சளவென்று பேசித் தீர்த்து விட்டார் ஸ்ரீமான் சள-சள.

''இப்படி ஒரு ஒப்பந்தம் கட்டாயம் இருப்பது நல்லதுதான்'' என்று என் மனத்திலிருந்ததைச் சற்று உரக்கவே சொல்லி விட்டேன்.

ஆனால் வேங்கடாசலம் பேசுவதில் முனைந்திருந்தார். ரயில் எழும்பூரை விட்டுக் கிளம்பும்போது அவரையும் ரயிலில் ஏறிக் கொள்ளச் சொல்லலாமா என்றிருந்தது. அந்தப் பாழும் ரயில் அவர் வாக்கியத்தை முடிக்க அவகாசம் தராமல் கிளம்பி விட்டது.

ஆனால் இவ்வளவு பெரிய பட்டணத்திலே நிறுத்தி வைத்துப் பேசுவதற்கு அவருக்கு ஆள் அகப்படாமலா போய் விடும்?

# வாழ்க மணமக்கள்



திரு வி. சீநிவாசன் அவர்களின் புதல்வர் திரு பாலகிருஷ்ணன் செல்வி அலமேலுவைச் சென்னையில் திருமணம் செய்து கொண்டார்.



சிறுகதை ' எழுத்தாளர் திரு ஏ. டி. சங்கமணிக்கும் செல்வி சரஸ்வதிக்கும் காஞ்சியில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.



இங் அண்ட் கம்பெனியைச் சேர்ந்த திரு பி.எஸ். கிருஷ்ணமணியின் சகோதரி சீதாலக்ஷ்மிக்கும் திரு வி. ராமதாஸுக் கும் விவாகம் நடைபெற்றது.



இண்டோ கமர்ஷியல் பாங்கின் காரிய தரிசி திரு எஸ். கிருஷ்ணசாமி அவர்களின் சகோதரர் புதல்வி லக்ஷ்மிக்கும் திரு சம்பத் நாராயணனுக்கும் விவாகம் நடந்தது.



நெய்வேலி லிக்னைட் இட்ட கார்ப்ப ரேஷனின் நிர்வாக அதிகாரி திரு ஆர். சங்கராச்சாரியின் புதல்வர் திரு ஆர். சீநிவாசன் பங்கஜவல்லியை மணந்தார்.



திரு சங்கரய்யரின் புதல்வி செல்வி ஜெயரமணாவுக்கும் திரு ஆர். ஸ்ரீநிவாசய்யர் புதல்வர் திரு எஸ். வெங்கடேசனுக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.




பண்ணையார் கனகரத்தினத்தின் மூத்த தாரத்தின் மகன் கோபால்; இளையதாரத்தின் மகன் பிரதாப்; கோபால் குடும்பத்தில் பொறுப்புள்ளவன்; பண்ணை வேலைகளில் பண்பட்டவன். பிரதாப் சிறுபிள்ளைத்தனமாக நடந்து, பண்ணைப் பணத்தை விரயம் செய்கிறான். கோபால் அவனைத் திருத்தி நல்வழிப்படுத்த முயல்கிறான். கனகரத்தினத்தின் இரண்டாம்தாரம் கண்ணம்மா. அவள் அண்ணன் சங்கரலிங்கம் பண்ணைக் கணக்குப்பிள்ளை. அவன் தன் சாமர்த்தியத்தினால், ஒற்றுமையாயிருந்த குடும்பத்தில் பிளவு உண்டாக்குகிறான்.

இந்தப் படத்தில் ஓர் அதிசயம். ஹாஸ்ய நடிப்பில் தலைசிறந்து விளங்கும் கே. சாரங்கபாணி ஆரம்ப முதலே வில்லனாக வருகிறார். வந்து 'குடும்ப கௌரவ'த்துக்கே கௌரவம் கொடுக்கிறார். கதைப் போக்கிலோ, பாத்திரங்களின் அமைப்பிலோ, சம்பாஷணையிலோ ஏதும் விசேஷம் இல்லாத இந்தப் படம் சாரங்கபாணியின் திறமையான நடிப்பினால் உயிர் பெறுகிறது.

திரைக் கதையின் வில்லன் என்பதற்காக, சாரங்கபாணி புருவத்தை உயர்த்தி, விழிகளை உருட்டி, வார்த்தைகளினால் வெருட்டி, குரலினால் மிரட்டி ஒன்றும் செய்யவில்லை. தம்முடைய இயல்பான ஹாஸ்ய நடிப்பையும் மாற்றிக் கொள்ள முயலவில்லை. படத்தின் ஆரம்பத்தில், பண்ணையார் கனகரத்தினத்தின் கணக்குப் பிள்ளையாக அவரைப் பார்க்கும் போது, 'இவர் படத்தின் வில்லனாக மாறுவார்' என்று கொஞ்சம்கூட ஊகிக்க முடியவில்லை. மேலும் சாரங்கபாணி பொதுவாகக் காதலர்கள் வாழ்வில் குறுக்கிடும் வழக்கமான வில்லனாக இந்தப் படத்தில் வரவில்லை: சங்கிலித் தொடராகச் சிகரெட்டைப் புகைக்கவுமில்லை; தமக்கே இயல்பான பாணியில் பொடிதான் போடுகிறார். வில்லனுக்கு இன்றியமையாத சூட்டும் அணிய வில்லை. அடித் தொண்டையில் அலறவில்லை: 'ஹஹ் ஹஹ்ஹா' என்று அட்டகாசச் சிரிப்பு சிரிக்கவுமில்லை. போதாக் குறைக்கு, தலையில் சிண்டு வேறு வைத்திருக்கிறார். பின்னே, 'என்ன வில்லன் வேண்டிக் கிடக்கிறது' என்கிறீர்களா? அதுதான் தவறு. இத்தனைக்கும் இடையில் வில்லன் வேலையையும் ஒழுங்காகச் செய்கிறார்.

பண்ணை வண்டியை வழியில் மடக்கி, ஆட்களை விட்டுத் தாக்கச் சொல்லிப் பணத்தை அமுக்க முயன்ற காட்சியில் சாரங்கபாணி நன்றாய் நடிக்கிறார். பண்ணையை அடமானம் வைத்துக் கடன் வாங்கி, பட்டணம் போய் நாடகக் கம்பெனி நடத்த முயன்றபோதும், நாடக மேடையில் பெண் வேடம் தாங்கி நடனமாடியபோதும், நாடகக் கம்பெனியின் கூட்டாளியோடு கைகலந்து அவனைக் கத்தியால் குத்தி விட்டு ஓடியபோதும் அவர் நடிப்பு விறுவிறுப்பாக அமைந்திருக்கிறது.

நாடகக் கம்பெனி கூட்டாளியாக நடிக்கும் சாயிராம் பல படங்களில் பல வேடங்களில் தோன்றியிருக்கிறார். சில சமயம் தேவைப்பட்டும், பல சமயம் தேவைப்படாமலும் போகும் பாகங்கள் அவை. இந்தப் படத்தில் அவர் சிறிது நேரமே வந்தாலும் மிகவும் நன்றாய் கச்சிதமாய் நடிக்கிறார்.

''நாடகக் கம்பெனியில் எனக்கும் பங்கு உண்டு, இல்லையா?'' என்று சாயிராம் அவனுடன் கேட்டதும், ''யாரையா இல்லையென்றார்கள்? உழைப்பில் உமக்குப் பங்கு உண்டு'' என்று சாரங்கபாணி கூறுவது பளிச்சென்று இருக்கிறது.

# குடும்ப கௌரவம்

இந்தக் கதையில் குறிப்பிட வேண்டிய அம்சம் ஒன்று. காதலுக்கும் வழியில்லை; கல்யாணத்துக்கும் இடமில்லை.

ஜெமினி கணேசன் கோபாலாக வருகிறார். அவர் மனைவி சரளாவாக, சாவித்திரி நடிக்கிறார். குடும்ப கௌரவத்தைப் பாதுகாக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அவர்கள் இருவருக்கும் காதலிக்க அவகாசமில்லை. அவர்களுக்குக் கல்யாணம் ஆனபிறகு படம் ஆரம்பமாவதால், அவர்கள் காதல் ஏற்கனவே முடிவடைந்திருக்கலாம்.

''எங்கள் வீட்டு மகாலக்ஷ்மி'' மாதிரியே வருகிறார், சாவித்திரி. அத்தையின் கொடுமையினால் சிறிது கண்கலங்க நேர்ந்தாலும்,

அவனோடு தனிக்குடித்தனம் போகும் வாய்ப்பு அவருக்குக் கிடைக்கிறது.

'கூட்டும், பூட்டுமாக எல்லாப் படங்களிலும் வரும் ஜெமினி கணேசன் இந்தப் படத்தில் வேட்டியும் மூண்டாசும் கட்டி வண்டி ஓட்டுகிறார்; வண்டி யோட்டிக் கொண்டு போகும் போது வழி மறித்த கயவர்களைத் தடிகொண்டு செம்மையாகச் சாடுகிறார். ''காலம் மாறிப் போச்சு'' போலிருக்கிறது!

# தாந்தன்

ஜெமினி கணேசன் சோக முடிவைக் கொள்ளாத எந்தப் படத்திலும் கதாநாயகனாக நடிப்பதற்கு ஏற்ற முகவெட்டு உள்ள நல்ல நடிகர். ''மிஸ்ஸியம்மா,'' ''யார் பையன்?'' போன்ற அவர் கதாநாயகனாக நடித்துப் புகழ் பெற்ற படங்களை உதாரணமாகக் கொள்ளலாம். ஆரம்பத்தில் எத்தனை தகராறுகளும் வேதனைகளும் சோதனைகளும் வந்து குறுக்கிட்டாலும் கடைசியில் எல்லாம் சீர்ப்பட்டு நல்லபடியாக முடியும் படங்களில் அவர் நன்றாய் நடிப்பார். ''பெண்ணின் பெருமை'' அவருடைய நல்ல நடிப்புக்கு ஓர் எடுத்துக்காட்டு. அந்தப் படத்தில் ஒரு பைத்தியக்காரன் பாகத்தை ஏற்றுச் சக்கைப் போடு போட்டிருக்கிறார். ஆனால் சமீபத்தில் அவர் நடித்த படங்களில் அவரது விசேஷ நடிப்பு எதையும் காண முடியவில்லை. காரணம் திரைக் கதையின் ஒரே மாதிரி அமைப்புத்தான் போலிருக்கிறது.

திறமையுள்ள நடிகர்களா யிருந்தால்கூட அவர்களுடைய திறமையினால் மட்டும் ஒரு படம் சோபிக்க முடியாது. ஒரு சங்கீதக் கச்சேரி சோபிக்க வேண்டுமானால், பாடகர் நன்றாய்ப் பாடவேண்டும்; பக்க வாத்தியக் காரர்கள் அவரை அநுசரித்து அழகாக வாசிக்க வேண்டும்; அத்துடன் சங்கீதம் கேட்பவர்களும் நல்ல ரஸிகர்களா யிருக்க வேண்டும். இதேபோல ஒரு படம் நன்றாயமைவதற்கும் எத்தனையோ அம்சங்கள் ஒன்று சேர்ந்து நல்லபடியாக உருவாக வேண்டியிருக்கிறது. ஒரு நடிகரின் சிறப்பியல்புகளை நன்கு கவனித்து அவற்றைப் பயன்படுத்த டைரக்டர் முயல வேண்டும். அதற்குக் கதாசிரியரின் ஒத்துழைப்பும் வேண்டும்.

படாதிபதிகளும், சினிமாக் கதை ஆசிரியர்களும் சிறிது சிந்தனையைச் செலுத்தி, கதா பாத்திரங்களின் மூலம் நடிகர்களின் நடிப்புத் திறமையை நன்கு வெளிப்படுத்த முயல வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**மோ**கனா என்னும் நடனப் பெண்ணாக ஈ. வி. சரோஜா தோன்றி அழகாக நடனமாடுகிறார். பிரதாப் மோகனாவின் எழிலில் ஈடுபட்டுப் பணத்தை அவளிடம் கொட்டுகிறான். மோகனா காதலை விடக் கல்யாணம்தான் முக்கியம் என்று தன் அபிநயத்தின் மூலம் வலியுறுத்துகிறாள். அப்பொழுது அவர் முக பாவங்களும், வளைவு நெளிவுகளும் மிகவும் நன்றா யிருக்கின்றன.

பிரதாபாக நடிக்கும் வி. ஆர். ராஜகோபால் தமக்கே உரிய இயல்பான ஹாஸ்ய அபிநயங்களுடன் நன்றாய் நடித்திருக்கிறார்.

மார்கழி மாதத்துக்குளிர், சித்திரைமாதத்து வெய்யில், காங்கிரஸ் மகாசபை அக்கிராசனரின் தலைமை உரை — ஆகியவை யெல்லாம் ஆண்டு தோறும் ஒரே மாதிரி இருப்பது வழக்கம். அவைகளுடன் கண்ணாம்பா ஏற்கும் பாகங்களையும் சேர்த்துக் கொள்ளலாம். அவர் தாயாக வரும் படத்தில் மகனாக நடிப்பவர் தம்முடைய கன்னத்தில் அடி வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். ''குடும்ப கௌரவத்''திலும் கோபாலுக்கு அவரிடம் கன்னத்தில் அடி கிடைக்கிறது. கணீர்என்ற வசனங்களும் இருக்கின்றன. ஆனால் ஒரு மாறுதல்—படபடவென்று பொரியும் கண்ணாம்பாவின் வழக்கமான சொற்பொழிவு இல்லை.

பண்ணையார் கனகரத்தினமாக நடிக்கும் துரைசாமி பல தமிழ்ப் படங்களில் உயிர் கொடுத்து நடித்து நன்கு அநுபவப்பட்டவர்! அவர் அநுபவம் இந்தப் படத்தில் அவரைக் கைவிட்டு விடவில்லை.

''காலை மலர்ந்ததடி கண்ணே—உன்கடமையைச் செய்யடி பெண்ணே'' என்ற மருதகாசி இயற்றிய பாட்டை, பி. லீலா பாடியிருக்கிறார். நன்றா யிருக்கிறது.

வசனம் உதயகுமார் எழுதியிருக்கிறார். விக்ரம் புரொடக்ஷன்லாரின் ''குடும்ப கௌரவ''த்தைத் தயாரித்து டைரக்ஷன் பொறுப்பையும் ஏற்றிருப்பவர் திரு பி. எஸ். ரங்கா.

நிலத் தகராறுகள் சம்பந்தமாகப் பழைய விஷயங்களையே சொல்லாமல் புது விஷயங்களையும் புகுத்திப் படம் தயாரித்தால் நன்றா யிருக்கும். ஒரு படத்தில் புதிதாகப் பார்த்து ரஸிக்க ஒரு அம்சம் கூட இல்லையென்றால், அதைப்பற்றி விமரிசனத்தில் மட்டும் புதிதாக என்ன எழுதிவிட முடியும்?







மேலே: வாலாஜாபாத் இந்துமத பாடசாலையையும் அதைச் சார்ந்த மாணவர் இல்லத்தையும், தொழிற்கூடத்தையும் பிப்ரவரி 2-ந்தேதி சென்னை கவர்னர் திரு விஷ்ணுராம் மேதி பார்வையிட்டு மாணவர்களுக்கு வாழ்த்துரை கூறினார். பாடசாலைச் செயலாளர் திரு மாணிக்கமணி முதலியார் நன்றி கூறினார். கவர்னர் அவர்களை வரவேற்கும் காட்சியைப் படத்தில் காணலாம்.

நடுவில்: கல்கத்தாவில் நிகழ்ந்த அகில இந்திய ஷாலிமார் பெயின்ட் விற்பனையாளர் மகாநாட்டுக்குச் சென்னைப் பிரிவு மானேஜர் திரு பி. ஆர். ராமானுஜம் விஜயம் செய்தார். அப்போது நடைபெற்ற விருந்தில் தலைமைக் காரியாலய அதிகாரிகளோடு மகாநாட்டுக்கு வந்திருந்த டிவிஷனல் மானேஜர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

கீழே: மாம்பலம் ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப் பாடசாலை சிறுவர்களால் பிப்ரவரி 22ந் தேதி அன்று பக்த மார்க்கண்டேயர் நாடகம் நடிக்கப்பட்டது. சிறுவர்கள் எல்லோருமே சிறப்பாக நடித்தனர். மேற்படி நாடகத்தில் நடித்த குழந்தைகளைப் படத்தில் காணலாம்.

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

---

# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.



# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

# பாவை விளக்கு

அகிலன்

## அத்தியாயம் 24

### கண்ணாடிச் சுவரைக் காணீரோ?

அன்றைக்கு இரவு ஆக்ராவில் தங்கி மறுநாள் காலையில் அவர்கள் தில்லிக்குப் புறப்பட்டார்கள். புறப்படுகிற அவசரத்தில் தணிகாசலம் சின்னஞ்சிறு தாஜ்மஹால் சிற்பங்களை வாங்குவதற்கு மறந்து விட்டான். உமா அவனுடைய குறிப்பு நோட்டைப் பிரித்துப் பார்த்து விட்டுச் சிரித்தாள். கடைக்குச் சென்று பளிங்குப் பொம்மைகளை வாங்கிக் கொண்ட பின், நெடுஞ்சாலையில் காரை விரட்டினார் பேராசிரியர்.

''அப்பா! மாமா எதையும் குறிப்பு நோட்டில் எழுதிக் கொள்வார். எழுதியதை யெல்லாம் பிறகு மறந்துவிடுவார்'' என்று 'டயரி'யைப் பார்த்தபடியே கூறினாள் உமா.

''நீ எப்படி இவருடைய குறிப்பு நோட்டைத் திறந்து பார்க்கலாம்?'' என்று தம்முடைய மகளையே மடக்கினார் பேராசிரியர். ''ஏதாவது ரகசியங்களையும் அவர் எழுதி வைத்திருக்கலாம்.''

''எனக்குத் தெரியாத ரகசியம் மாமாவிடம் என்ன இருக்கிறது? குறிப்பில் எழுதியிருப்பதையே இவருக்கு நான்தான் நினைவுபடுத்த வேண்டும்!''

உமா கலகலவென்று நகைத்தாள். அத்துடன் அவள் அவனை விடவில்லை.

''இவருக்கும் ஞாபகசக்திக்கும் வெகு தூரம் அப்பா! இவர் எழுதுகிற கையெழுத்துப் பிரதியில், முதல்பக்கத்தில் தங்கராஜன் என்ற பெயரில் வருகிறவர், அடுத்த பக்கத்தில் தங்கசாமியாக மாறி, மூன்றாவது பக்கத்தில் குப்புசாமியாகக் காட்சி யளிப்பார்! நான்தான் அதை யெல்லாம் கவனித்து அனுப்ப வேண்டும். சில சமயங்களில் செத்துப் போன கதாபாத்திரங்களையே பிழைக்க வைத்து விடுவார்!''

தணிகாசலம் தன்னுடைய மறதியை எண்ணிப் பரிதாபமாக விழித்தான். சந்திரசேகரன் அறுபது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்த காரைச் சட்டென்று நிறுத்தி, தம்முடைய சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து, அதில் ஒரு மருந்தை எழுதி அவனிடம் கொடுத்தார்.

''எதற்கும் இந்த மருந்தை வாங்கிச் சாப்பிடுங்கள். மறதி குறையும்.''

உமா தணிகாசலத்தின் கையிலிருந்த சீட்டைப் பிடுங்கித் தானே பத்திரப் படுத்திக் கொண்டாள்.

''இதைப் போய் மாமாவிடம் கொடுக்கிறீர்களே? கதையைப்பற்றி யோசனை செய்துகொண்டே காகிதத்தைக் காற்றில் பறக்க விட்டு விடுவார். அப்படியே கடைக்குப் போய் மருந்து வாங்கினாலும், இந்த மருந்து பத்திரமாய்



வீட்டுக்கு வந்து சேராது. அப்படியே வந்து சேர்ந்தாலும் அதை நான் கௌரியிடம் எடுத்துக் கொடுத்து, இவருக்குப் புகட்டச் சொல்ல வேண்டும்!''

உமாவின் பரிகாசம் எல்லையை மீறியது. நேற்று மாலை அந்தக் கோபுரத்துத் தூணில் நடந்த நிகழ்ச்சிகள் அவளிடம் எதிர்பாராத நெகிழ்ச்சியை ஏற்படுத்தியிருந்தன. அவனுடைய துன்பம் கண்டு அவன் தவித்த தவிப்புக்களால் அவள் ஊக்கம் பெற்றிருந்தாள். அவனுடைய வாயைத் திறக்க விடாமல் அவள் கேலி செய்தாள். நகைப்புக்கிடமாகவே அவனை ஆக்கி விட்டாள். அவனுடைய தந்தையாரின் முன்னால் வைத்துக் கொண்டு அவளைக் கண்டிப்பதற்கும் அவனுக்கு மனமில்லை. 'இருக்கட்டும், நீ மாம்பலத்துக்கு வா; அங்கே உன்னுடைய நாக்கை அறுத்து, உன்னைத் தோப்புக்கரணம் போட வைக்கிறேன்' என்று புழுங்கினான் தணிகாசலம்.

''புகழ் பெற்ற எழுத்தாளரையே இந்தப் பாடுபடுத்துகிறாளே!'' என்றார் சந்திரசேகரன். ''நீங்கள் உமாவுக்கு இப்படியா செல்லம் கொடுப்பது? அடங்காப் பிடாரியாக மாறிவிட்டாள்.''

''புகழ் பெற்ற மனிதனாக இருப்பதால் தான் எனக்கு இத்தனை தொல்லைகள். பணம் பெற்றவனாக இருந்தால், யாரையாவது சம்பளத்துக்கு ஆள் வைத்துக் கொண்டு அதட்டி வேலை வாங்கலாம். இவள் என்னையே அதட்டுகிறாள்!''

பேராசிரியருக்குப் பெருமை தாங்கவில்லை. ''சர்க்கஸ்காரன் கரடி, புலி, சிங்கத்தையெல்லாம் மடக்கி வைத்து வித்தைகள் காட்டுகிறான். வீட்டிலே அவன் வளர்க்கும் செல்லப் பிள்ளை அவன் மேல் குதிரை சவாரி செய்கிறது. என்னை விட்டு விட்டு உமா உங்களைப் பிடித்துக் கொண்டாள்'' என்றார்.

''என்னுடைய பலவீனத்தால் உங்கள் பெண் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வருகிறாள். என் வீட்டில் எல்லோரையுமே இவள் காக்காய் பிடித்து விட்டாள். கௌரிக்கோ, அம்மாவுக்கோ என்னிடம் ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் உமாவைத் தூது அனுப்புகிறார்கள். பாருங்கள், இவள் சாமர்த்தியத்தை!''

''உங்கள் குடும்பத்துக்கு இவள் தொடர்புநல அதிகாரியாக வேலை பார்க்கிறாள். போதும்! அப்படியானால் ஊராரின் கண் படாமல் பார்த்துக் கொள்ளுங்கள். நாலு பேர்கள் நாலைச் சொன்னால் உங்களுடைய குடும்பத் தொடர்பே கெட்டுப் போகும்.''

இந்த எச்சரிக்கை மிகவும் நியாயமான எச்சரிக்கை என்று தணிகாசலத்துக்குத் தோன்றியது. கணவன் மனைவிக்குள் உள்ள உறவு கலைந்து போவதற்குக் கூடப் பல இடங்களில் மூன்றாவது மனிதர்களின் தலையீடே காரணம். அப்படி இருக்கும்போது, உமாவின் போக்கே நாளைக்கு எப்படித் திரும்புமென்று எவ்விதம் சொல்ல முடியும்? இன்றைக்கு இப்படியெல்லாம் அன்பை வளர்த்து வருபவள் என்றைக்குமே வளர்த்து வருவாளா?

நாலு பேர்கள் நாலைச் சொல்வதற்கு முன்னால், தானே அதை நினைத்துப் பார்த்தான். அவனுடைய நெற்றியில்

தெளிந்து கொண்டிருந்த நினைவுகளை உமா கண்டுபிடித்து விட்டாள். திடீரென்று அவள் பேராசிரியர்மீது பாய்ந்தாள்; எரிந்து விழுந்தாள்.

''அந்த நாலு பேரைக் கொண்டு போய்க் குப்பையில் கொட்டுங்கள்! எனக்கும் கௌரிக்கும் உள்ள உறவை நீங்களோ, மாமாவோ கூடத் தெரிந்து கொள்ள முடியாது. உங்கள் சகோதரி சௌந்தரத்தம்மாளின் கண் படாமல் இருந்தால் அதுவே போதும்.''

தில்லிக்குப் போனவுடன் பேராசிரியருக்குத் தளர்ச்சி மேலிட்டு விட்டது. பல நாட்களாக அவர்களுடன் அலைந்த அலைச்சலால் அவர் அசதி தாங்காமல் படுக்கையில் விழுந்தார். இரண்டு நாட்கள் சென்ற பின், சென்னையிலிருந்து ருக்மிணியின் திருமண அழைப்புடன், சௌந்தரத்தம்மாள் கடிதமும் எழுதியிருந்தாள். தணிகாசலத்தின் விடுமுறையும் இன்னும் ஐந்து நாட்களே மீதம் இருந்தன.



அவர்கள் சென்னைக்குக் கிளம்பினார்கள். உமாவுக்குத் தன்னுடைய சித்தி சந்திரலேகாவையும் அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று ஆவல். அதைப் பேராசிரியர் தடுத்து விட்டார். ''இப்போது சந்திரலேகா அங்கே வரக்கூடாது; காலம் வரும்போது நானே அவளை அழைத்து வருகிறேன். அது வரையில் இவள் ஒருத்தி என்னுடன் இருப்பதே அங்கு யாருக்கும் தெரிய வேண்டாம்!'' என்றார் சந்திரசேகரன்.

பேராசிரியரின் உடல்நிலை காரணமாக அவர்கள் முதல் வகுப்புப் பெட்டியை ஒதுக்கிக் கொண்டு அதில் பிரயாணம் செய்தார்கள். சந்திரலேகாவுக்கும், உமாவுக்கும் ஏற்பட்ட நெருக்கம் அவர்களது பிரிவின்போது வெளிப்பட்டது. பெற்று வளர்த்த தாயைப் போலவே இந்தப் பெருந்தாய் கண் கலங்கினாள். பிரயாணத்தின்போது பேராசிரியரை நன்றாகக் கவனித்துக் கொள்ளும்படி உமாவிடம் அவள் வற்புறுத்தினாள்.

''இவர் பச்சைத் தண்ணீர் கேட்டால் கூடக் கொடுக்காதே! சென்னைக்குப் போய் வெந்நீரில் குளிக்கலாம் என்று சொல். மத்தியில் உங்களிடம் பேச்சுக் கொடுத்து உடம்பை அலட்டிக் கொள்வார். அவரைப் பேசவிடாமல் ஊருக்குக் கொண்டு போய்ச் சேருங்கள்.''

பேசாவிட்டால் தலை சுக்கு நூறாய் வெடித்து விடும் பேராசிரியருக்கு. பேசுவதற்கு அவர் வாயைத் திறந்தபோதெல்லாம் உமா அவர் வாயைப்பொத்தி ''உஸ்!'' என்று

பயமுறுத்தினாள். பகல் பொழுது முழுவதும், ஆயிரம் முறை வாயைத் திறந்து உமாவிடம் தோல்வி கண்ட பிறகு, இரவில் நிம்மதியாக உறங்கினார். மறு நாள் நீட்டிப் படுத்தபடியே புத்தகங்களைத் துணை கொள்ளத் துடித்தார். நல்ல வேளையாக ஒரு 'அருமையான' புத்தகம் அவர் கையில் கிடைத்தது. தூக்க மாத்திரைகளுக்குப் பதிலாக விற்பனை செய்யப்பட வேண்டிய புத்தகம். நாலு பக்கங்களைப் புரட்டியவுடன் ஓசை நயத்தோடு குறட்டை ஒலி எழுப்பினார் சந்திரசேகரன். ''கிர்...ர்,...... கிர்...ர்,....கிர்ர் !''

கீழே நழுவி விழுந்த புத்தகத்தை எடுத்து ஆவலுடன் பிரித்தாள் உமா. முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு பாதிப் பகுதி வரையிலும் படித்தாள். மேலே ஓடவில்லை.

''இந்த இருபதாம் நூற்றாண்டில் யாருக்குமே தமிழ் எழுதத் தெரியவில்லை என்று சாதித்திருக்கிறார், மாமா! நடை கிடையாதாம்; புதிய கற்பனைகள் இல்லையாம்; சங்க காலத்தோடு தமிழ் தேங்கி விட்டதாம்.''

தணிகாசலம் அவள் கோபத்தைக் கண்டு நகைத்தான். ''பாவம்! அப்பாவி மனிதர்; விட்டுத் தள்ளு. பிழைப்புக்காகச் சில ஆண்டுகள் பழந் தமிழ் படித்து விட்டால், தங்களுக்கு எதையும் சொல்வதற்குத் தகுதி இருக்கிறதென்று சிலர் நினைக்கிறார்கள். இன்றையத் தமிழ் அகலம் நிறைந்த ஆற்று வெள்ளம் போன்றது. இதில் ஆழத்தைக் கண்டு பிடிப்பது அவ்வளவு எளிதல்ல. இன்றைய வாழ்க்கையைப் படித்தவர்கள், இன்றையக் கதை—கட்டுரைகளை ஆழ்ந்து படிப்பவர்களே பழிப்பதற்குத் தகுதி உள்ளவர்கள். எதிர்காலப் பரம்பரை சொல்ல வேண்டிய முடிவு இது.''

உமா தன்னுடைய கல்லூரியில் பணியாற்றும் இரண்டு தமிழாசிரியைகளைப் பற்றிச் சொன்னாள். ஒரு பெண்மணி, இன்றைய எழுத்துக்களைப் படிக்காமலே, எழுத்தாளர்களை வகுப்புக்களில் கேலி செய்வாராம். மற்றொரு பெண்மணி சங்கத் தமிழோடு இன்றையத் தமிழையும், பிற நாட்டு இலக்கியங்களையும் ஒப்பு நோக்கிப் பாடம் சொல்வாராம்.

''இவர்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''உரை நடைத் தமிழைத் திரும்பிப் பார்க்காத அம்மையாரை 'மியூஸியத்தில் — செத்த காலேஜில் — காட்சிப் பொருளாக வைக்க வேண்டும். தமிழையும் இன்றைய வாழ்வையும் ஒப்பிட்டுப்

பார்ப்பவரிடம் மாணவச் செல்வங்களை ஒப்புவிக்க வேண்டும். பழந் தமிழில் பல சாகாத இலக்கியக் கோபுரங்கள் இருக்கின்றன. ஆனால் எந்த நேரமும் அவற்றின் நிழலில் போய்க் குடியிருக்க முடியுமா? இன்றைய எழுத்துக்களாலான சில புத்தம் புது வீடுகளிலும் நம்மவர்கள் குடியிருந்து பழக வேண்டும். மோசமான வீடுகள், சுமாரான வீடுகள், நல்ல வீடுகள்—எவை எவை என்று பிரித்தறிய வேண்டும்.''

பிறகு தணிகாசலம் அவளிடம் மனம் விட்டுத் தன்னுடைய துறையில் உள்ள சிரமங்களைச் சொல்லிக் கொண்டு வந்தான். நடுநிலையில் நின்று சமூகத்தை ஆராய்ச்சி செய்வதிலுள்ள இடர்ப்பாடுகளை விவரித்தான். எழுத்தின் வளர்ச்சியை எப்படியெல்லாம் அரசியல், சமூக, பொருளாதாரப் போராட்டங்கள் பாதிக்கின்றன என்பதைக் கூறினான். ''அலைகடலின் நடுவில் தன்னந்தனியாக அகப்பட்டுக் கொண்டவன் போல் பல வேளைகளில் மனம் நொந்து போகிறேன். படகை மேற்கொண்டு ஓட்டிச் செல்வதற்குத் தெம்பு வருவதில்லை. துடுப்பு வலிக்கும் கை சில வேளைகளில் நடுங்குகிறது.''

''படகு!......துடுப்பு!......'' என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள் உமா. பிறகு அவற்றையே பலமுறை திரும்பத் திரும்ப முணுமுணுத்தாள். கனவிலிருந்து விழித்துக் கொண்டவள்போல், ''நீங்கள் கலங்க வேண்டாம், மாமா! உங்களுடைய படகாகக் கௌரி இருக்கிறாள்; நான்...நான் வந்து...'' என்று இழுத்தாள்.

''என்ன!...... உன் மனத்தில் நினைப்பதைச் சொல்லி விடு.''

''நீங்கள் படகோட்டி என்றால், நான் உங்கள் கைத்துடுப்பாக என்றைக்கும் இருக்கக் கூடாதா?''

''நீ என்ன சொல்கிறாய்?''

''நான் கன்னியாகவே இருக்கப் போகிறேன்: ஆனால் 'அதற்குக் காரணம் தெரியாது' என்று முன்பு ஒரு நாள் கூறினேனல்லவா? கடற்கரையில் உங்களிடம் சொல்லவில்லையா? இப்போது காரணம் தெரிந்து விட்டது. நீங்கள் உங்கள் எழுத்திடமிருந்து என்னைப் பிரிக்கக் கூடாது!''

தணிகாசலம் திடுக்கிட்டுத் தன் பேச்சை நிறுத்தினான். ''அது முடியவே முடியாது, உமா! நடைமுறை உலகம் வேறு. கற்பனை உலகம் வேறு. லட்சியம் என்ற கண்ணாடிச் சுவரை எழுப்பிக் கொண்டு நாம் இருவரும் நெருங்கிப் பழகினால், கண்ணாடிச் சுவர் மற்றவர்

களுக்குத் தெரியாது. நம்முடைய பழக்கம்தான் தெரியும். நம்மைப் பலர் தூற்றுவார்கள்.''

''தூற்றட்டுமே!''

தணிகாசலத்துக்கு உமாவிடம் நம்பிக்கை இருந்தது. அவள் உலகம் தெரிந்தவள். ஆனால் அவனுக்குத் தன்னிடம் நம்பிக்கையில்லை. எந்த நேரத்திலும் கண்ணாடிச் சுவரைத் தூள் தூளாக உடைத்தெறியும் முரட்டுத்தனம் தன்னிடம் இருப்பதை அவன் உணர்ந்தான்.

''எந்தப் பெண்ணும் எந்த ஆணையும் அவன் தன் கணவனாகவோ, உடன் பிறந்தவனாகவோ, தந்தையாகவோ இருந்தால் தவிரத் தனி இடங்களில் நம்பக் கூடாது. ஆண் மனம் கவர்ச்சியால் கலங்கக் கூடிய சஞ்சல சுபாவமுடையது.''

அவன் பேச்சைக் கேட்டு, அலட்சியமாய் முகத்தைச் சுளித்து விட்டு, ''அதோ, அங்கு பாருங்கள்!'' என்று சன்னலுக்கு வெளியே கரத்தை நீட்டினாள் உமா.

கவர்ச்சி மிக்க காட்சிகள் ரயிலுக்கு இரு புறங்களிலும் பெருகி வழிந்தன.

அப்போது விந்திய மலைச் சாரலில், அடர்ந்த காடுகளைக் கிழித்துக் கொண்டு பாயும் சிறு நதி போல், இரும்புத் தண்டவாளங்களில் உருண்டோடியது புகை வண்டி. இளவேனிற் காலத்தின் எக்களிப்பும் குதூகலமும் எங்கு பார்த்தாலும் கண் கொள்ளாக் காட்சி! நெருப்புத் திவலைகள் கொழுந்துவிட்டெரிவதுபோல் குபீர் குபீரென்று மஞ்சளாகவும் சிவப்பாகவும், புரசை மரங்கள் மலர்க் கூட்டத்துடன் நின்று கொண்டிருந்தன. வெள்ளை வெளேரென்று ஒரு பக்கம் பூத்துக் குலுங்கிய தேக்கு மரக் காட்டில் மருந்துக்குக் கூட ஒரு பச்சை இலை கண்களில் தென்படவில்லை. உலகம் அப்போது இளமையைப் பாடி, இன்ப வெள்ளம் பாய்ச்சி நின்றது.

கவிதை மனம் படைத்த உமா சும்மா இருப்பாளா? கண்களில் களிவெறி துள்ளச் சன்னலில் போய் விழுந்தாள்.

''மாமா! மலர்க் கூட்டமா இது? இல்லவே இல்லை! இளவேனிற் காலத்தின் இன்பத் தீ எப்படியெல்லாம் இந்தப் பயங்கரமான கானகத்தில் கொழுந்து விட்டெரிகிறது, பாருங்கள்! தங்கள் அழகை வெளிப்படுத்திக் கொள்ள இந்த மரங்கள் கற்றுக் கொண்டிருக்கும் தந்திர வித்தைகளைப் பார்த்தீர்களா? படித்த பெண்கள் பல்வேறு நிறத்தில் உடை உடுத்தினால் நீங்கள் கேலி செய்கிறீர்களே! இப்போது இதற்கென்ன பதில் சொல்கிறீர்கள்?—மாமா! கடவுள் ஏன் என்னைப் பஞ்சவர்ணக் கிளியாகப் படைத்து இந்தச் சோலை வனத்தில் பறக்க விடவில்லை? ஏன், மாமா! இன்னும் எனக்குச் சிறகு முளைக்கவில்லை?''

உமா இந்தக் கேள்வியைக் கேட்டவுடன் தணிகாசலம் தன்னை மறந்தான். தான் பிரயாணம் செய்வதையும் மறந்தான். அவன் மனத் திரையில் உமா தோன்றினாள். 'மாமா! கடவுள் ஏன் என்னைப் பஞ்சவர்ணக் கிளியாகப் படைத்து இந்தச் சோலைவனத்தில் பறக்க விடவில்லை' என்று மீண்டும் மீண்டும் கேட்டாள். அது அவன் செவிகளில் அமுத தாரையாகப் பொழிந்து கொண்டிருந்தது. அதைக் கேட்டு அனுபவித்துக் கொண்டே இருந்தான்.

அடுத்த கணம் தணிகாசலம் சுய உணர்வுபெற்றான். கவிஞனுகமாறினான். அந்த இயற்கை வனப்பையும், அதைச் சுட்டிக் காட்டியவளின் வனப்பையும் கண் குளிரப் பார்த்தான். பஞ்சவர்ணப் பட்டாடைதான் அவளும் உடுத்தியிருந்தாள். கிளிமொழியாக இல்லாவிட்டால் அவள் சொற்கள் இவ்வளவு அழுத்தமாக அவன் மனத்திரையில் அந்தக் காட்சிகளைத் தீட்டியிருக்க முடியாது.

''ஏன் மாமா, சாமியைப் போல் 'உம்' மென்று உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''சாமியார்களும் கற்பனையாளர்களும் தவம் செய்வது வழக்கம். ஒன்று கடவுளுக்காக; மற்றொன்று கலைக்காக!''

''தவம் செய்கிற நேரத்தைப் பாருங்கள்!''

''நீதான் எனக்குமாய்ச் சேர்த்துக் கொண்டு இறக்கை கட்டிப் பறக்கிறாயே? தேன் சிட்டு தேன் சேகரித்து, தான் கூடச் சாப்பிடாமல் எனக்குக் கொடுத்து வருகிறது. நான் அதைக் குடித்துவிட்டு மயங்கிக் கொண்டிருக்கிறேன்.''

அவன் தனக்குள், 'உமா!' என்று சொல்லிக்கொண்டே நீண்ட பெருமூச்சு ஒன்றை விட்டான்.

பிறகு அவர்கள் பேராசிரியரை எழுப்பி வைத்துக்கொண்டு, சாப்பாட்டுக்காக, அடுத்த 'ஸ்டேஷனை' எதிர் பார்த்தார்கள்.

* * *

மூன்று நாட்கள் ரயில் பிரயாணம் மிகவும் விந்தை நிறைந்ததாகத் தோன்றியது தணிகாசலத்துக்கு. ஓடுகிற ரயிலில் கூட அவன் எழுத்தும் படிப்பும் தடைப்படவில்லை. கையில் புத்தகத்தையோ, பேனாவையோ எடுத்து விட்



# கல்கி

ஏப்ரல் 13உ

புத்தாண்டு மலரில்

கி.ராஜேந்திரன்

எழுதும்

# வாங்கிவரும் வருநிலவு

புதிய தொடர்கதை

ஆரம்பமாகிறது



டால், ஓடுகிற ரயில் கவிழ்ந்து விழுந்தால் கூட அவனுக்கு அது அதிர்ச்சி தராது. தேவலோகத்திலிருந்து ஊர்வசியும், அரம்பையும் இறங்கி வந்து நடனமாடினாலும், "தயவுசெய்து உங்கள் நடனத்தைக் கொஞ்சம் அப்புறம் வைத்துக் கொள்ளுங்கள்" என்று தயங்காமல் கூறுவான்.

உமா என்ற உணர்ச்சிக் குவியல் நிறைந்த நெருப்போடு இத்தனை ஆண்டுகள் அவனால் எப்படி நெருங்கிப் பழக முடிந்தது என்று யாரும் வியப்படைய வேண்டியதில்லை. அவனுக்குள்ளே இருந்த மற்றொரு மனிதனுக்கு முன்னால் உலகமே சிறு துரும்பு. அவன் உழைப்பே அவன் செய்த தவம்.

உமா இந்த மூன்று நாட்களிலும், ஒரு பக்கம் பேராசிரியரிடமும், மறு பக்கம் அவனிடமும் அகப்பட்டுக் கொண்டு படாதபாடு பட்டாள். இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்த தாயாரின் நிலையாவது ஓரளவு தேவலாம். இரண்டுமே வயது வளர்ந்த தடிக் குழந்தைகள்!

இரண்டையும் அதிகாலையில் எழுப்பி விட வேண்டும்; பல் விளக்கச் சொல்ல வேண்டும்; காப்பி வரவழைத்துக் கொடுக்க வேண்டும்; சிற்றுண்டி-சாப்பாட்டுக்கு நினைவுபடுத்த வேண்டும்; மாற்றுடைகளை எதிரில் எடுத்து வைத்துப் போட்டுக் கொள்ளச் சொல்ல வேண்டும்.

தணிகாசலம் கௌரியைக் கல்யாணம் செய்துகொள்ளும் வரையிலும் தன்னுடைய சொந்த நலன்களில் கருகருப்பாக இருந்தான். கௌரி வந்தவுடன் பொறுப்பையெல்லாம் அவளிடம் சுமத்தி விட்டான். கௌரியிடம் ஒன்றிப் பழகிய உமா இப்போது பணிவிடைகளில் கௌரியாக மாற வேண்டியிருந்தது.

"பைத்தியக்கார விடுதியில் உள்ள 'வார்டனின்' அவஸ்தை இப்போது எனக்குப் புரிகிறது" என்று கூறிச் சிரித்தாள் உமா.

சென்னை நகரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

'இந்த உமா, இப்படியொரு விலக்க முடியாத தொல்லையாகத் தன்னை மாற்றிக் கொண்டு வருகிறாளே, ஏன்?' என்று அவனுக்குத் தன்னையே கேட்கத் தோன்றியது. பதிலை அவன் தனக்குள் தேடிக் கொண்டும் இருந்தான். பதில் கிடைப்பதற்குள் 'சென்டிரல்' ரயில் நிலையம் வந்து விட்டது.

"இறங்குங்கள், கீழே!" என்றாள் உமா, தணிகாசலத்திடம். தரைமீது அவன் கால்கள் பதிந்தன.

## அத்தியாயம் 25

# கல்யாணச் சந்தடிகள்

சௌந்தரத்தம்மாளைச் சந்திக்காமலே தணிகாசலம் மாடிப் படியேறி மேலே சென்றான். பின்னால் வந்து கொண்டிருந்த உமாவும், நேரே உள்ளே போகாமல், தணிகாசலத்தைப் பின்பற்றி மாடிக்குச் செல்ல முனைந்தாள். அவளுக்கு முதலில் பையன் பரமசிவத்தைப் பார்க்க வேண்டுமென்ற துடிப்பு: கௌரியைக் காண வேண்டுமென்ற ஆவல் எழுந்தன.

"அப்பாவை அழைத்துக் கொண்டு உள்ளே போ, உமா! முதலில் உன் வீட்டாருடன் பேசிக் கொண்டிருந்து விட்டு, பிறகு மாடிக்கு வரலாம்" என்றான் தணிகாசலம்.

கீழே கூடத்தில் ருக்மிணியின் கல்யாணத்துக்காக வந்திருந்த பல பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் சௌந்தரத்தம்மாள் ஏதோ கைவேலையாக இருந்தாள். பெட்டி படுக்கைகளைக் கூலியாள் ஒரு ஓரமாகக் கொண்டு வந்து வைத்தான். தன் சகோதரரையும் உமாவையும் பார்த்த சௌந்தரத்தம்மாள் ஒரு விநாடி முறைத்துப் பார்த்து விட்டு ஒன்றுமே பேசவில்லை. "வாருங்கள்" என்று கூப்பிடவில்லை.

அடுத்த விநாடி உமாவின் மீது பாய்ந்தாள்: "ஏண்டியம்மா, உமா! உனக்கென்ன இனி எங்களை மதிக்க வேண்டுமென்ற அக்கறை? புதுச் சொந்தம் ஏற்பட்டு விட்டது; பழைய உறவை மறந்து விட்டாய். எங்களையெல்லாம் இனிமேல் உனக்கு மனிதர்களாய்த் தோன்றுமா என்ன?"

உமாவும் பேராசிரியரும் இந்த வரவேற்பு அதிசயத்தைக் கண்டு, ஒன்றும் தெரியாமல் விழித்தார்கள். எதற்காக வீட்டில் இப்படி அடி எடுத்து வைப்பதற்கு முன்பே சௌந்தரத்தம்மாள் தங்கள் மீது பாய்கிறாள்? அதிலும் வெளியூர் விருந்தினர்களை வைத்துக் கொண்டு, நாகரிகம் தெரிந்து கொள்ளாமல் நடந்து கொள்கிறாளே!

"தில்லியிலிருந்து மாடி வீட்டுத் தம்பியை வரச் சொல்லி, அப்பாவும்

பெண்ணுமாய் வருந்தி வருந்தி அழைத்தீர்களே, அவர் உங்களுக்கு என்ன உறவு? நம்முடைய வீட்டில் பாலு ஒருவன் இருப்பது உங்கள் கண்ணில் படவில்லையா? அவனைக் கூப்பிட்டு எழுதி யிருந்தால் என்ன கெட்டுப் போகும்?'' என்றுள் கோபத்துடன்.

''இதற்குத்தானு உனக்கு இவ்வளவு கோபம்?'' என்று சிரித்தார் சந்திர சேகரன். பாலுவை அங்கே அழைத்திருந்தால் அவருடைய குடும்ப ரகசியம் அம்பலத்துக்கு வந்து விடும். அதற்காகவே அவர் உமாவை எழுத வேண்டாம் என்று தடுத்திருந்தார். ''பாலுவையும் ஒருமுறை அழைத்துக்கொண்டு போகிறேன். இப்போது என்ன அவசரம்?'' என்றுர்.

உமா மற்ருெரு காரணத்தைக் கற்பித்தாள். ''ருக்மிணியின் கல்யாண சமயத்தில் அவன் இங்கே இருந்தால் நல்ல இல்லையா? அதனுல்தான் கூப்பிட வில்லை'' என்றுள்.

''நீ ஏன் கூப்பிடப் போகிருய்? அவனே சிறு பிள்ளை. உனக்கு வேண்டியவர் அந்த மனிதர். உன் வயதுக்கு ஒத்தவரோடு சேர்ந்து கொண்டு கொட்டம் அடிப்பதற்குத்தானே உனக்குப் பிடிக்கும்? ஆமாம்; சொல்ல வேண்டியவரிடம் சொல்லி விடுகிறேன்: இந்தப் பழக்கமெல்லாம் எங்கே போய் நிற்குமோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்.''

உமா அந்த இடத்தில் நிற்காமல் கொல்லைப்புறம் சென்றுள். கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளாத குறையாகத் தன்னைத் தில்லிக்கு அனுப்பி வைத்தவளுக்கு இப்போது ஏன் இந்தப் பொருமை?

பேராசிரியருக்கு, வந்த விருந்தினர்களான பெண்மணிகளின் முன்பு, தைரியமாக முகத்தைக் காட்டிக் கொண்டு நிற்கப் பிடிக்கவில்லை. கூடியிருந்த பெண்கள் ஏதோ ஒரு ரகசியத்தைத் தெரிந்து கொண்டது போல் தங்களுக்குள் கசமுசவென்று பேசிக் கொண்டார்கள். உமாவையும் தணிகாசலத்தையும் சேர்த்து வைத்துப் பேசிய பேச்சு அது. ஏற்கனவே சௌந்தரத்தம்மாள் அதற்குத் தூபம் போட்டு வைத்திருந்தாள். இப்போது பேராசிரியர் சந்திரசேகரனுக்கு முன்பாகவே அது 'குப்'பென்று புகையத் தொடங்கி விட்டது.

சௌந்தரத்தம்மாள் இன்னும் ஒருபடி மேலே போனுள்: '''மாமா! மாமா!' என்று கெஞ்சுகிறுளே, அம்மாவோடு பிறந்த மாமாவா அந்த மனிதர்? வழியில் போகிறவர்களுக்கெல்லாம் செலவு செய்யத்தான் தில்லியில் உத்தியோகம் நடக்கிறதாக்கும். ஐந்நூறு, ஆயிரம் என்று ஊராருக்குச் செலவு செய்து விட்டால், இந்தக் கல்யாணத்தையெல்லாம் யாரை நம்பிச் செய்கிறதாம்? ருக்மிணிக்கு நீங்கள் என்ன சீர் வரிசை கொண்டு வந்திருக்கிறீர்கள்?''

கோபத்தின் காரணம் பணம் என்பது சந்திரசேகரனுக்குப் புரிந்து விட்டது.

சௌந்தரத்தம்மாளைத் தனியாக அழைத்துக் கொண்டு போய்த் தம்முடைய பெட்டியைத் திறந்து காண்பித்தார். ஒரு ஜோடி வைர வளையல்களைக்



கண்களால் கண்ட பிறகுதான் அவளுடைய கோபம் அடங்கியது. இருந்தாலும் தணிகாசலத்துக்காக அவர் செலவு செய்தது அவளுக்குப் பிடிக்கவில்லை. சந்தர்ப்பம் வரும்போது மீண்டும் தன்னுடைய கோபத்தைக் காட்டிப் பணம் பெற வேண்டுமென்பதற்காக, அப்போதைக்கு அவள் பொறுமையைக் கடைப் பிடித்தாள்.

பேராசிரியர் உமாவிடம் சென்று, ''உன் அத்தையிடம் சந்திரலேகாவைப் பற்றித் தவறிப்போய்க் கூடச் சொல்லாதே! சம்பாதிக்கிற பணத்தை யெல்லாம் சந்திரலேகாவே சாப்பிடுவதாக நினைத்துக் கொண்டு இவள் வீண் தொல்லைப் படுவாள்'' என்றுர்.

உமாவுக்கு அன்றைக்கு அந்தப் பெண்களுக்கு மத்தியில் கலந்து பழகுவது மிகவும் கஷ்டமாக இருந்தது. அடுத்த நாளைக்கு அடுத்த நாள் கல்யாணம். அதே தெருவில் குடியிருந்த சண்பகம் என்ற தூரத்து உறவுப் பெண்மணி இந்த விஷயத்தில் தேவைக்கு அதிகமாக அக்கறை காட்டினுள். சண்பகத்தைப் பற்றி அப்படி ஒன்றும் கௌரவமாய்ச் சொல்ல முடியாது. அவளோடு சரிசமமாக நின்று பேசுவதற்குக் கூட உமா முன்பெல்லாம் தயங்குவாள். அவளே இன்றைக்கு உமாவிடம் வந்து நீதி போதனைகள் செய்வதற்குத் தொடங்கி விட்டாள்.

''சீக்கிரம் உன் அப்பாவிடம் சொல்லி ஒரு மாப்பிள்ளை தேடிக் கொள்; மேல் வீட்டுக்காரருடன் பழகிக் கெட்ட பெயர் எடுக்காதே'' என்பது சண்பகத்தின் யோசனை.

உமா இவ்வளவு பெண்களையும் அலட்சியம் செய்து விட்டு மாடிக்கு வந்தாள்.



கல்யாணி அம்மாளையும் கௌரியையும் வைத்துக் கொண்டு தன்னுடைய தில்லி அநுபவங்களைக் கதைகதையாகக் கூறினுள். பையன் பரமசிவம் தாஜ்மஹால் பொம்மையை வைத்துக் கொண்டு அவளுடைய மடியில் ஏறி உட்கார்ந்தான். மாதக் கணக்கில் அவளைக் காணவில்லையாதலால், அவளை இந்தப் பக்கம் அந்தப் பக்கம் அசைய விடாமல் அவன் பார்த்துக் கொண்டான். தன்னிடம் பேசாமல் மற்றவர்களிடம் அவள் பேச்சுக் கொடுத்தது அவனுக்குப் பொறுக்க முடியவில்லை. அவள் சேலையைப் பற்றி இழுத்து, அவள் கன்னத்தைக் கிள்ளி, அவள் மூக்கைக் கடித்து உமாவின் கவனத்தைத் தன் பக்கம் திருப்பினுன்.

''அடுத்த குழந்தையைப் பெண்ணுய்ப் பெற்றுக் கொடு, கௌரி! ஒரு பையனை வளர்ப்பதற்குள் ஒன்பது பெண்களை வளர்த்து விடலாம் போலிருக்கிறது. பெண்ணுக இருந்தால் இப்படி முரட்டுத்தனம் செய்கிற அண்ணனை வழிக்குக் கொண்டு வந்து விடும்.''

பேச்சுக்குத்தான் உமா இப்படிக் கூறினுளே தவிர, பையன் பரமசிவத்தின் திருவிளையாடல்களை அவள் பொறுமையோடு ரசித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய வலது காதை அவன் பல் பதியக் கடித்த போதும் அவளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவனைத் தூக்கி மடியில் போட்டு அமுத்திக் கொண்டே, ''அப்பாவுக்குப் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறுயடா!'' என்று கூறி அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தாள்.

ருக்மிணியின் கல்யாணம் மிகவும் தடபுடலாக நடந்தது. மாப்பிள்ளை வீட்டுக்குச் சொந்தக்காரர்களே நூற்றுக் கணக்கான பேர்கள் வந்திருந்தார்கள். அவர்களுக்காக ஒதுக்கியிருந்த இரண்டு பங்களாக்களும் போதாமல் மூன்ருவது வீட்டைத் தேடிப் பிடித்தாள் சௌந்தரத்தம்மாள். மாப்பிள்ளை வீட்டாருடன், முன்பு ருக்மிணியைப் பெண் பார்க்க வந்த ரவியின் பெற்றோரும் வந்திருந்தார்கள். சௌந்தரத்தம்மாளுக்கு அவர்களைப் புறக்கணித்து விலக்கவும் முடியவில்லை. புது மாப்பிள்ளையின் தகப்பனுரே ரவியின் தகப்பனுருக்கு ஓடி ஓடி உபசாரங்கள் செய்ததால், அவருடைய அந்தஸ்தைச் சௌந்தரத்தம்மாள் புரிந்து கொண்டாள். பழைய கோப தாபங்களையெல்லாம் தனக்குள்ளென்று விழுங்கிக் கொண்டு அவர்களிடம் பொய்ச் சிரிப்பு சிரிக்க வேண்டியிருந்தது.

ரவியின் 'தகப்பனுர்', பேராசிரியர் சந்திரசேகரனைச் சுற்றியே தம்முடைய கண்களை வளைய விட்டார். தாமாக வலிய வந்து அவரிடம் தம்மை அறிமுகம் செய்து கொண்டார். கிராமத்து மனிதராக இருந்தாலும் அநுபவசாலியாகத் தோன்றியதால் சந்திரசேகரனுக்கு அவரிடம் மரியாதைஏற்பட்டது. கல்யாணச் சந்தடிகளுக்கு மத்தியில் பெரியவர்கள் இருவரும் தனித்துப் பேசிக் கொண்டார்கள்.

''உங்கள் பெண் உமாவுக்குத்தான் என் பையனைப் பிடிக்க வில்லை'' என்று பழைய கதையில் தொடங்கி, அன்றைக்கு வரையில் நடந்த புதிய செய்திகளைக் கூறினுர் அவர். ''பையன் ரவி இப்போது இங்கிலாந்துக்கு மேற்பயிற்சிக்காகப் போயிருக்கிறுன். அவன் போய்ச் சில மாதங்களாகின்றன. கல்யாணம் இன்னும் நடக்கவில்லை.

சென்னை, கெயிட்டி - உமா மற்றும் தென்னாடெங்கும்




# பதி பக்தி

சங்கீதம்: விஸ்வநாதன் - ராமமூர்த்தி • நிர்வாகம்: G.N.வேலுமணி

கதை, வசனம்: M.S.சோலைமலை • காமிரா: G.விட்டல்ராவ்

டைரக்ஷன்......
A.பீம்சிங்

*

பூரண உரிமையாளர்
S.K.பிக்சர்ஸ்

BAKTHA

E SANT

# நான்கு மருந்துகள்



சேர்ந்துள்ள

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்து

## துரித நிவாரணமளிக்கிறது.

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனஸினைப்'போல் துரிதமாயும்... அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோபலட்சம் ஜனங்கள் 'அனஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து, துரிதமாயும் பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.







GEOFFREY MANNERS & CO PRIVATE LTD. REGISTERED USER ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைசா

திரும்பி வந்து செய்து கொள்வதாய்ச் சொல்லியிருக்கிறான். உங்கள் பெண்ணிடம் எப்படியோ அவனுக்குப் பிரியம் விழுந்து விட்டது. இன்னும் இரண்டு வருஷத்தில் அவன் திரும்பி விடுவான்.''

அவர் பேசியதைப் பார்த்தால், ஒரு முறை அறுந்து போன நூலை மறுபடியும் ஒட்ட வைப்பதற்கு முயற்சி செய்கிறார் என்று தெரிந்தது. சந்திரசேகரனுக்கும் இந்த வாய்ப்பை நழுவ விட மனமில்லை. ''நானும் உமாவிடம் சொல்லி விட்டுத் தில்லிக்குப் போகிறேன். பச்சைக் குழந்தை அவள். முதலில் இப்படித் தான் பேசுவாள். எதற்கும் நீங்கள் ஊருக்குப் போகும்போது, சௌந்தரத்திடம் தனியாக ஒரு வார்த்தை சொல்லி விட்டுக் கிளம்புங்கள். கரைவாய்க் கரைத்தால் கல்லும் கரையும். உங்கள் பையன் திரும்பி வந்து சேருவதற்குள், அத்தையின் பேச்சைக் கேட்டுப் பெண்ணின் மனம் மாறினாலும் மாறும்.''

ரவியின் தகப்பனார் பேராசிரியரின் வார்த்தைகளை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டார். அதற்கான நடவடிக்கைகளில் அவருக்கு உதவி செய்ய அவர் மனைவி காத்திருந்தாள். அவர்களுக்கும் வேறு நல்ல இடங்களில் பெண் கிடைக்காமல் இல்லை. ஆனால் உமாவைப் போல் படிப்பும் அழகும் ஒன்றியிருந்த பெண்கள் அவர்களில் குறைவு. 'கிடைத்தால் தேவலாம்' என்ற வகையில் முயற்சி செய்தார்கள்.

கல்யாணம் முடிந்த பிறகு இரண்டு நாட்கள் மாம்பலத்தில் தங்கியிருந்தார்கள் அவர்கள். பழைய கோப தாபங்களிலிருந்து சௌந்தரத்தம்மாளை விடுதலை செய்து, அவளுடைய பையனுக்குப் பெண் தேடும் பொறுப்பையும் தாங்களே ஏற்றுக் கொண்டார்கள். பிறகு மெல்ல மெல்ல உமாவைப் பற்றிக் கூறினார்கள். சௌந்தரத்தம்மாள் கைதேர்ந்த ராஜதந்திரியாகப் பிறக்க வேண்டியவள். பெண்ணைக் கொடுத்த இடமும் பெரிய இடம், பெண்ணை எடுக்கும் இடமும் பெரிய இடம், சகோதரர் பெண்ணைத் தள்ளி விடும் இடமும் பெரிய இடம் என்றிருந்தால் அவளுக்கு லாபந்தானே?-யோசனை செய்து ஒப்புக் கொண்டாள். அதனால் தனக்குப் பல அநுகூலங்கள் ஏற்படக் கூடும் என்று அவளுக்குத் தெரிந்தது. விட்டுக் கொடுக்காமல் அவர்களிடம் பேசி, ''என்னால் முடிந்ததைச் செய்கிறேன்'' என்று நிதானமாக வாக்களித்தாள்.

பேராசிரியர் தில்லிக்குத் திரும்பும் போதும் சௌந்தரத்தம்மாளிடம் அதே விஷயத்தைச் சொல்லி விட்டுச் சென்றார். உமாவிடம் நேரடியாகப் பேசுவதற்கு அவருக்குத் துணிவில்லை. ''என்றைக்கும் போல் விளையாட்டுப் பெண்ணாக இருக்காமல் உன் அத்தையின் பேச்சைக் கேட்டு நட!'' என்று புத்திமதி கூறினார்.

சந்திரசேகரனும் ஊருக்குச் சென்ற பிறகு உமாவின் வீடு வெறிச்சென்று கிடந்தது. சௌந்தரத்தம்மாள் தன் பெண்ணை விட்டுப் பிரிவதற்கு மனமில்லாமல் ஒரு மாதம் வரையிலும் அங்குமிங்குமாக இருந்தாள். குடும்பத்தைச் சேர்த்து இழுக்க வேண்டிய பொறுப்பு உமாவின் தலையில் விழுந்தது. கல்லூரியும் திறந்து விட்டார்களாதலால் உமாவுக்கு மூச்சு விட நேரமில்லை. காலையிலும் மாலையிலும் சமையல்; மற்ற நேரத்தில் கல்லூரி. இரவு வேளைகளில் மாடிக்கு வந்து சிறு பொழுது பேசிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு திரும்புவாள்.



சௌந்தரத்தம்மாள் சென்னைக்கு வந்து நிரந்தரமாக நின்ற பிறகே உமாவால் தணிகாசலத்துக்குக் கைகொடுக்க முடிந்தது. இருமலோடு போராடிக் கொண்டிருந்த தணிகாசலத்தின் உடல் நிலையைப் பற்றி அவனிடம் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். அவன் செவி சாய்க்கவில்லை. கல்யாணி அம்மாளிடம் தூண்டிவிட்டு அவனுடைய வேலைகளின் வேகத்தைக் குறைத்தாள். கௌரியிடம் எச்சரிக்கை செய்து அவனுடைய ஆரோக்கியத்தைப் பேணச் செய்தாள். சிறிது சிறிதாக இருமல் நின்றது.

மாதங்கள் சென்றன. பையன் பரமசிவத்துக்கு ஒரு தங்கை பிறந்தாள். பிறப்பதற்கு முன் அது பெண்ணாய்ப் பிறக்க வேண்டுமென்று வேண்டி,

### 'என்ன செய்வீர் ?'

மனைவி — வீட்டில் திடீரென்று திருடன் வந்தால் என்ன செய்வீர்களாம் ?



கணவன் :— கல்யாணமான தினத்திலிருந்து உன்னைக் கேட்காமல் ஒரு காரியம் செய்திருக்கேனு ?

அதற்குப் பெயரும் வைத்து விட்டாள் உமா. கல்யாணி அம்மாளின் பெயரைத் தாங்கிக்கொண்டே அதுபிறந்தது.

"கல்யாணி! கல்யாணி!" என்று கூவி, கலகலக்க வைத்து விட்டாள் உமா. தொழிற்சாலையிலிருந்து திரும்பிய தணிகாசலம் தன்னைப் புதிய குழந்தையுடன் உமா வரவேற்பதைக் கண்டு ஆனந்தம் கொண்டான். அப்படியே கௌரியை உரித்துக் கொண்டு பிறந்திருந்தது குழந்தை.

"இதோ பாருங்கள்! இவள் என் குழந்தை! என்ன தெரிகிறதா?" என்று கேட்டாள் உமா.

தணிகாசலத்துக்குக் கேலிச் சிரிப்பை அடக்க முடியவில்லை. உமாவுக்குக் கோபம் வந்து விட்டது. "எதற்காகச் சிரிக்கிறீர்களாம்? அந்த முரட்டுப் பையன் பரமசிவம் உங்கள் குழந்தை; இந்த அழகுப் பெண் கல்யாணி என் குழந்தை! இதில் என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கிறது?"

"இதோ பார், உமா!" என்று அவளிடம் வினயமாக எச்சரிக்கை செய்தான் தணிகாசலம். அசட்டுத்தனத்துக்கும், முட்டாள்தனத்துக்கும் ஒரு எல்லை இருக்கிறதல்லவா? அந்தக் குடும்பத்தில் அவளுக்குள்ள உரிமையைத் தெரிந்து கொள்ளாதவர்கள் உமாவின் பேச்சைக் கேட்டால் என்ன நினைத்துக் கொள்வார்கள்?

அவளிடம் அவன் கெஞ்சினன். "கல்யாணி உன் குழந்தையாகவே இருக்கட்டும். ஆனல் அதை வெளியில் சொல்லிக் கொண்டால் உன்னைப் பற்றி மற்றவர்கள் நல்ல விதமாக நினைக்க மாட்டார்கள். தாராளமாகக் குழந்தையை வளர்த்துக் கொள். உன் கல்லூரிக்கே வேண்டுமானலும் தூக்கிக் கொண்டு போ. என்னிடம் பேசியதைப் போல் இனி யாரிடமும் உளறிக் கொட்டாதே! நீயே குழந்தையை வளர்த்து, உன் வாயாடித்தனத்துக்கு ஒரு வாரிசாகத் தேடிக் கொள்."

"போங்கள், மாமா! பூச்சாண்டி காட்டுகிறீர்கள்."

"பிறகு உன் இஷ்டம்."

அவள் இஷ்டப்படி கல்யாணியை ஆட்டி வைக்கத் தொடங்கினாள் உமா.

ஒரு நாள் காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடன் தணிகாசலத்தின் வீட்டைத் தேடிக் கொண்டு இரண்டு விருந்தினர்கள் வந்து சேர்ந்தார்கள். முன்பின் அவன் எதிர்பார்க்காத விருந்தினர்கள். அவர்களிடமிருந்து அங்கு வரப் போவதாக அறிவிப்பு ஏதும் இல்லை. அவர்களுடைய வரவையும், அவர்கள் சொல்லிய வரலாற்றையும் கேட்டுத் தணிகாசலம் வியப்பும் திகைப்பும் அடைந்தான்.

தேவகியின் கிராமமான முல்லையூரி லிருந்து வந்தவர்கள் அவர்கள். வேலாயுதமும் வள்ளியும் தங்கள் கிராமத்திலிருந்து சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டார்கள். தணிகாசலம் வள்ளியின் கழுத்தைப் பார்த்தான். அதில் இன்னும் தாலிச் சரடு ஏறவில்லை.

"உங்களிடம் நிறையப் பேசணுங்க. நீங்கதான் எங்களைக் காப்பாத்தணும். உங்களை நம்பி நாங்கள் இந்த ஊருக்கு வந்திருக்கோம். எங்களை நீங்க இந்த வேளையிலே கைவிட்டுட்டா எங்களுக்கு வேறே போக்கிடமில்லைங்க. நாங்க ஜெயிலுக்குப் போக வேண்டியதுதான். எங்கமேலே ஒரு தப்புமில்லைங்க. யாரோ இரண்டு போலீஸ்காரங்க எங்களைச் சந்தேகப்பட்டு ரயிலடியிலே விசாரிச்சாங்க. நாங்க உங்க விலாசத்தைச் சொன்னேம்."

செருக்கும் துணிவும் நிறைந்த நாட்டுப்புறத்து இளைஞனை வேலாயுதம் அப்போது வெளுத்துப் போன முகத்துடன் பரிதாபமாக விழித்தான். வள்ளியின் முகத்தைப் பார்க்கவே சகிக்கவில்லை. பயத்தால் அவள் செத்துப் போய் விட்டாள் என்று சொல்லலாம்.

"உள்ளே வந்து உட்காருங்கள்" என்று அழைத்தான் தணிகாசலம்.

அவர்கள் தயங்கிக் கொண்டே அவனுடைய அறைக்குள் நுழைந்தார்கள்.

உமா வேர்க்க விறுவிறுக்க ஓடி வந்து, "மாமா! உங்களைத் தேடிக்கொண்டு வெளியில் இரண்டு போலீஸ்காரர்கள் வந்திருக்கிறார்கள்" என்றாள்.

இந்தச் சொல்லைக் கேட்டவுடன் ஏன் அந்த நாட்டுப்புறத்துப் பெண் அப்படி 'வீல்!' என்று கத்துகிறாள் என்று உமாவுக்கு விளங்கவில்லை. (தொடரும்)

# வசீகரிக்கும் அரிய சந்தர்ப்பங்கள்!

அத்தகைய விசேஷ சந்தர்ப்பங்களுக்கு இதோ பட்டுப்போன்ற பவுடர். அழியாமலும் கலையாமலும் இருக்கும்: மயங்கச் செய்யும் பிரஞ்சு வாசனைத் திரவியங்களின் அபூர்வமான கலவை உங்களை எப்பொழுதும் ரம்மியமாகவும் வசீகரமாயும் இருக்கச் செய்யும்!




## லக்மி
டால்கம் பவுடர்

லக்மி பிரைவேட் லிட்.
ஒரு டாடா தயாரிப்பு

பாம்பே ஹவுஸ், ப்ரூஸ் தெரு, பம்பாய்-1.

LKM-48 TM.

பொருளாதாரமும் பொது மக்களும் 16

# ராஜ்ய அரசாங்கங்களின் வரவு செலவு



க. சந்தானம்

**1947**-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி பிரிட்டிஷ் அரசாங்கத்தார் பாகிஸ்தானைப் பிரித்துத் தனி நாடாக்கி விட்டு, வெளியேறின பொழுது, பாரதம் பழைய பிரிட்டிஷ் மாகாணங்களாகவும் சுதேச சமஸ்தானங்களாகவும் இருந்தது. சர்தார் பட்டேலின் சாமர்த்தியத்தாலும், தீர்க்க தரிசனத்தாலும் சிறிய சுதேச சமஸ்தானங்களில் சில பக்கத்திலுள்ள மாகாணங்களுடன் இணைக்கப்பட்டும், மற்றவை ஆங்காங்கு சேர்க்கப்பட்டுக் கூடிய வரையில் பெரிய ராஜ்யங்களாகச் செய்யப்பட்டன.

1950–ம் வருஷம் ஜனவர் 26-ம் தேதி புது அரசியல் திட்டம் அமுல் செய்யப்பட்ட பொழுது 9 ஏ வகுப்பு ராஜ்யங்களும் (பழைய மாகாணங்கள்) 8 பி வகுப்பு ராஜ்யங்களும் (முன் சுதேச சமஸ்தானங்கள்) 11 சி வகுப்பு ராஜ்யங்களும் (சில்லறைப் பிரதேசங்கள்) ஆக மொத்தம் 28 பாகங்களாகப் பாரதம் பிரிக்கப் பட்டது. 1953-ல் சென்னையிலிருந்து தெலுங்கு ஜில்லாக்கள் பிரிக்கப்பட்டு ஆந்திர ராஜ்யம் அமைக்கப் பட்டது. 1955-ல் இந்த ராஜ்யங்களை மீண்டும் சேர்த்தும், பிரித்தும் மொழிக்கும் இதர வசதிகளுக்கும் தகுதியான ராஜ்யங்களாக வகுக்க ஒரு கமிஷன் ஏற்படுத்தப்பட்டது. அதன் சிபார்சுகளை ஒட்டிச் சில முக்கிய மாறுதல்களுடன் ராஜ்ய சீரமைப்புச் சட்டம் பார்லிமெண்டில் நிறைவேற்றப்பட்டு, புதிய ராஜ்ய சர்க்கார்கள் 1956 நவம்பர் 1ம் தேதியிலிருந்து வேலை செய்ய ஆரம்பித்தன. இப்பொழுது 14 ராஜ்யங்களும் 6 யூனியன் க்ஷேத்திரங்களும் இருக்கின்றன. ஜம்மு காஷ்மீரத்தைத் தவிர எல்லா ராஜ்யங்களும் ஒரு கவர்னர் தலைமையில் ஒரேவித ராஜ்ய அரசியல் முறையில் நடந்து வருகின்றன. ஜம்மு காஷ்மீரம் ஓர் தனி அரசியல் சட்டத்துக்குட்பட்டிருந்தாலும், ஏறக்குறைய ராஜ்ய அரசியல் முறையையே அனுசரித்து, நடந்து வருகின்றது. சில முக்கியமில்லாத அம்சங்களைத் தவிர, மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் இதர ராஜ்யங்களைப் போலவே ஜம்மு காஷ்மீரத்திலும் செல்லுகின்றது. யூனியன் க்ஷேத்திரங்கள் நேரில் மத்திய அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருக்கின்றன. அவற்றின் வரவு செலவுகள் மத்திய அரசாங்க வரவு செலவுத் திட்டத்தில் அடங்கியுள்ளன.

தற்போதைய ராஜ்யங்களில், அஸ்ஸாம், உத்தரப்பிரதேசம், ஒரிஸ்ஸா, ஜம்மு காஷ்மீர் நான்குமே எம் மாறுதலும் அடையவில்லை. இதர ராஜ்யங்களெல்லாம் மாற்றப்பட்டிருக்கின்றன. பீகார், மேற்கு வங்காளம் சிறிதளவே மாறுதல் அடைந்திருக்கின்றன. தற்போதைய மத்தியப் பிரதேசம் பழம் பெயரையே தாங்கியிருந்தாலும் முற்றிலும் புதிய ராஜ்ய மாயிற்று. அதன் தலைநகர் நாகபுரியிலிருந்து போபாலுக்கு மாறி விட்டது. நாகபுரி பம்பாயில் சேர்ந்து விட்டது.

ஆந்திரா, மைசூர், பம்பாய் பெரிதும் மாறியிருக்கின்றன. பெப்சு பஞ்சாபில் இணைக்கப் பட்டு விட்டது. அப்படியே ஆஜ்மீர் ராஜஸ்தானத்தில் சேர்க்கப்பட்டது. பழைய திருவாங்கூர் கொச்சின் ராஜ்யம், சென்னையிலிருந்து மலையாள ஜில்லாவைப் பெற்று, நாகர்கோவிலைச் சுற்றியுள்ள தமிழ் தாலுக்காக்களை இழந்து, கேரள ராஜ்யமாயிருக்கிறது. இம்மாறுதல்களால் ராஜ்யங்களின் வரவு செலவுகளின் மாறுதல்களைச் சரிவர நிர்ணயிக்க இயலாது.

1957-58 வரவு செலவு திட்டங்களின்படி ராஜ்யங்களின் முக்கிய வருமானங்கள் பின் வருமாறு :

| ராஜ்யங்கள் | நில வரி | விற்பனை வரிவகை யறு | காடு | நிர்வாக இலாகாக்கள் |
|---|---|---|---|---|
| | (லக்ஷம் ரூபாய்கள்) | | | |
| ஆந்திரப் பிரதேசம் | 741 | 974 | 179 | 579 |
| அஸ்ஸாம் | 241 | 415 | 85 | 128 |
| பீகார் | 1005 | 491 | 88 | 811 |
| பம்பாய் | 1319 | 3506 | 363 | 1156 |
| கேரளம் | 120 | 450 | 278 | 388 |
| மத்தியப் பிரதேசம் | 912 | 526 | 596 | 575 |
| சென்னை | 435 | 1340 | 116 | 1030 |

| | | | | |
|---|---|---|---|---|
| மைசூர் | 449 | 484 | 331 | 1942 |
| ஒரிஸ்ஸா | 178 | 165 | 206 | 116 |
| பஞ்சாப் | 391 | 640 | 59 | 335 |
| ராஜஸ்தான் | 667 | 303 | 70 | 401 |
| உத்தரப் பிரதேசம் | 2120 | 1686 | 445 | 1720 |
| மேற்கு வங்கம் | 638 | 1610 | 103 | 896 |

விவசாய வருமானவரி மூலம் அஸ்ஸாமில் ரூ. 147 லக்ஷம், கேரளத்தில் ரூ. 180 லக்ஷம் சென்னையில் ரூ. 90 லக்ஷம் வசூல் செய்கிறார்கள். இவற்றையும் நில வரியில் சேர்த்துக் கொண்டு நிலவரியின் பளுவை மதிப்பிட வேண்டும்.

நிலவரியைக் காட்டிலும் பெட்ரோல் வரியுள்பட விற்பனை வரி அதிக வருமானத்தைக் கொடுப்பது சமீப காலத்தின் மாறுதலாகும்.

பிரிட்டிஷ் ஆட்சியில் நிலவரியே மாகாணங்களின் முக்கிய வருமான வாயிலாக இருந்தது. சென்னை, பம்பாய் பிரதேசங்களில் மது விலக்கு முற்றிலும் அமுலிலிருப்பதால் அதிலிருந்து வருமானம் நின்றுவிட்டது. ஆந்திரப் பிரதேசத்தில் பழைய ஹைதராபாத் ஜில்லாக்களில் மதுவிலக்கு இல்லை. பல பிரதேசங்கள் இன்னும் மதுபானத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தை நம்பியிருக்கின்றன. ஆனால் மதுபான வருமானமில்லாமல் திறமையாக அரசாங்கம் நடத்தக் கூடும் என்பதற்குப் பம்பாயும், சென்னையும் வழிகாட்டிகளாக இருக்கின்றன. காடுகளிலிருந்து சில பிரதேசங்களுக்கு நல்ல வருமானம் கிடைக்கிறது. அதை அதிகரிப்பதற்கு இடமுண்டு. ராஜ்யங்களின் முக்கிய செலவினங்கள் கீழ்க்கண்டவாறு :

(லக்ஷம் ரூபாய்கள்)

| பிரதேசம் | வரிவசூல் | நீர்ப் பாசனம் | நிர்வாகம் | போலீஸ் | கல்வி | வைத்திய சுகாதாரம் |
|---|---|---|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 431 | 378 | 446 | 510 | 1123 | 400 |
| அஸ்ஸாம் | 249 | 60 | 123 | 372 | 410 | 199 |
| பீகார் | 567 | 166 | 462 | 407 | 1049 | 737 |
| பம்பாய் | 1233 | 305 | 690 | 1143 | 1957 | 866 |
| கேரளம் | 243 | 16 | 122 | 173 | 899 | 334 |
| மத்தியப் பிரதேசம் | 534 | 71 | 360 | 495 | 1073 | 408 |
| சென்னை | 426 | 272 | 456 | 500 | 1142 | 475 |
| மைசூர் | 444 | 97 | 254 | 326 | 1047 | 366 |
| ஒரிஸ்ஸா | 265 | 36 | 195 | 157 | 263 | 137 |
| பஞ்சாப் | 402 | 164 | 277 | 421 | 810 | 286 |
| ராஜஸ்தானம் | 477 | 60 | 223 | 360 | 601 | 285 |
| உத்தரப் பிரதேசம் | 1045 | 541 | 684 | 925 | 1511 | 569 |
| மேற்கு வங்காளம் | 691 | 208 | 337 | 738 | 1113 | 730 |

எல்லாப் பிரதேசங்களிலும் கல்விக்கும், சுகாதாரத்துக்கும் வருமானத்தில் கணிசமான பங்கு செலவிடப்படுவது கவனிக்கத் தக்கது. ஆனால் எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாய இலவச ஆரம்பக் கல்வி அளித்து, தொழிற் கல்விக்கூடங்கள் போதிய அளவு அமைத்து, சர்வகலாசாலைகளைப் பலப்படுத்துவதற்கு இதைவிட ஏராளமாகச் செலவு செய்ய வேண்டும். அவ்வாறே எல்லாக் கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் சுத்தமான குடி ஜலம் கொடுப்பதற்கும், நகரங்களில் நவீன முறையில் சாக்கடை அமைத்துக் கொசு உபத்திரவத்தை ஒழிக்கவும், க்ஷயம், புற்றுநோய் முதலிய கொடிய வியாதிகளுக்குச் சிகிச்சை செய்யத் தனி வைத்தியசாலைகளை ஏற்படுத்தவும் தற்போதையச் செலவை இரண்டு மூன்று மடங்காக்க வேண்டும். இந்த முன்னேற்றங்களை விரும்பும் மக்கள் அதிக வரி கொடுப்பதற்குத் தயாராக வேண்டும்.

மத்திய அரசாங்கத்திலிருந்து ராஜ்ய சர்க்கார்களுக்குக் கிடைக்கும் உதவியைப் பற்றி ஏற்கனவே கூறப்பட்டு விட்டது. அரசியல் திட்டத்தில் 269ம் பிரிவின்படி மத்திய அரசாங்கம் ராஜ்யங்களின் உதவிக்கென்றே சில வரிகள் விதிக்கலாம். அவைகளாவன ; மரணமடைந்தவர் சொத்தின் மீது வரி : ரயில்வே பிரயாணத்தின் மீது வரி, விசேஷ ஸ்தலங்களுக்குள் ரயில்வே, கப்பல், விமானம் மூலம் வரும் பிரயாணிகள், சாமான்கள் முதலியவற்றின் மீது வரி; பங்கு கடன் பத்திர விவகாரங்கள், வருங்காலத்தில் சாமான் சப்ளை செய்யும் ஒப்பந்தங்கள் மீது வரி; பத்திரிகைகள் மீதும், அவற்றில் பிரசுரிக்கப்படும் விளம்பரங்கள் மீதும் வரி; ஒரு பிரதேசத்திலிருந்து இதரப் பிரதேசங்களுக்குப் போகும் சாமான்கள் மீது விற்பனை வரி.

இந்த வரிகளின் மொத்த வசூலில் யூனியன் க்ஷேத்திரங்களுக்குரிய பங்கை மட்டும் எடுத்துக் கொண்டு மீதியைப் பிரதேசங்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும். இப்பிரிவின்படி மரணவரி, ரயில்வே பிரயாணிகள் வரி, இதர பிரதேச வியாபார வருமான வரி மூன்றும் விதிக்கப்படுகின்றன. மரணவரியால் இப்பொழுது பிரதிவருஷம் 2, 3 கோடி ரூபாய்தான் கிடைக்கிறது. ரயில் பிரயாணிகள் மீது இவ்வருஷம் புதிதாக விதிக்கப்பட்டிருக்கும் வரி மூலம் வருஷத்துக்கு ரூ. 15 கோடி எதிர்பார்க்கப்படுகிறது. இவ்விரண்டு வரிகளையும் ராஜ்யங்களுக்குப் பிரித்துக் கொடுக்கும் முறையைப் பற்றி நிதிக் கமிஷன் யோசனை கேட்கப்பட்டு, அதன் சிபாரிசுகள் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கின்றன.

ராஜ்யங்களில் விற்பனை வரி பலவிதமாகவும், பலவிகிதமாகவும் இருப்பதால் நாட்டின் வியாபாரத்துக்கு இடைஞ்சல்கள் ஏற்படுகிறதென்றும், பெருவாரியாக ஆலைகளில் உற்பத்தியாகும் பொருள்களுக்கு மத்திய சர்க்

காரே உற்பத்தி வரி விதித்துப் பிரதேசங்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பது நல்லதாகும் என்ற அபிப்பிராயம் பெருகி வருகின்றது. சென்ற வருஷம் மத்திய, ராஜ்ய முக்கிய மந்திரிகள் கூடிய தேசிய நிர்மாண சங்கம் (நாஷனல் டெவலப்மெண்ட் கௌன்சில்) இம்முறையை மில் துணி, மில் சர்க்கரை, புகையிலை மூன்று பொருள்களுக்கும் பிரயோகிக்க வேண்டும் என்றும், இவற்றின் மீதுள்ள விற்பனை வரி மூலம் கிடைக்கும் வருமானத்துக்குக் குறையாமல் ஒவ்வோர் ராஜ்யத்தின் பங்கும் இருக்க வேண்டும் என்றும் தீர்மானம் செய்து, உறுதி மொழித் தொகைகளையும், இப்பொருள்கள் மீது மத்திய சர்க்கார் விதிக்கும் அதிக உற்பத்தி வரியின் பங்கீட்டு முறையையும் பற்றிச் சிபார்சு செய்ய நிதிக்கமிஷன் கேட்டுக் கொள்ளப்பட்டது. அந்தச் சிபார்சுகள் அமுல் செய்யப்பட்டு விட்டன.

## 17. சர்க்கார் சேவகம்

பழங்காலத்திலும் சர்க்கார் சேவகத்துக்குப் பெரும் கௌரவம் இருந்தது. ஆனால் அரசாங்கத்தில் வேலை செய்வோரின் சங்கியை மிகவும் குறைவாக இருந்தது. பல வேலைகளில் பரம்பரையாகவும் இருந்தது. ஆதலால் பெரும்பாலோர் அதைப் பற்றிக் கவனிப்பதில்லை. இக்காலத்திலோ சர்க்கார் சேவகர்களின் எண்ணிக்கை மிகவும் அதிகரித்து, எல்லா வகுப்பினர்களிடமும் கல்வி பரவி வருவதால் அரசாங்க உத்தியோகத்துக்குக் கடுமையான போட்டி இருக்கிறது. ஒவ்வோர் குடும்பமும் ஒரு பிள்ளையையாவது சர்க்கார் வேலையில் அமர்த்த வேண்டுமென்று விரும்புகிறது. பெண்களும் இதற்குப் போட்டி போட ஆரம்பித்திருக்கின்றனர்.

1954-ம் வருஷம் ஜூன் மாதம் 30-ம் தேதியன்று மத்திய அரசாங்கத்தின் கீழ் 16·26 லக்ஷம் சேவகர்கள் வேலை செய்தனர். அவர்களைச் சம்பள விகிதப்படி பின்வருமாறு வகுக்கலாம்.

| | |
|---|---|
| மாதம் ரூ· 101 க்குக் குறைவு | 13,11,485 |
| மாதம் ரூ. 101 மேல் 501க்கு குறைவு | 2,22,753 |
| ,, 500க்கு மேல் 1001க்கு குறைவு | 7,261 |
| ,, 1000க்கு மேல் | 2,263 |

மத்திய அரசாங்கத்தின் இலாகாப்படி இவர்களின் சங்கியை:

| இலாகா | சங்கியை | சத விகிதம் |
|---|---|---|
| ரயில்வே | 9,46,048 | 58·67 |
| தபால், தந்தி, வகையரா | 2,00.459 | 12·43 |
| சைனியம் | 2,48,994 | 15·44 |
| நிதி இலாகா, வரிவசூல் | 64,353 | 3·99 |
| மராமத்து இலாகா | 32,666 | 1·77 |
| கணக்குப் பரிசீலனை | 28,593 | 1·77 |
| வியாபாரம், தொழில் | 6,430 | 0·38 |
| கல்வி | 4,467 | 0·28 |
| வெளிநாட்டு விவகாரங்கள் | 9,603 | 0·59 |
| உணவு, விவசாய இலாகா | 11,547 | 0·72 |
| சுகாதாரம் | 3,513 | 0·22 |
| உள்நாட்டு இலாகா | 4,387 | 0·27 |
| பிரசார இலாகா | 5,743 | 0·36 |
| நீர்ப்பாசன, மின்சார இலாகா | 9,980 | 0·62 |
| தொழிலாளர் இலாகா | 5,423 | 0·34 |
| சட்ட இலாகா | 567 | 0·03 |
| இயற்கைப் பொருள், விஞ்ஞான ஆராய்ச்சி | 5,194 | 0·32 |
| தொழிற்சாலை இலாகா | 12,098 | 0·75 |
| சாஜுர்த்தி புனருத்தாரண இலாகா | 2,673 | 0·17 |
| பிரதேச அரசாங்க இலாகா | 3,458 | 0·21 |
| போக்குவரத்து இலாகா | 4,805 | 0·30 |
| இதர காரியாலயங்கள் | 1,855 | 0·11 |
| | 16,22,856 | 99·74 |

மத்திய சர்க்கார் சேவகர்களின் சராசரி வருமானம் (சம்பளம் படி உள்பட) வருஷத்துக்கு ரூ. 1500. ஆதலால் சேவகர் சம்பந்தமாக மத்திய அரசாங்கம் 1954-ம் வருஷத்திற்கு ரூ. 245 கோடி வழங்கிற்று என்று மதிப்பிடலாம். சமீபகாலத்தில் ஆண்டுதோறும் மத்திய சர்க்காரின் சேவகர்களின் தொகை 50,000 வீதம் அதிகரித்து வருகிறது. அதனால் சம்பளச் செலவும் ரூ. 7½ கோடியாகக் கூடுகிறது. எல்லா ராஜ்யங்களுக்கும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் கணக்கு கிடைக்கவில்லை. 1956 அக்டோபர் மாதத்தில் சென்னை அரசாங்கத்தில் ரூ. 101 மாதச் சம்பளத்துக்குக் குறைந்தவர்கள் 101,300ம், 101 லிருந்து 500 வரையில் 20, 200 ம், 501 லிருந்து 1000 வரையில் 300 பேர்களும் உத்தியோகம் செய்தனர்.

1954 ம் வருஷத்தில் மேற்கு வங்காளம், பம்பாய், உத்தரப் பிரதேசங்களின் புள்ளி விவரங்கள்:

| சம்பளம் | மேற்கு வங்காளம் | பம்பாய் | உத்தரப் பிரதேசம் |
|---|---|---|---|
| ரூ. 100 வரையில் | 113064 | 144219 | 236248 |
| 101–500 | 19467 | 23393 | 25541 |
| 501–1000 | 645 | 691 | 814 |
| 1000த்துக்கு அதிகம் | 208 | 144 | 309 |

எல்லாப் பிரதேசங்களையும் சேர்த்தால் மத்திய அரசாங்கத்தின் சேவகர்களின் தொகையில் முக்கால் பங்கு இருக்கலாம்.

சர்க்கார் சேவகர்களின் சங்கியை ஓயாமல் அதிகரித்து வருவதைக் கண்டு சிலர் வருந்துகின்றனர். இது சரியல்ல. இக்காலத்திய அரசாங்கம் மிகவும் விரிந்தது, சிக்கலானது. நன்ருகத் தேர்ச்சி அடைந்த லக்ஷக்கணக்கான உத்தியோகஸ்தர்கள் இல்லாமல் நடைபெருது. இந்தியாவின் ஜனத்தொகையில் 7ல் ஒரு பங்கு கொண்ட பிரிட்டனில் 18 லக்ஷம் பேர்கள் சர்க்கார் சேவையில் ஜீவிக்கின்றனர். அவர்களுக்குச் சராசரி வருஷாந்திர வருமானம் ரூ. 6000. பிரிட்டனின் பிரஜாவாரி வருமானம் பாரதத்தைக் காட்டிலும் 14 மடங்கு இருந்த போதிலும் சர்க்கார் சேவகத்தின் சராசரி ஊதியம் 4 மடங்கே இருப்பது கவனிக்கத் தக்கது. அரசாங்க சேவகர்களும், அவர்களின் சங்கங்களும் தங்கள் ஊதியக் குறைவைப் பற்றி வற்புறுத்துகின்றனர். தனி முறையில் ஆலோசித்தால் அவர்களுடைய நிலைமைக்கு அனுதாபப்படாமல் இருக்க முடியாது. ஆனல் அந்த ஊதியத்தை உயர்த்த அவர்களைக் காட்டிலும் ஏழைகளான பிரஜைகளிடம் அதிக வரி வசூல் செய்ய வேண்டியிருக்கிறது. மாதம் ஆயிரம் ரூபாய்க்குமேல் சம்பளம் வாங்குகிறவர்கள் மத்திய, பிரதேச அரசாங்கங்களைச் சேர்த்து நாலாயிரத்துக்குக் குறைவாகவே இருக்கின்றனர். மற்றவர்கள் ஏறக்குறைய 30 லக்ஷம் இருக்கிருர்கள். ஆயிரம் ரூபாய்க்கு மேலுள்ளவர்கள் சம்பளத்தின் மொத்தத் தொகை வருஷத்துக்குச் சுமார் ரூ. 6 கோடியாகும். அதை முற்றிலும் பங்கிட்டுக் கொடுத்தாலும் மற்றவர்களின் ஊதியத்தில் வருஷத்துக்கு ரூ. 20தான் அதிகரிக்க முடியும். நாட்டின் மொத்த வருமானத்தை வளர்த்தாலொழிய, சர்க்கார் சேவகத்தின் ஊதியத்தைப் போதிய அளவில் உயர்த்துவது சாத்தியமாகாது.



குமாரி மைதிலி

கல்வி கேள்விகளில் தேர்ந்து, சர்வகலாசாலைகளில் பணியாற்றும் திறமை பெற்ற ஆராய்ச்சியாளர்களுக்கு அமெரிக்கா 'பார்போர் ஸ்காலர்ஷிப்' வழங்கிக் கௌரவிக்கிறது. 1958-59ம் வருஷத்துக்கான இந்தக் கௌரவம் நாக்பூர் சர்வகலாசாலையில் காந்திய தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள குமாரி மைதிலி ராகவனுக்குக் கிடைத்திருக்கிறது. அமெரிக்காவிலுள்ள மிச்சிகன் சர்வகலாசாலையில் குமாரி மைதிலி ராகவன் 'பார்போர் ஸ்காலர்' ஆகப் பணியாற்றப் போகிருர்.

★



குமாரி சுலோசனு

ரோட்டரி சங்கத்தினர் தலைசிறந்த பட்டதாரிகளுக்கு, மேலும் அவர்கள் கல்வித் துறையில் பயிற்சி பெற உதவிவருகின்றனர். 1958-59 வருஷத்துக்கு நாக்பூர் குமாரி சுலோசனு ராகவனுக்கு இந்த பாக்கியம் கிடைத்துள்ளது. நாக்பூர் சர்வகலாசாலையில் எம். ஏ. பட்டம் பெற்றுள்ள குமாரி சுலோசனு ராகவன் அமெரிக்காவில் உடற்கூறு சம்பந்தமாகப் பயிலப் போகிருர். அவரது மேற்படிப்பு வட அமெரிக்க சர்வகலாசாலைகள் ஒன்றில் இருக்கும் என்று தெரிகிறது.

★



ஆதிலக்ஷ்மி

தமிழ் நாட்டிலிருந்து திருமதி ஆதிலக்ஷ்மி எம். ஏ. எம்.லிட் ரஷ்யாவிலுள்ள லெனின்கிராட் சர்வகலாசாலையில் தமிழுக்கும், தெலுங்குக்கும் ஆசிரியையாகப் பணிபுரியச் செல்கிருர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் திரு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களிடம் மூன்று ஆண்டுகள் திருமதி ஆதிலக்ஷ்மி தமிழ் ஆராய்ச்சித் துறையில் பயின்றவர்.

பிப்ரவரி மாதம் 28-ந் தேதி அவர் தில்லிக்குப் பயணமானுர். அங்கிருந்து அவர் மாஸ்கோ செல்லுவார். மத்திய சர்க்காரால் இந்தப் பதவி நியமனம் பெற்ற திருமதி ஆதிலக்ஷ்மி லெனின்கிராட் சர்வகலாசாலையில் மூன்று ஆண்டுகள் தமிழ், தெலுங்கு ஆசிரியையாகத் தொண்டாற்றுவார்.

# அவன் நிமிர்ந்து உட்காரப் பார்க்கிறான்!

வாஸ்தவம்தான்! அவன் பெற்றோர்களுக்கு அவன் வளர்ச்சியில்தான் என்ன பெருமை...அவர்கள் க்ளாக்ஸோவை வாழ்த்துகிறார்கள்! பிறந்த சமயத்தில் எவ்வளவு சிறியவனாயும், சோனியாயும் இருந்தான் என்பதை இப்பொழுது நினைத்துப் பார்த்தால் நீங்கள் நிச்சயம் நம்பமாட்டீர்கள். டாக்டர் அவனுக்கு க்ளாக்ஸோ கொடுக்கச் சொன்னதிலிருந்து, அவன் அபார வளர்ச்சி அடைந்துள்ளான். இப்பொழுது அவன் எடை ஒழுங்காக அதிகரித்து வருகிறது. அவன் சந்தோஷத்திற்கும், ஆரோக்கியத்திற்கும் கேட்பானேன்—க்ளாக்ஸோவிற்கு நன்றி.

**Glaxo**

க்ளாக்ஸோ குழந்தைகளுக்குச்
சிறந்த பால் உணவு

க்ளாக்ஸோ பேபி புக் இலவசமாக வேண்டுவோர்,
"க்ளாக்ஸோ", டட்லி ரோடு மதராஸ் 2, என்ற விலாசத்திற்கு
(தபால் செலவிற்காக) 50 நயா பைசா ஸ்டாம்புகள் அனுப்பவும்.

க்ளாக்ஸோ லாபரட்டரீஸ (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புது டில்லி

# மாபெரும் அணைத் திட்டங்கள்

## வகைவகை நலன்கள்

கழனி வளம் கொழிக்க நீர்ப்பாசனம்...

வீடு ஒளி விளங்க மின்சாரம்...

சிறிய பெரிய தொழில்கள் வளர சக்தி...

இவைகளை வழங்கும் வகையில் நிறைவேற்றப்படுகின்றன, நமது ஆற்றுப் பள்ளத்தாக்கு அணைத் திட்டங்கள்.

பாக்ரா நங்கல், ஹிராகுட், துங்கபத்ரா, தாமோதரப் பள்ளத்தாக்கு, சம்பல், மயூராட்சி போன்ற திட்டங்களுக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது.

நாடு முன்னேற - வளங்கள் பெருக

நிறைவேறுகிறது **திட்டம்**







# படித்துப் பாருங்கள்

## ஸ்ரீ ஹரி பக்தி ஸுதோதயம்

(ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும்)

**ப**க்தியையும் விரக்தியையும் வளர்ப்பதற்கு ஸ்ரீமத் பாகவத புராணம் போன்ற நூலே கிடையாது. பாகவதத்தை யொட்டி எழுந்த பல 'ஹரி பக்தி' நூல்களில் இங்கே குறிக்கப்பட்டிருக்கும் ஹரி பக்தி ஸுதோதயமே பிரபலமானது. இதை பாகவதர்களும் ஹரி கதை செய்பவர்களும், வெகுவாய்க் கையாண்டிருக்கின்றனர்.

பக்தி மார்க்கத்துக்கே வழிகாட்டியான நாரதர் தம் புராணத்தின் ஸாரமாய் இந்த ஹரி பக்தி மஹாத்மியத்தை வெளியிட்டார். பொருளிலும் சொல்லிலும் சுகப்பிருமத்தைப் பின்பற்றிய நடையில் அமைந்திருக்கிறது இந்த நூல். இதில் 20 அத்தியாயங்கள் உள. முகவுரையாக, பகவானின் பெருமையைச் சொல்லி இறுதியில் பக்திக்கு அங்கமான சிலவற்றின் பெருமையையும் விளக்கி, நடுவே முக்கியமாக இந்த நூல் பகவத் பக்தியில் சிறந்தவர்களாயும், சிறு பிராயத்திலேயே கடவுளிடம் ஈடுபாடும் கொண்ட துருவன், பிரஹ்லாதன் இருவருடைய கதைகளையும் விரிவாக வர்ணிக்கிறது.

இதை ஸ்ரீ அருணாசல சாஸ்திரிகளும், ஸ்ரீ வேங்கடராம சாஸ்திரிகளும் எளிய முறையில் தமிழில் எழுதியிருக்கின்றனர். மேலே ஸம்ஸ்க்ருத மூலம் அதன் தமிழ் உரை கீழே ஒவ்வொரு பக்கத்திலும் இருக்குமாறு படிப்போரின் வசதிக்கேற்ப அமைத்து வெளியிட்டிருப்பது போற்றத் தக்கதாகும்.

தற்போது தம் இருப்பினால் சென்னையைத் திருப்பதியாக்கி வரும் ஸ்ரீ காமகோடி ஆசாரியர் அவர்களின் கட்டளைப்படி, பக்தியையும், ஞானத்தையும் ஊட்டும் சிறு ஸம்ஸ்கிருத நூல்களைத் தமிழ் உரையுடன் வெளியிட்டு வரும் ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம் (பி. ஜி. பால் கம்பெனி) சிறியதோர் பணியை ஆற்றி வருகிறது. அந்தக் காமகோடி கோசஸ்தான வெளியீட்டுத் தொகுதியில் இந்த ஹரிபக்தி ஸுதோதயம் வெளிவந்திருப்பது மிகவும் தகுதியானதே.

கிடைக்குமிடம்: காமகோடி கோசஸ்தானம், சென்னை-1. விலை: ரூ. 3—50.

## ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய சாரம்

'**தே**சிகர்' என்று சொன்னால் தெரியாதவர்களே இருக்க மாட்டார்கள். ஸ்ரீ வைஷ்ணவ ஆசிரியருக்குள் தலைசிறந்து விளங்கியவர். உண்மைப் பெயர் வேங்கடநாதர். இவர் எழுதிய அறிவுரைகளால் 'வேதாந்த தேசிகர்' என்ற புகழ்ப் பெயரைப் பெற்றார். சாஸ்திரங்களில் வேதாந்தம், நியாயம், மீமாம்ஸை எல்லாவற்றிலுமிருந்த தேர்ச்சியால் 'ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர்' என்றும், தர்க்கத்தின் கரடு முரடான பாதைகளிலும் காவியத்தின் மலர்ச் சோலைகளிலும் சமமான ஆற்றலுடன் எழுதி வந்ததால் 'கவிதார்க்கிக ஸிம்ஹம்' என்றும் வழங்கப்பட்டார்.

தேசிகர் பிறந்தது காஞ்சிக்கு அடுத்த தூப்பிலில்; கி. பி. 1268. நூறாண்டு வாழ்ந்தார்; நூறுக்கு மேலான நூல்களை இயற்றினார். ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும், உரை நடையிலும் செய்யுள் நடையிலும், வாத நூல்களையும், பக்தி நூல்களையும், ஸ்தோத்திரங்களையும் செய்தார். 'வடகலை' என்று வழங்கப் பெறும் சம்பிரதாயத்தின் கொள்கைகளை நிலைநாட்டினார்.

கற்றபடி ஒழுக்கத்திலும் நின்றார்; விஜய நகர மன்னர் அழைப்புக்கு இசைந்து ராஜகரம் செல்லாமல் இவர் அரசனுக்கு அனுப்பிய 'வைராக்ய பஞ்சகம்' என்ற ஐந்து ச்லோகங்களும் இவருடைய நெறியின் உயர்வை எடுத்துக் காட்டும்.

தேசிகர் இயற்றிய தமிழ் நூல்களில் முக்கியமானது ரஹஸ்யத்ரய ஸாரம் என்பது. இது மணிப்ரவாள உரை நடையில் அமைந்திருப்பதோடு, ஆங்காங்கு தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் பல செய்யுட்களையும் கொண்டது. மேலும் விசிஷ்டாத்வைத சாஸ்திரத்தின் கொள்கைகளை ஆராய்ச்சி செய்யும் நேரடான பல பகுதிகளைக் கொண்டது. ஸ்ரீ வைஷ்ணவ மதத்தையும் வடகலைக் கொள்கைகளையும் நன்கு உணர இது முக்கியமான நூலாயிருப்பதால் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்தது மிகவும் போற்றத்தக்க பணியாகும். ஆங்கில மொழிப் பேராசிரியரும் ஸ்ரீ வைஷ்ணவ இலக்கியப் பழக்கமும் நன்குள்ள எம். ஆர். ராஜகோபால அய்யங்கார் அவர்கள் இப்பணியைச் செய்திருக்கிறார். மேற்கோளாக ஆங்காங்கு தேசிகர் கட்டிக் காட்டியிருக்கும் வாக்கியங்களை முழுதும் தந்து, எளிய நடையில், தெளிவான முகவுரையுடன் இந்த ஆங்கில நூல் அமைந்திருப்பது இதன் பயனைப் பன்மடங்கு அதிகப்படுத்துகின்றது.

விசிஷ்டாத்வைதம் என்பது 'சித்' என்ற அறிவுப் பொருளான ஆன்மாக்கள், 'அசித்' என்ற சடப் பொருள் இவற்றைத் தனக்கு உடலாகக் கொண்டு, இவற்றை யெல்லாம் உள்ளே பரமாத்மாவா யிருந்து ஆளும் புருஷோத்தமன் ஒன்றே உண்மை என்ற கொள்கையைக் கொண்டது. இந்தப் புருஷோத்தமனை அடையும் வழி, அவருடைய அருள் என்ற ஸித்த - உபாயமும், அவரிடம் பக்தி, அவரிடம் சரண் புகுதல் என்ற ஸாத்ய-உபாயமு மாகும். இவற்றுக்கு அங்கமானவை கர்ம, ஞான யோகங்கள். சரண் புகுந்த பிரபன்னனின் இயல்பு, அவன் முக்தியடையும் வழி, மூன்று ரகசியங்களான மூல மந்திரம், த்வயம், சரம ச்லோகம், ஆசாரிய மஹிமை, மற்றும் இக் கொள்கைகளில் தென்கலை சம்பிரதாயத்தினர் சொல்லும் சிலவேற்றுமைகளுக்குப் பதில் — யாவும் இதில் அடங்கியிருக்கின்றன.

கிடைக்குமிடம்: அக்னிஹோத்ர ராமானுஜ தாதாசாரியார், கும்பகோணம்; விலை ரூ. 10.

—டாக்டர் வே. ராகவன்

# கதம்ப மாலை

## விஜயமணி

"அரசே! குடிமூழ்கிப் போய் விட்டது" என்று அலறிய வண்ணம் கவி பண்டிதர் தலைவிரிகோலமாக அறைக்குள் நுழைந்தார்.

அரசனின் அந்தரங்க அறைக்குள் அனுமதியின்றி எந்த நேரத்திலும் வருவதற்கு, ஆஸ்தானக் கவிஞரான ராமகிருஷ்ண கவி பண்டிதர் ஒருவருக்குத்தான் உரிமையுண்டு.

பண்டிதரின் அலறலைக் கேட்டு அரசன் பரபரப்பு எதுவும் அடையவில்லை. எத்தனையோ சூறாவளிகளுக்கு இடையே தஞ்சை ராஜ்யத்தைப் பல ஆண்டுகளாகத் திறம்பட ஆட்சி புரிந்து வரும் வீரப் பிரதாபன் அல்லவா பிரதாப சிம்மேந்திரன்?

"பண்டிதரே! ஏன் இவ்வளவு படபடப்பு? சொல்லுவதை நிதானமாகச் சொல்லுங்கள்" என்றான் அரசன் அமைதியாக.

"அரசே! என் வயிறு பற்றி எரிகிறது. நான் எப்படி நிதானமாக இருக்க முடியும்? தங்களையும், தங்கள் ராஜ்யத்தையும் பகைவர்களிடம் காட்டிக் கொடுக்கத் துரோகம் நடந்து வருகிறது."

கவி பண்டிதருக்குச் சுற்றி வளைத்துப் பேசத் தெரியாது. எனவே, விஷயத்தை ஒரே வாக்கியத்தில் அப்பட்டமாகக் கூறிவிட்டார்.

"நெருப்புடன் விளையாடும் அந்தத்துரோகி யார் என்பது உங்களுக்குத் தெரியுமா? விவரமாகச் சொல்லுங்கள்" என்றான் மன்னன்.

"சொல்ல நாக் கூசுகிறது."

"கூசாமல் சொல்லுங்கள்."

"தங்கள் ஆருயிர்க் காதலியான முத்து பாலனிதான்."

இதைக் கேட்டதும் மன்னன் ஒரு நிமிஷம் திடுக்கிட்டு விட்டான்.

"பண்டிதரே! தங்களுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? அல்லது பொறாமையினால் இவ்விதம் சொல்லுகிறீர்களா? தாங்கள் ஒரு கவி. பாலனி கட்டழகி என்பதுடன், கவியரசியாகவும் திகழ்கிறாள். அதனால் தங்களுக்கு அவள் மீது பொறாமை மூண்டிருப்பது இயல்புதான்" என்றான் பிரதாபன்.

பண்டிதர் வாயடைத்துப் போய் நின்றார்.

"தங்கள் குற்றச்சாட்டுக்கு ஆதாரம் என்ன? தாங்கள் முத்துவின் துரோகத்தை நேரில் கண்டறிந்தீர்களா?" என்று தொடர்ந்து கேட்டான் மன்னன்.

பண்டிதர் சிறிது தயங்கிய வண்ணம் 'ஆம்' என்று கூறினார்.

"புதிர் போடாதீர்கள். புரியும்படி விவரமாகச் சொல்லுங்கள்" என்று அதட்டினான் பிரதாபன்.

"என் உயிருக்குயிரான ஒருவர் சொன்னார்."

இவ்வாறு பண்டிதர் கூறியதும் பிரதாபன் வாய்விட்டுச் சிரித்தான். "ஒரு விநாடிக்கு முன் முத்துவின் துரோகத்தை நேரில் தெரிந்து கொண்டதாகத் திருவாய் மலர்ந்தருளினீர்கள். இப்போது உயிருக்குயிரான ஒருவர் கூறியதாகச் சொல்லுகிறீர்கள். இதில் எது உண்மை? இல்லை, இரண்டுமே முழுப் பொய்யா?" என்று கேட்டான்.

பண்டிதரின் முகம் பார்ப்பதற்குப் பரிதாபமாக இருந்தது. அவர், என்ன சொல்லுவதென்று தோன்றாமல் நின்றார்.

"ஏன் மௌனியாக நிற்கிறீர்கள்? பொய்க் குற்றச்சாட்டை எவ்விதம் ஜோடிப்பது என்று யோசிக்கிறீர்களோ?"

அரசனின் இந்தச் சொற்கள், பண்டிதருக்குக் கசையடி கொடுப்பது போல் இருந்தன.

"என் ஆருயிர்க் காதலி சொன்னாள்."

"ஆஸ்தானக் கவிஞருக்கு அவ்வித அருமைக் காதலி இருப்பது இது வரையில் எனக்குத் தெரியாதே!" என்று நகைத்துக் கொண்டே பிரதாபன் மீசையை முறுக்கி விட்டுக் கொண்டான்.

மன்னனின் ஏளன வார்த்தைகள் பண்டிதருக்குச் சுரீர் என்று உறைத்தன.

"அரசே! நமது நட்பை மறந்து பேசுகிறீர்கள்" என்றார் பண்டிதர்.

அரசனின் முன்னிலையில் கோபத்தைக் காட்டத் தமக்கு உரிமை உண்டு என்று குறிப்பிடுவது போலிருந்தது பண்டிதரின் காரமான வார்த்தைகள்.

"அது கிடக்கட்டும். அந்தக் காதலி எங்கு இருக்கிறாள்? எந்தத் தேசத்தில் இருக்கிறாள்?"

பிரதாபனின் வார்த்தைகள் பண்டிதரின் கோபத்தை மேலும் தூண்டி விட்டன.

"இங்கேயே இருக்கிறாள். இந்த அரண்மனையில் தான் இருக்கிறாள். முத்துவின் அருகிலேயே இருக்கிறாள்" என்று விளக்கினார் பண்டிதர்.

"ஹா! யார் அவள்? முத்துவின் தோழியா? ... சுகேசியா?"

"இல்லை, கலஞ்ஜை" என்றார் ராமகிருஷ்ண கவி பண்டிதர்.

இதைக் கேட்டதும் பிரதாபனின் முகம் முதன் முறையாக அவ






னது திகைப்பையும் மன வேதனையையும் காட்டியது. பண்டிதரின் கூற்று முழுப் பொய்யாக இருக்க முடியாது என்ற எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது.

"கலஜ்ஜையை அழைத்துக் கேட்கட்டுமா?" என்றான் பிரதாபன்.

"அவ்விதம் கேட்பது உசிதமல்ல. என் வார்த்தையைத் தாங்கள் நம்பலாம்."

பிரதாபனின் முகம் மீண்டும் பண்டிதர் மீது கோபத்தைக் காட்டியது. "ஏன் உசிதமில்லை? பண்டிதரே! தாங்கள் சில நிமிஷங்கள் வரையில் என் கைதியாக இருக்கும்படி நேர்ந்திருப்பதற்காக வருந்துகிறேன். அதோ அந்த அறைக்குள் செல்லுங்கள்."

குறிப்பிட்ட அறைக்குள் பண்டிதர் சென்றதும், அதை இழுத்துப் பூட்டினான் பிரதாபன். அந்த விநாடியே பண்டிதரின் கூற்று உண்மையா, அல்லது பொய்யா என்பதை ஐயமறத் தெரிந்துகொள்ள முற்பட்டான். மன்னன் இரகசியக் காவலனிடம் விடுத்த கட்டளைக்கிணங்க சில நிமிஷங்களில் முத்துவின் தோழி கலஜ்ஜை நடுங்கிக்கொண்டே உள்ளே வந்தாள்.

மன்னன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் கலஜ்ஜை அழுது கொண்டே பதில் கூறினள். அவளது வார்த்தைகள், பண்டிதர் கூறியது முற்றிலும் உண்மை என்பதைத் தெளிவாக்கின. தன் ராஜ்யத்துக்கு மாத்திரமல்ல, பாரத நாட்டுக்கே விரோதியான நவாப் தோஸ்த் அலி கானின் அந்தரங்க நண்பனும், சூழ்ச்சியிலும் துரோக நடவடிக்கைகளிலும் கைதேர்ந்தவனுமான மேஹருடன், தன் காதலியான முத்து இரகசியத் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பதைக் கேட்டபோது பிரதாப சிம்மேந்திரனின் தலை சுழன்றது; அவனது உள்ளமும் உடலும் வெதும்பின.

மேஹர், முத்துவின் மற்றொரு தோழியான சுகேசி மூலம் அனுப்பும் கடிதங்களை யாருக்கும் தெரியாமல் பிரதாபவிடம் கொண்டு வந்து காட்டி விட்டுத் திருப்பி எடுத்துக்கொண்டு போவதாக, கலஜ்ஜை மன்னனிடம் ஒப்புக்கொண்டு அங்கிருந்து சென்றாள்.



சிறைப்பட்டிருந்த அறையிலிருந்து வெளியே வந்த பண்டிதரை மன்னன் அன்புடன் அணைத்துக் கொண்டான்.

''தங்கள் மனத்தைப் புண்படுத்தி விட்டேன்'' என்றான் பிரதாபன்.

''தாங்கள் இந்த ராஜ்யத்தின் மன்னர் மாத்திரமல்ல, என்னுடைய நெருங்கிய நண்பரும் கூட. ஆகையால் தங்கள் நலனுக்காக என் தலையைக்கொய்து கொடுக்கவும் நான் தயங்கமாட்டேன்'' என்றார் பண்டிதர் உணர்ச்சி ததும்ப.

இருவர் கண்களிலும் நீர் துளித்தது.

• • •

ஆயிரத்து எழுநூற்று முப்பத்து ஒன்பதிலிருந்து ஆயிரத்து எழுநூற்று அறுபத்து மூன்றாம் ஆண்டு வரையில் தஞ்சாவூரில் ஆட்சி புரிந்த வீராதி வீர மன்னன்தான் பிரதாப சிம்மேந்திரன். தென்னிந்திய சரித்திர ஏடுகளிலே அமரராகத் திகழும் ஈடு இணையற்ற சரபோஜி மன்னரின் பாட்டன். தஞ்சையில் அரசு செலுத்திய புகழ் பெற்ற மகாராஷ்டிர மன்னர்களில் பிரதாபனும் ஒருவன்.

அவனது ஆட்சிக் காலத்தில், குறிப்பாக, தென்னிந்தியா வாழ்வதா, வீழ்வதா என்ற போராட்டத்தில் சிக்கிக் கொண்டிருந்தது. ஒருபுறம் நவாபின் அட்டகாசங்கள் சகிக்க முடியாதவையாக இருந்தன. மற்றொரு புறம் பிரஞ்சுக்காரர்கள் காரைக்கால் பகுதிகளைக் கபளீகரம் செய்து கொண்டிருந்தார்கள். வேறொரு புறம் பிரிட்டிஷ்காரர்களின் சூழ்ச்சியும் சதியும் படுமோசமான நிலைமையை உண்டாக்கி வந்தன.

தஞ்சை ராஜ்யத்தைக் கழுகுகள் போல் வட்டமிட்டு வந்த அந்த மூன்று சாராரையும் பல ஆண்டுகள் வெற்றிகரமாகச் சமாளித்த பிரதாப சிம்மேந்திரனைச் சரித்திரம் மறக்கவே முடியாது.

அக்காலத்தில்தான் ராமகிருஷ்ண கவி பண்டிதர் என்ற சிறந்த மகாராஷ்டிரக் கவி பிரதாபனின் ஆஸ்தானக் கவிஞராக மட்டுமின்றி, அவனது அருமை நண்பராகவும் இருந்து வந்தார். தெலுங்குக் கவியான முத்து பாலவி பிரதாப சிம்மேந்திரனின் காதலியாகும் பாக்கியம் பெற்றாள்.

பிரதாபனுடன் நேரில் போரிட்டு வெற்றி பெற முடியாது என்பதை உணர்ந்த நவாப் தோஸ்த் அலிகானின் நெருங்கிய நண்பனும் துரோக வலை வீசிப் பகைவர்களை வீழ்த்துவதில் 'வீரனு'மான மேஹர், ஏராளமாகப் பொன் நாணயங்களைக் கொடுத்து, பிரதாபவின் ஆருயிர்க் காதலியான முத்துவின் தோழி சுகேசியைத் தன் வசப்படுத்திக் கொண்டான்.

சுகேசியின் மூலம் மேஹர் அனுப்பிய பல காதல் கடிதங்களுக்கும், முத்துபாலவி வாய்மொழியாகத் தன் பதில்களைத் தெரிவித்து வந்தாள். முத்துவை இரவு அந்தப்புரத்தில் சந்திப்பதாக மேஹர் எழுதிய கடைசிக் கடிதத்தையும் கலஜ்ஜை மிகவும் இரகசியமாகப் பிரதாபவிடம் கொண்டு வந்து கொடுத்தாள். பிரதாபன் அக்கடிதத்தை வாசித்த பின், மற்றக் கடிதங்களைப் போல் அதையும் அவளிடம் திருப்பிக் கொடுத்து விட்டான். ஏனெனில், தான் மேஹருடன் தொடர்பு வைத்துக் கொண்டிருப்பது யாருக்காவது தெரிந்துவிட்டதோ என்ற சந்தேகம் முத்துபாலவிக்குச் சிறிதும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காகவே அவ்விதம் செய்தான்.

அந்தக் கடிதத்தை வாசித்தபின் பிரதாபன் யாருக்கும் தெரியாமல், முத்துவுக்குக் கூடத் தெரியாமல் அன்று மாலை சுகேசியைக் கைது செய்து சிறைப்படுத்தி விடும்படி உத்தரவிட்டு விட்டான். சுகேசி நடுநடுங்கிக் கொண்டு அன்று வரையில் நடந்தவற்றை யெல்லாம் மன்னனிடம் கூறி விட்டாள். முத்துவின் துரோகத்துக்கு இதைக் காட்டிலும் நேரடியான சாட்சியம் வேறு என்ன வேண்டும்?

• • •

இரவு பத்து மணி இருக்கும். கவிதா ரத்தினமும் மன்னனின் ஆருயிர்க் காதலியுமான முத்து பாலவி தன்னை அலங்காரம் செய்துகொண்டு அந்தப்புரத்தில் யாருடைய வரவுக்காகவோ காத்துக் கொண்டிருந்தாள். பாவம்! அவளது அந்தப்புரத்தை அடுத்துள்ள இரகசிய அறையில் மறைந்திருந்த மன்னன் பிரதாபனும் கவி பண்டிதரும், முத்துவின் ஒவ்வொரு செய்கையையும் கவனித்துக் கொண்டிருப்பதை அவள் அறியவில்லை.

ஏப்ரல் 14உ முதல்

சென்னை மற்றும் தென்னகமெங்கும்




# சம்பூர்ண ராமாயணம்

K. சோமு - A.P. நாகராஜன் - K.V. மஹாதேவன் - மருதகாசி

M.A. வேணு

BHARAT STUDIO

ஏற்கெனவே செய்யப்பட்டிருந்த ஏற்பாட்டின்படி இரவு சுமார் பதினொரு மணிக்கு மேஹர் உற்சாகத்துடன் அந்தப்புரத்துக்குள் சந்தடியின்றி நுழைந்தான்.

அவனை "வாருங்கள், வாருங்கள்" என்று முத்து குதூகலத்துடன் வரவேற்றபோது பிரதாபனுக்கு இரத்தம் கொதித்தது. அவன் உடல் எல்லாம் சில்லிட்டது. கண்கள் சிவந்தன. அவனையறியாமல் அவனது கை உடைவாளை இறுகப் பற்றியது. ஆனால் பண்டிதர் அவன் கையைப் பிடித்து, பொறுமை இழக்காமல் இருக்கும்படி சைகை காட்டினார்.



வன்னியகுல க்ஷத்திரிய சமூகத்தில் சட்டப் பரீட்சையில் தேறிய முதல் பெண்மணி இவர். முன்னாள் பார்லிமெண்டு அங்கத்தினரும் சென்னை நகரத் துணை மேயராகத் தொண்டாற்றியவருமான திரு பி.எம். ஆதிகேசவ நாயக்கர் அவர்களின் அருமைப் புதல்வி குமாரி பி. ஏ. சரோஜினி தேவியைப் படத்திற்காணலாம்.

முத்துவிடம் மேஹர் கூறிய காதல் மொழிகள் பிரதாபனுக்குத் தன் உடலை ஆயிரம் ஈட்டிகளால் குத்துவது போலிருந்தன. "இருக்கட்டும், இருக்கட்டும். இன்னும் சில நிமிஷ நேரத்தில் உங்கள் இருவருடைய உதிரத்தையும் இந்த வாள் உறிஞ்சப் போகிறது" என்று மன்னன் பிரதாபன் மனத்துக்குள் சொல்லிக் கொண்டான்.

முத்து, மேஹரை மதுபானம் அருந்தச் சொல்லி வற்புறுத்திய காட்சி பிரதாபனின் இருதயத்தை வாள் கொண்டு அறுப்பது போல் இருந்தது.

"உன் கையினால் கொடுக்கும்போது, இந்தப் பானத்தின் மணமும் சுவையும் அதிகமாகின்றன" என்று கொஞ்சினான் மேஹர்.

"இன்றிரவு எனக்குப் பரிசளிப்பதாகச் சொல்லி அனுப்பியிருந்தாயே! என்ன பரிசு அளிக்கப் போகிறாய்?"

"உஷ்! சப்தம்போடாதீர்கள். நம்இருவருக்கும் ஆபத்தாகிவிடும்......நாம் நந்தவனத்துக்குப் போய்விடலாமே. அங்கு பயமின்றி நாம் விளையாடலாம்" என்று முத்து கூறியதும், குதூகலத்துடன் எழுந்தான் மேஹர்.

இருவரும் சந்தடி செய்யாமல் நந்தவனத்துக்குச் சென்றனர். சிறிது தூரத்தில் தங்களை வாட்களுடன் இரண்டு உருவங்கள் தொடர்ந்து வருவதைப் போதையில் மெய் மறந்த அவர்கள் கவனிக்கவில்லை.

"உன் பரிசு எங்கே? உன் பரிசு எங்கே? உன்னைப் பரிசாக அடைய இதைக்காட்டிலும் சிறந்த சூழ்நிலை வாய்ப்பது அரிது" என்று கூறிக்கொண்டே வெறிகொண்ட மேஹர் முத்துவின் தோளைப் பற்றினான்.

இந்தக் காட்சியைக் கண்ட பிரதாபன் துடிதுடித்தான். பண்டிதர் அவனது கையை இறுகப் பற்றிக் கொண்டிருந்தார்.

அச்சமயத்தில் ஆகாயம் நிர்மலமாக இருந்தும் கூட ஒரு மின்னல் மின்னி இடி இடித்ததுபோல் இருந்தது. அது வேறு எதுவுமில்லை. முத்துபாலனியின் கை வாளும் அதன் வேகமும்தான்!

மேஹர் தன் தோளைப் பற்றியதும், முத்து மின்வேகத்தில் தன் இடுப்பில் இருந்த கை வாளை உருவி மேஹரின் மார்பில் ஒன்று, இரண்டு, மூன்று தடவை மிருந்த ஆத்திரத்துடன் குத்தினாள். போதையிலிருந்த மேஹர் எதிர்பாராத தாக்குதலுக்கு ஆளானதும், 'ஹா, துரோகி' என்று அலறிக் கொண்டு கீழே சாய்ந்தான்.

"யார் துரோகி? பொன் நாணயங்களைக் காட்டி ஒரு பேதைப் பெண்ணை மயக்கினாய். அவள் மூலம் என்னையும் மயக்கப் பார்த்தாய். உங்களுக்கு எவ்விதத் தீங்கும் செய்யாத எங்கள் மன்னாதி மன்னனுக்கும் ராஜ்யத்துக்கும் அழிவை உண்டாக்கத் திட்டமிட்டாய். ஆனால், பிரதாப மன்னரின் காதலி உன் துரோக வலையில் விழுந்து விடுவாள் என்று நினைத்து விட்டாயா, மூடா. சதிகாரப் பேயே! உனக்கு நான் கொடுப்பதாகக் கூறிய பரிசு இதுதான். இந்த உடலும் இந்த உடலில் உள்ள இருதயமும் பிரதாப மன்னர் ஒருவருக்குத்தான் உரியவை என்பதை இப்போதாவது அறிந்துகொள். உன் இரத்தத்தால் பிரதாப மன்னரின் அந்தப்புரத்தைக் கறையாக்க நான் விரும்பவில்லை. அதனால்தான் உன்னை இங்கு அழைத்து வந்தேன்" என்று முத்து பாலனி ஆத்திரம் பொங்கக் கூறிவிட்டு, வெகு வேகமாக வந்த வழியே திரும்பிப் பட்சியைப் போல் பறந்து சென்று விட்டாள்.

பிரதாபனும் பண்டிதரும் பிரமித்துப் போய் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றனர். பிரதாபனுக்கு உற்சாகமும் மகிழ்ச்சியும் நிலைகொள்ளவில்லை.

ஆனால், கவி பண்டிதரின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாகப் பெருகிக் கொண்டிருந்தது. "அரசே! நான் தங்கள் மன்னிப்பைக் கோரவில்லை. நான் இழைத்த கொடிய குற்றத்துக்குத் தண்டனையே கோருகிறேன். உயர்ந்த ரத்தினத்துக்குத் தோஷம் கற்பித்து விட்டேன். மாசிலாப் பசும் பொன்னுக்கு மாசு கூறி விட்டேன். என் தவறால் உங்கள் வாழ்க்கையும் ஒரு உயர்ந்த வனிதா ரத்தினத்தின் வாழ்க்கையும் பாழாகியிருக்கும். நல்லவேளையாக, அத்தகைய பாதகனாகி விடாமல் தெய்வம் என்னைக் காப்பாற்றியது. மேஹர், தங்கள் காதலிக்கு எழுதிய கடிதங்களைக் கண்டு அவசரப்பட்டுத் தாங்கள் ஏதாவது

புகழ் பெற்ற தொழில் அதிபரான ஸ்ரீ சேஷசாயியின் பேத்தியும், ஆல்வாய் திரு என். சுந்தரத்தின் புதல்வியுமான குமாரி உஷாவின் பரத நாட்டிய அரங்கேற்றம், எர்ணாகுளம் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியில் 14-2-58 யன்று வெகு விமரிசையாக நடந்தேறியது.

செய்திருந்தால், என்ன என்ன விளைந்திருக்குமோ! அதைக் கற்பனை செய்யவும் என் உடல் நடுங்குகிறது; உள்ளம் நரக வேதனைக்கு உள்ளாகிறது. அதிர்ஷ்டவசமாகக் கடைசி வரையில் தாங்கள் காட்டிய பொறுமையினால் என் கண்களுக்கும் அறிவுக்கும் எட்டாத உண்மை இப்போது வெளியாயிற்று'' என்றார் பண்டிதர்.

'' நீங்கள் வருந்த வேண்டிய அவசியமில்லை. உங்கள் நோக்கத்தை நான் மெச்சுகிறேன். என் மீதும் இந்த ராஜ்யத்தின் மீதும் உள்ள அன்பினால் அல்லவா தாங்கள் இவ்விதம் செய்தீர்கள்! நீதியும் நேர்மையும் உயர்ந்த குணமும் படைத்த எவரும், இத்தகைய சந்தர்ப்பத்தில் தங்களைப் போலவே தான் நடந்து கொண்டிருப்பார்கள். தாங்கள் தண்டனை கோரினீர்கள் அல்லவா? உங்களுக்குத் தண்டனை கொடுக்கத்தான் தீர்மானித்திருக்கிறேன். உங்களை அரண்மனைக்கு உள்ளேயே சிறைப்படுத்தப் போகிறேன். தாங்கள் நாளைய தினத்திலிருந்து தங்கள் காதலி, இல்லை இல்லை, மனைவி கலஜ்ஜையுடன் வசந்த கூடத்தை அடுத்துள்ள மாளிகைக்கு வந்து விடுங்கள். இதுதான் நான் விதிக்கும் தண்டனை! இந்தத் தண்டனையிலிருந்து தாங்கள் தப்ப முடியாது. ஏனெனில், உங்களுக்கு விதித்துள்ள தண்டனையை நானே முன்னின்று நிறைவேற்றிவைக்கப் போகிறேன்!''

கவி பண்டிதரின் மனக் கஷ்டத்தை அகற்றுவதற்காகப் பிரதாப சிம்மேந்திரன் இவ்விதம் சொல்லிக் கொண்டே போனான்.

பிரதாபனின் வார்த்தைகள் பண்டிதருக்கு ஓரளவு ஆறுதல் அளித்தன. என்றாலும் தாம் ஏதோ பெரும் பாதகமான ஒரு காரியத்தைச் செய்ய விருந்ததாக எண்ணி அவரது மனம் வெகு நேரம் வரை படாதபாடு பட்டது.

*　　　　*　　　　*

**ம**றுநாளே நவாப் தோஸ்த் அலிகானின் படைகள் போருக்கு வந்து கொண்டிருக்கின்றன என்ற செய்தி பிரதாபனுக்கு எட்டியது. போர்முனைக்குச் செல்லுமுன் பிரதாபன் அந்தப்புரத்துக்கு வருவான் என்பது முத்து பாலனிக்குத் தெரியும். அவனுக்கு விடை கொடுத்து அனுப்புவதற்காக முத்து நறுமணம் கமழும் சிறந்த கதம்ப மாலை ஒன்றைத் தயாரித்து வைத்திருந்தாள்.

சில தினங்களாக முத்துவின் அந்தப்புரத்துக்குப் பிரதாபன் வருவதில்லை. அரசியல் நெருக்கடி காரணமாக அவனுக்கு நேரம் கிடைக்கவில்லையோ என்றே முத்து நினைத்துக் கொண்டிருந்தாள். அவன் வராததற்கு உண்மைக் காரணம் அவளுக்குத் தெரியச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை!

மிகவும் குதூகலத்துடன் அந்தப்புரத்துக்கு வந்த பிரதாபனை முத்து எதிர்கொண்டு அழைத்தாள். பிரதாபன் வெகு நேரம் வரையில் அவளுடன் அளவளாவிக் கொண்டிருந்தான். ஆனால், நந்தவனத்தில் நிகழ்ந்த சம்பவம் பற்றி அவள் எதுவும் கூறவில்லை. அவனும் எதுவும் கேட்கவில்லை. தன் காதலி அதை இரகசியமாக வைத்துக் கொள்ள விரும்பும்போது, அந்த ஆசையைக் கெடுக்கப் பிரதாபன் விரும்பவில்லை.

பிரதாபன் முத்துவிடம் விடைபெற்றுக் கொண்டபோது, அவள் கதம்பமாலையை அவன் கழுத்திலே போட வந்தாள். ''இந்தாருங்கள் வெற்றிமாலை. தாங்கள் போர் முனையிலிருந்து வெற்றியுடன் திரும்பி வர அன்னை பராசக்தி அருளவேண்டும்'' என்றாள்.

மாலையைக் கையில் வாங்கிக் கொண்ட பிரதாபன், ''வெற்றி பெற்றபின்தான் நான் இந்த மாலைக்கு உரியவனாவேன். ஆனால், முதல் வெற்றி பெற்ற நீதான் இப்போது இந்த மாலையைப் போட்டுக் கொள்ள வேண்டும்'' என்று கூறி அன்புடன் அந்த மாலையை அவள் கழுத்தில் போட்டான்.

'' எனக்கு முதல் வெற்றியா? நீங்கள் கூறுவது ஒன்றும் புரியவில்லையே?'' என்றாள் பிரதாப சிம்மேந்திரனின் காதலி.

'' உனக்குப் புரியவேண்டிய அவசியமில்லை, கண்ணே! உன்னை நான் நன்கு புரிந்து கொண்டிருக்கிறேன்'' என்று கூறி அவன் அவளை அன்பு ததும்ப அணைத்துக் கொண்டான்.

''எனக்கு அது போதும், அரசே'' என்றாள். அவளுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

# பொன்னி எங்கே?

3

“நான் எதற்காக உயிர் வாழ வேண்டும்?” என்று மிகுந்த வேதனையுடன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான் சேது. சேதுவுக்கு இருபத்தைந்து வயது இருக்கலாம். எதிலும் ஈடுபாடில்லை; திறமை இல்லை; அதிர்ஷ்டம் அதாவது முயற்சி அதுவுமில்லை. அவன் மத்தியதரக் குடும்பத்தைச் சேர்ந்தவன்; உற்சாகமில்லாதவன்; திருப்தி அற்றவன். அவனைப் படிக்க வைப்பதற்கு அவன் பெற்றோர்கள் கணக்கற்ற தியாகம் செய்ய வேண்டியிருந்தது. அவனும் ஏதோ படித்துப் பட்டம் பெற்று விட்டான். படிப்பு முடிந்தவுடன் ‘வேலை வேலை’ என்று வேலைக்காக அலைந்தான். வேலை ஒன்றும் கிடைக்கவில்லை.

ஒரு கதை எழுதிப் பத்திரிகைக்கு அனுப்பி வைத்தான். அது மறுநாளே திரும்பி வந்து விட்டது. மீண்டும் கதைகள் எழுதினான், பத்திரிகைகளுக்கு அனுப்பினான். மீண்டும் அதே பாடந்தான். கதைகள் திரும்பி வந்தவுடன் அவன் தன்னுடைய கதைகளை மாற்றி அமைக்க வேண்டும் என்று எண்ணவில்லை. அதற்குப் பதிலாக அவனுக்குப் பத்திரிகை ஆசிரியர்கள் மீது கோபம் வந்தது. பத்திரிகைகளில் தொண்டாற்றும் துணை ஆசிரியர்கள் மீது ஆத்திரம் வந்தது. பத்திரிகை உலகில் இளம் எழுத்தாளனுக்கு இடம் கிடைப்பது அரிது. அங்கே வஞ்சகர்கள் நிறைந்துள்ளனர். புதிய ஒரு எழுத்தாளனின் உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ள முடியாத இதயமற்றோர், புரிந்து கொண்டாலும் அவனுக்கு இடம் தர மறுக்கும் வஞ்சகர்கள், எத்தர்களே பத்திரிகைக் காரியாலயத்தில் நிறைந்துள்ளனர். உணர்ச்சிநிறைந்த ஆரம்ப எழுத்தாளர்கள் எல்லாம், மண்டைகர்வம் பிடித்த பத்திரிகை ஆசிரியர்களால் அலட்சியப்படுத்தப் படுகிறார்கள். கதைகளைப் பிரசுரிக்கும் விஷயத்தில் இந்தப் பத்திரிகை ஆசிரியர்கள் எதைக் கவனிக்கிறார்கள்? கருத்தையா? நடையையா? மொழி வளத்தையா? இவைகளில் ஒன்றையும் கவனிப்பதில்லை. எவராவது ஆசிரியர்களின் உறவினர்கள், அல்லது பணம் படைத்தவர்கள் சிபார்சுகளுடன் செல்லும் எழுத்தாளர்கள் இவர்களைத்தான் ஆதரிக்கிறார்கள். ஆனால் இந்தப் பத்திரிகை ஆசிரியர்கள் எழுதுவதெல்லாம் நேர்மையைப் பற்றி! நீதியைப் பற்றி! வெறும் முதலைக் கண்ணீர்! ஏழைகளின் ரத்தத்தைக் குடித்த ஜமீன் முறை ஒழிந்தது போல, பத்திரிகை ஆசிரியர்களின் கொடுமைகள் தொலைய வேண்டும். அப்பொழுது தான் என் போன்ற இளம் எழுத்தாளர்கள் முன்னுக்கு வர முடியும் என்று ஓயாமல் சொல்லிக் கொண்டே இருப்பான் சேது.

இப்படிப் பத்திரிகை ஆசிரியர்களைப் பற்றியும், புகழ் பெற்ற எழுத்தாளர்களைப் பற்றியும் குறை கூறிக் கொண்டே இருந்தால் போதுமா? வயிறு வளர்ப்பதற்கு ஏதாவது தொழில் வேண்டாமா? எப்படியோ ஆரம்பப் பள்ளியின் ஆசிரியர் வேலை கிடைத்தது சேதுவுக்கு. அந்த வேலையில்தான் திருப்தியடைந்தானா? இல்லை, எழுத்தாளன் ஆயிற்றே! அவனுக்கு எப்படி மன நிறைவு ஏற்படும்? காலமெல்லாம் இந்தப் பிள்ளைகளுடன் மாரடித்துக் கொண்டு மடிய வேண்டியதுதானா என்று எண்ணி எண்ணி ஏங்குவான். அதனாலேயே அவனுக்கு வாழ்விலே ஒரு வெறுப்பு ஏற்பட்டு விட்டது. வாழ்வதை விடச் சாவதே மேல் என்று எண்ணினான். ஓயாமல் சாவைப் பற்றியே சிந்தித்தான்.

வாழ்வை நினைத்தவர்களுக்குச் சாவைப் பற்றி நினைக்க முடியாது. “வாழ்வை நினைத்த பின் சாவை நினைப்பது வாழ்வுக்கு நேராமோ!” என்கிறார் கவியரசர் பாரதியார். அப்படி நேர்மையில்லாத ஒன்றை, பயங்கரமான ஒன்றைப் பற்றிச் சேது சதா எண்ணிக் கொண்டிருந்தான்.

இந்தச் சமயத்திலே தான் இளங்கோவன் பூங்குளத்துக்கு வந்தது. இளங்கோவனைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவன் எழுத்தைப் படிக்கும்போதெல்லாம் அவனுடைய கதைகளையும், நாடகங்களையும் பத்திரிகைகளில் பார்க்கும் பொழுதெல்லாம் தம் சேதுவுக்குக் கோபம் கோபமாக வரும். இளங்கோ



வன் நல்ல பணக்காரனாக இருக்க வேண்டும், அல்லது பத்திரிகை ஆசிரியர்களுக்கோ, துணை ஆசிரியர்களுக்கோ சொந்தக்காரனாக இருக்க வேண்டும் இல்லாவிட்டால் அவன் கதை மட்டும் அடிக்கடி பத்திரிகைகளில் வருமா என்று எண்ணுவான். அவன் கண்டானா இளங்கோவன் பட்ட கஷ்டங்களை! பத்திரிகை உலகில் முன்னுக்கு வர இரவு பகல் என்று பாராமல் அவன் உழைத்ததை! கற்பனையில் கண்டவற்றைக் கதையில் உருவாக்க, வார்த்தைகள் கிடைக்காமல் கதறிக்கதறிக் கலைத் தேவியின் சன்னிதியில் இரவு பகலாக அவன் அழுததைச் சேது கண்டானா?

பத்திரிகை ஆசிரியர்களைப் பற்றியும் எழுத்தாளர்களைப்பற்றியும் இவ்வளவு கொடூரமாக நினைத்தாலும் சேது மிகவும் நல்லவன். இரக்கமான சுபாவம் படைத்தவன். உள்ளத்தில் அன்பு நிறைந்தவன். விதி ஏதோ தன்வாழ்வில் சதி செய்வதாக எண்ணினான். அதனாலேயே அவனுக்குச் சாவைப் பற்றிய எண்ணங்கள் இன்பத்தைக் கொடுத்தன.

ஒருநாள். வீதியில் யாரோ பாடிக்கொண்டு சென்ற பாடலைக் கேட்டுச் சேது ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தான். அந்தப் பாட்டின் வார்த்தைகள் அவனுடைய உள்ளத்தின் எதிரொலி போல் இருந்தன.

காதல், காதல், காதல்;
காதல் போயிற், காதல் போயிற்
சாதல்! சாதல்! சாதல்!

என்று பாரதியின் குயில்பாட்டை எவனோ கம்பீரமான குரலில் பாடிக் கொண்டு சென்றான். சேதுவுக்கு வேறு ஒருவர் சாவைப் பற்றிச் சொல்லியா காட்ட வேண்டும்?

அவன்தான் சதா சாவைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தானே! ஆனாலும் ஏதாவது ஒரு மகத்தான சாதனையைச் செய்து விட்டுத்தான் சாக வேண்டும் என்று தீர்மானித்தான். தன் சாவை வீர மரணம் என்று உலகத்தார் புகழ வேண்டும் என்று எண்ணினான். சிந்தனை நிறைந்த எழுத்தாளன் அல்லவா? அதனால் தன்னுடைய வீர மரணத்தைப் பற்றிக் கனவுகள் கண்டான்.

தான் யாராவது ஒரு அழகியை, செல்வந்தரின் புதல்வியைக் காதலிப்பதாகக் கனவு காண்பான். அந்த அழகியும் அவனையே காதலிப்பாள். அதற்கு எத்தனையோ இடையூறுகள் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். அவன் நிலை கண்டு இரங்கி ஆண்டவன் அவனுக்குப் பல அற்புத சக்திகள் அருளுவார். அந்தச் சக்திகளைப் பார்த்து அந்தப் பணக்கார அழகி மயங்கிப் போய் விடுவாள். "ஆகா! நம்முடைய சேதுவுக்கு இவ்வளவு சக்திகள் இருப்பதாக நான் எதிர்பார்க்கவில்லையே!" என்று வியப்பாள். சேது உடனே அந்த அழகிக்குத் தன்னுடைய சக்தியை யெல்லாம் காட்டவேண்டும் என்று எண்ணுவான். அந்த அழகியும் அதையே விரும்புவாள். சேது உடனே பாதாள உலகத்தில் இருக்கும் நாக ராஜனாக மாறுவான். அந்த அழகி கொள்ளிடத்தில் குளிக்க வருவாள். அப்போது அவன் கண்ணில் படும்படியாக ஒரு நாகரத்தினத்தைச் சேது வைப்பான். கண்ணைப் பறிக்கும் நாகரத்தினத்தை அந்த அழகி ஆவலுடன் எடுப்பாள். அது அவளைத் தண்ணீருக்குள்ளே அழைத்துச் செல்லும். கடைசியில் அழகி பாதாள உலகத்துக்கே வந்து சேருவாள்.

அங்கே அலங்காரமான பள்ளியறையில் தங்கக்கட்டிலில் யாரைக் காண்பாள்? அவன் அருமைக் காதலன் சேதுவை! ஏழை எழுத்தாளனை, ஆரம்பப்பள்ளி ஆசிரியனை, இப்போது பாதாள உலகத்துக்கு மன்னனாகி விட்ட சேதுவைக் காண்பாள்! "ஆ! என் அன்பே! நான் காண்பது கனவல்லவே! உண்மை தானே!" என்று சொல்லிக் கொண்டே சேதுவின் கையைப் பிடிக்க வருவாள். இந்தச் சமயத்தில் சேதுவின் அதிர்ஷ்டம் குறுக்கி



டும். அங்கும் ஒரு எதிரி வருவான். அவன் காதல் பூர்த்தியாகாமல் தடையேற்படும். கடைசியில் வேறு வழியின்றிச் சேது தற்கொலை செய்து கொண்டு சாவான்.

இவ்வளவும் கனவில்தான். கனவில் கூட நல்ல முடிவு ஏற்படக் கூடாதா? அதில்கூட அவன் காதல் சாவில்தான் வந்து முடிய வேண்டுமா? ஆமாம், இப்படித்தான் சேது எண்ணுவான். இந்தக் காதற் கனவு ஒரு நாளும் பலிக்காது என்று சேதுவுக்குத் தெரியும். அவனைப் பற்றி அவனுடைய முயற்சிகளைப்பற்றி அவனுக்கு நன்ருகத் தெரியும். இவ்வாறு பகற் கனவு காணும் எழுத்தாளன், வெறும் உணர்ச்சிக்கு அறிவைப் பறி கொடுக்கும் வறட்டு எழுத்தாளன் எல்லாம் பட்டினி கிடந்தோ, மனம் உடைந்தோதான் சாக வேண்டும். அவனுக்கு எங்கே வீர மரணம் ஏற்படப் போகிறது. இந்த எண்ணம் சேதுவை மேலும் துக்கத்தில் ஆழ்த்தியது.

*** *** ***

அன்று மாலை பள்ளிக்கூடம் முடிந்ததும் வழக்கம்போலக் கொள்ளிடக்கரைப் பக்கம் சென்ருன். வழக்கத்தைவிட அதிகமாகவே அதிசயங்கள் நிறைந்த கனவு கண்டான். சோகத்தில் ஆழ்ந்து போனுன். இடம், பொருள், பொழுது எல்லாமே அவனுடைய துக்கமயமான சிந்தனைகளைத் தூண்டி மேலும் மேலும் சோகத்தை அதிகப்படுத்தின.

உபாத்தியாயர் வேலை ஏற்றுக்கொண்டு அப்படி ஒன்றும் அதிகநாள் ஆகவில்லை. மூன்று மாதங்கள் இருக்கலாம். கொள்ளிடக் கரையோரமாக அவன் பள்ளிக்கூடம் இருந்தது. பள்ளிக்கூடத்தின் கூரை, அதில் இருக்கும் பிள்ளைகள், அவர்களுடைய விஷமத்தனங்கள் எல்லாமே சேதுவுக்குத் துன்பத்தைத்தான் கொடுத்தன. சேதுவின் மனம் இவ்வாறு எதைக் கண்டாலும் துக்கப்படும் படி, துயரப்படும்படி மாறி விட்டது.

மாலை நேரம். கொள்ளிடத்தின் ஒரு கோடியில் ஓடிய தண்ணீர் மாலை வெய்யிலால் தங்கம்போல் பளபளத்தது. அந்தத் தண்ணீரும் ஏதோ சாவை நோக்கி ஓடுவது போலப் பட்டது சேதுவுக்கு. அந்தி மயங்கும் நேரத்தில் அங்குள்ள பொருள்களெல்லாம் கண்ணில் பட்டாலும் ஒன்றும் பளிச்சென்று தெரியவில்லை. கொள்ளிடக் கரை ஓரத்தில் அடர்ந்து வளர்ந்திருக்கும் நாணற் புதர்கள் காற்றில் சலசலத்தன. அந்த ஓசை எங்கோ தூரத்தில் யாரோ அழுது புலம்புவது போலிருந்தது. அந்த சோக கீதம் சேதுவின் இதயத்தில் என்னென்னமோ பயங்கர எண்ணங்களைக் கிளப்பி அவனை உலுக்கி விட்டது.

உயர்ந்து நீண்டு கிடக்கும் கொள்ளிடக் கரையில் நின்று கொண்டிருந்தான் சேது. ஊருக்குள் செல்லும் சரிவான பாதையைப் பார்த்துக்கொண்டு நின்ருன். அந்தப் பாதை வழியாக ஊருக்குள்ளிருந்து மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க வீரப்பனும் இன்னும் இரண்டு மூன்று ஆட்களும் ஓடிவந்தனர். அவர்கள் கையில் குறுந்தடிகள் இருந்தன. அவர்கள் சேதுவுக்கு அருகில் வந்ததும் சட்டென்று நின்ருர்கள். வீரப்பன் சேதுவைப் பார்த்து, "இந்தப் பக்கமாக இளங்கோவனும் மலர்விழியும் வந்தார்களா?" என்று கேட்டான்.

"யாரு இளங்கோவனு?" என்ருன் சேது.

"ஆமாம் அந்தப் படுபாவிதான்."

"என்ன பண்ணினுன்?"

"மலர்விழியை அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டான். என் கண்ணில் மண்ணைப் போட்டுவிட்டு எங்கேயோபோய்விட்டான்."

"என்ன, உண்மையாகவா?"

"ஆமாம்; ஆமாம்; ஆமாம். இப்பொழுது உன்னிடம் பேசிக் கொண்டிருக்க நேரமில்லை. அவர்கள் இந்தப் பக்கம் போனதை நீ பார்த்தாயா இல்லையா? சீக்கிரம் சொல்லு."

"இந்தப் பக்கமாக ஆண் பிள்ளையோ, பெண் பிள்ளையோ யாரும் போகவில்லை."

"சரி; நான் போகிறேன். அவர்களைப் பிடிக்கவேணும்" என்று சொல்லி விட்டு வீரப்பனும் அவன் ஆட்களும் சென்று விட்டனர்.

அவர்கள் போனவுடன் சேது தன்னைத் தானே சில கேள்விகள் கேட்டுக்கொண்டான்.



"நானும் இந்த ஊரில்தான் இருக்கிறேன். தினம் தினம் மலர்விழியைப் பார்க்கத்தான் செய்கிறேன். எனக்கு அவள்மீது காதலோ அன்போ ஏற்பட்டதா? இல்லையே. அவள் தான் என்னைப் பார்த்து எப்பொழுதாவது ஒரு வார்த்தை பேசி யிருப்பாளா? நானும் ஒரு எழுத்தாளன்தானே! இளங்கோவனை விட நான் என்ன தாழ்ந்து போனேன்? மலர்விழி அவனிடம் காட்டும் அன்பில் பாதியாவது என்மீது காட்டியிருக்கக் கூடாதா?"

இந்த விசித்திரமான கேள்விக்கு அவனே பதிலும் சொல்லிக் கொண்டான். ''நான் சோம்பேறி. வாழத் தெரியாதவன். சதா இளங்கோவனின் புகழைக்கண்டு பொறாமைப் பட்டுக்கொண்டே இருந்து விட்டேன். இளங்கோவன் வாழ்க்கையை நன்றாக அனுபவிக்கத் தெரிந்தவன். இரண்டு தினங்களுக்கு முன்னால்தான் இந்த ஊருக்கு வந்தான். மலர் விழியை மயக்கி அழைத்துக் கொண்டே போய் விட்டான். நான் எதிலுமே திருப்தி இல்லாமல் இருக்கிறேன். எனக்குச் சாவுதான்கிடைக்கும். அதையும் வீர மரணமாகச் செய்து கொள்ள முடியாது. கோழைபோல, வாழ்வதற்கு அஞ்சித் தற்கொலை செய்துகொண்டுதான் சாக வேண்டும். அதைத் தவிர எனக்கு வேறு வழியே யில்லை.''

மனத்துக்குள் நடந்த இந்த விவாதத்தை இத்துடன் முடித்துக் கொண்டு விட்டான் சேது.



வயல் வெளியில் மேயச் சென்ற மாடுகள் வீடு திரும்பிக் கொண்டிருந்தன. மாடுகளின் கழுத்தில் கட்டியிருந்த மணிகளின் ஓசை கணீரென்று காற்றிலே மிதந்து வந்தது.

நிழல்கள் நீண்டன. இருள் சூழ ஆரம்பித்து விட்டது. காற்று அடித்துச் சற்று ஓய்ந்தது. நாணல் காட்டின் சலசலப்பும் நின்றது. இன்று என்னமோ சேதுவுக்கு வீட்டுக்குச் செல்லவே தோன்றவில்லை. இன்று என்ன, பல நாட்கள் அவனுக்கு அப்படித் தோன்றும். கொள்ளிடத்து மணலிலேயே இரவு வெகு நேரம் வரையில் தனியாகப் படுத்துக் கிடப்பான். பற்பல கனவுகள் காண்பான். சட்டென்று நினைத்துக்கொண்டு வீடு திரும்புவான். அதுபோல்தான் இன்றும். கொள்ளிடத்துக் கரையில் நின்றுகொண்டிருந்தவன் கொள்ளிடத்து மணலில் போய் அமர்ந்தான். மீண்டும் காற்று வீசத் தொடங்கியது. வானத்தில் நட்சத்திரங்கள் நிறைந்திருந்தன. குளிர்ந்த காற்று இனிய நினைவுகளை உண்டாக்கியது. அந்த வட்டாரத்தில் நடப்பதையெல்லாம் பார்ப்பது போல வானத்து நட்சத்திரங்கள் 'பளீர் பளீர்' என்று மின்ன ஆரம்பித்தன. நட்சத்திரங்களின் மங்கலான வெளிச்சத்தில் கொள்ளிடத்தின் தண்ணீர் விசித்திர வர்ணத்துடன் காட்சி அளித்தது.

வெறும் பகற் கனவு காணும் எழுத்தாளனாக இருந்தாலும் சேது மிகுந்த கடமை உணர்ச்சி யுள்ளவன். சிறுமையைக் கண்டு பொங்குபவன். காந்தி மகான் காட்டிய வழியில் மிகுந்த பற்றுக் கொண்டவன். தனி மனிதர்களின் உணர்ச்சிகளைச் சிந்தித்துப் பார்க்கப் பழகியவன். தன்னுடைய பள்ளிக் கூட அதிபரைப் பற்றி எண்ணிப் பார்ப்பான். அவர் சுய ஞானம் இல்லாதவர். தாமாக எதையும் செய்யும் சக்தி யில்லாதவர். ஆனாலும் அவர் கட்டளைக்கு அடிபணிந்து தான் அவன் நடக்க வேண்டி யிருந்தது. அடுத்த கணம் இளங்கோவனைப் பற்றி எண்ணினான். இவன் ஒரு எழுத்தாளனாம்! இவனுக்கு என்ன தெரியும்? இவனுக்கு என்ன படிப்பு இருக்கிறது? என்ன அனுபவம் இருக்கிறது? ஒன்றுமில்லை. ஆனாலும் இவன்தான் உலகைச் சீர்திருத்தும் பெரிய எழுத்தாளன். இதுபோன்ற நிரட்சர குட்சிகளுக்கெல்லாம் தான் இப்பொழுது காலம்! இருக்கட்டும்! இருக்கட்டும்! காலம் மாறவே செய்யும்! சேதுவின் துன்ப எண்ணங்கள் நிறைந்த வாழ்க்கையில் அவனுக்கு ஆறுதல் அளித்து வந்தது தூக்கம் ஒன்றுதான்.

அது முன் இருட்டுக் காலம். கண்ணுக்கு எட்டிய வரையில் ஒரே இருள். வானத்துச் சுடர்கள் இருட்டை மேலும் அதிகப்படுத்தியது.

சேதுவுக்குத் தூக்கம் கண்ணைச் சுழற்றியது. சோக நினைவுகள் அவனுடைய தூக்கத்துக்குத் தாலாட்டு பாடின. கொள்ளிடத்துத் தண்ணீரின் சலசலப்பு அவன் நினைவுகளுடன் ஒன்றி ஒலித்தது. மாலையில் பாடினானே யாரோ ஒரு வழிப்போக்கன்:

காதல்; காதல்; காதல்;
காதல் போயிற்; காதல் போயிற்
சாதல்! சாதல்! சாதல்!

என்று. இந்தப் பாட்டின் அடிகளைச் சேதுவின் வாய் முணுமுணுத்தது.

இரவு அமைதியுடன் இருந்தாலும் மாலைப் பொழுதில் அவன் கண்ட கனவுபோலக் கனவு காண முடியவில்லை. சேதுவின் மனத்தில் சாவைப் பற்றிய எண்ணம்தான் ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. காற்று வீசத் தொடங்கியது. தூக்கம் கண்ணைச் சுழற்றியது. ஏதோ ஒரு தெய்விக சக்தி அவன் கண்களை மூடிவிட்டது.

கண்கள் மூடிவிட்டபோதிலும் வெளியில் இருப்பதையெல்லாம் அவனால் பார்க்க முடிந்தது. மெல்லிய திரைக்குப் பின்னால் தெரிவது போல அவன் கண் முன்னால் இருப்பவை எல்லாம் தெரிந்தன. கொள்ளிடத்துத் தண்ணீர், மின்னும் நட்சத்திரங்கள், நாணற் புதர்கள் எல்லாம் தெரிந்தன. அவன் காலடியில் கொள்ளிடம் பெருமூச்சு விட்டுக் கொண்டு ஓடியது. மந்திர வீணையில் இன்ப கீதம் எழுவதற்குப் பதிலாகத் துன்பத்தை அள்ளி இறைத்துக் கொண்டிருப்பது போல இருந்தது நாணற் புதரிலிருந்து வீசிய காற்று. தூக்கம்! தூக்கத்தின் சுகத்தை இப்பொழுது

# சூப்பர் ஒயிட் கோலினாஸ்

## டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் ஒரு தடவை பல் விளக்கினால், சொத்தைப் பற்களுக்கும், வாய்நாற்றத்திற்கும் காரணமான கிருமிகள் ஒழிகின்றன.

குடும்பத்தில் யாவரும் ஸூப்பர் ஒயிட் கோலினாஸ் டூத்பேஸ்டின் குளுமையானதும், விறுவிறுப்பூட்டுவதுமான இனிய சுவையை விரும்புவார்கள்



ஒவ்வொரு தடவையும் சாப்பாட்டிற்கு பிறகு பற்களை சுத்தம் செய்ய முடியாதவர்களுக்கு ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பற்களை ஒரு தரம் விளக்கினாலும், அது உங்கள் பற்களை அதி வெண்மையாக வைப்பதன் மூலம் அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**சொத்தையிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.** ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் ஒரு தரம் பல் விளக்கினாலும், அது சொத்தை மற்றும் பற்களில் குழிகளுக்குக் காரணமான கிருமிகளை பெரும்பான்மையாக ஒழிக்கிறது என்பதை பரிசோதனைகள் நிரூபிக்கின்றன.

**வாய் நாற்றத்திலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது:** ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' டூத்பேஸ்ட் வாய் நாற்றத்தை உடனேயே அகற்றி, உங்கள் சுவாசத்தை காலையிலிருந்து இரவு வரை நறுமணத்துடனும் புதுமையுடனும் இருக்கச் செய்கிறது.

**அதிசுத்தமான பற்கள்! வாய்க்கு விறுவிறுப்பு:** ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' டூத்பேஸ்ட் உங்கள் பற்களை எவ்வளவு விரைவில் பிரகாசமாயும் அதி வெண்மையுடனும் வைத்து வாயையும் சுத்திகரிக்கிறது என்பதைப் பாருங்கள்.

எப்பொழுதும் ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' வேண்டுமென்றே கேளுங்கள்




Registered User
Geoffrey Manners & Company Private Limited

**முற்றிலும் நிரூபிக்கப்பட்டது!**





விஞ்ஞான சோதனைகள் ஸூப்பர் ஒயிட் 'கோலினாஸ்' கொண்டு ஒரு தரம் பல் விளக்கினாலும், அது சொத்தைப் பல் மற்றும் வாய் நாற்றத்திற்குக் காரணமான கிருமிகளைப் பெரும்பான்மையாக முற்றிலும் அழிக்கிறது என்பதை நிரூபித்துள்ளன.

K. 71

சேது உணர ஆரம்பித்தான். இந்தச் சமயத்தில் அவன் தலைமாட்டுக் கருகில் யாரோ இரண்டு பேர்கள் அடிமேல் அடிவைத்து வருவதுபோல இருந்தது. சேதுவுக்கு மாலையில் நடந்த சம்பவம் நினைவுக்கு வந்தது. வீரப்பனும் அவன் ஆட்களும் ஓடி வந்ததும், இளங்கோவனைப் பற்றி அவர்கள் கேட்டதும் நினைவுக்கு வந்தன. இளங்கோவனும் மலர்விழியும் இத்தனை நேரம் எங்கு சென்றிருப்பார்களோ என்று எண்ணினான். அவர்கள் எங்கேயாவது போய்த் தொலைகிறார்கள். அதைப்பற்றி நமக்கென்ன கவலை! என்று நினைத்துக் கொண்டே தூங்கி விட்டான். ஆழ்ந்து தூங்கிவிட்டான். அவனை யாரும் இனி எழுப்ப முடியாது. இளங்கோவனையும் மலர்விழியையும் அவன் நன்றாகப் பார்த்திருக்கிறான். எப்பொழுதாவது ஒருதரம் இளங்கோவனை நேருக்கு நேர் பார்த்து அவன் கர்வத்தை ஒடுக்க வேண்டும் என்று அவன் பலமுறை எண்ணியது உண்டு. அந்தச் சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைக்கவில்லை.

மீண்டும் யாரோ இரண்டு பேர்கள் தன் தலைமாட்டில் மெதுவாகப் பதுங்கிப் பதுங்கி நடப்பதுபோலிருந்தது. தலையை ஒரு தரம் தூக்கிக் கண்களைத் திறந்து பார்த்தான். வீட்டுக்குத் தெரியாமல் தப்பி ஓடிய காதலர்களைப் பற்றிய கதைகள் அவன் நினைவுக்கு வந்தன.

சில மாதங்களுக்கு முன்னால் இளங்காதலர்கள் இருவர் பெற்றோர்களுக்குத் தெரியாமல் வீட்டை விட்டு, ஏன்? ஊரை விட்டே ஓடி விட்டனர். காதலி ஆண் உடையிலேயே தன் காதலனுடன் சென்று விட்டாள். மாறு உடையிலே பல நாட்கள் இன்பமாகச் சுற்றித் திரிந்தார்கள். கடைசியில் எப்படியோ போலீஸார் அவர்களைத் தேடிப் பிடித்து விட்டனர். அவர்களுடைய காதல் நிறைவேறாமலே போய் விட்டது.

இதெல்லாம் கனவா? அல்லது உண்மை தானா? காலடிச் சத்தம் வெகு சமீபத்தில் கேட்கிறதே! சந்தேகமே இல்லை. இரண்டு பேர்கள் நாணற் புதர் அருகில் பதுங்கிப் பதுங்கிச் செல்லுகிறார்கள். அவர்களைச் சேது நன்றாகப் பார்த்தான்.



"யார் அது?"

சேதுவின் குரல் கம்பீரமாக ஒலித்தது. ஒரு பதிலும் இல்லை. தான் பார்த்தது ஒரு வேளை தவறோ என்று கூட எண்ணினான். ஆனால் அதே கணத்தில் அங்கு இருவர் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு போவது தெளிவாகத் தெரிந்தது.

"யார் அது? யார் அங்கே போவது?" என்று அதிகாரத்துடன் கேட்டான். இப்போது சேது எதற்கும் தயாராகி விட்டான். ஆனாலும் அவனுடைய உடல் மெதுவாக நடுங்கியது. அதை வெளியில் காண்பித்துக் கொள்ளாமல் இருக்க முயன்றான்.

"வீணாகச் சத்தம் போடாதே!" என்று சொல்லிக் கொண்டே அந்த உருவங்கள் சேதுவை நோக்கி வந்தன. ஒன்று ஆண். மற்றொன்று பெண். மிடுக்கான அந்த ஆண் உருவம் கை எடுத்துக் கும்பிட்டுக் கொண்டே சேதுவை நெருங்கி வந்தது.

சேதுவின் பயம் தெளிந்து விட்டது! அவனுக்கு இப்பொழுது வியப்பும் ஆச்சரியமும் தைரியமும் ஏற்பட்டு விட்டன.

மாலையில் வீரப்பனும் அவன் ஆட்களும் யாரைத் தேடிக் கொண்டிருந்தார்களோ அவர்கள். இளங்கோவனும் மலர்விழியும் தன் முன்னால் நிற்பதைப் பார்த்தான்.

"நன்றாக மாட்டிக் கொண்டீர்களா? அப்படியே நில்லுங்கள். நகர்ந்தீர்களோ இதோ இந்தத் தடியால் மண்டையைப் பிளந்து விடுவேன்" என்று தன் கையில் இருந்த தடியைத் தூக்கிக் காண்பித்தான்.

"ஐயா! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. எங்களைத் தடுக்காதீர்கள்" என்று வணங்கினான் இளங்கோவன்.

"எங்கே கிளம்பினீர்கள்? உண்மையைச் சொல்லுங்கள்" என்று அதட்டினான் சேது.

இளங்கோவன் தைரியத்தையெல்லாம் வரவழைத்துக்கொண்டு மறுமொழி கூறினான்:

"தாங்கள்தானே பூங்குளம் பள்ளிக்கூட வாத்தியார்? இல்லை; எழுத்தாளர் சேது?"

"ஆமாம்."

"நானும் உங்களைப்போல உணர்ச்சியுள்ள ஒரு எழுத்தாளன்தான்."

"தெரியும்! நீதான் இளங்கோவன்என்று."

"தாங்களும் ஒரு எழுத்தாளன். நானும் ஒரு எழுத்தாளன். ஒரு எழுத்தாளன் மன உணர்ச்சிகளை இன்னொரு எழுத்தாளன்தான் புரிந்து கொள்ள முடியும். இதோ என் அருகில் நிற்கிறாளே! இவளை நீங்கள் பார்த்திருக்கலாம். இவள்தான் மலர்விழி. இவளைப் பார்த்தவுடனேயே இவளிடம் என் இதயத்தைப் பறி கொடுத்து விட்டேன். இவள் துணை இல்லாமல் என்னால் வாழ முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. அவளும் அப்படித்தான் இருக்கிறாள். நாங்கள் இருவரும் மனம் ஒப்பித் திருமணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டோம். அதற்கு வீரப்பன் குறுக்கே நிற்கிறான். ஆகையால் இங்கிருந்து யாருக்கும் தெரியாமல் சென்னைப் பட்டணத்துக்குப் போய்த் திருமணம் செய்து கொள்வது என்று தீர்மானித்து விட்டோம். தயவு செய்து எங்களைப் போக விடுங்கள்" என்று காலில் விழுந்து வணங்காத குறையாகக் கெஞ்சினான் இளங்கோவன்.

"நீ இலக்கியத்தில்தான் திருடனென்றால், வாழ்க்கையிலும் திருடனாக இருக்கிறாய். எங்கள் ஊர்ப் பெண்ணை யாருமறியாமல் இவ்வாறு அழைத்துப் போவதை நான் விரும்ப மாட்டேன்" என்றான் சேது.

"அது என்ன என்னைப் பார்த்து இலக்கியத் திருடன் என்கிறீர்கள்?"

"உன் கதைகளையெல்லாம், கவிதைகளையெல்லாம் நான் படித்திருக்கிறேன். நீ வேண்டுமானால் தன்னம்பிக்கையுடன் அதை எழுதி விடலாம். அதைப் பார்த்துப் பலர் உன்னைப் பாராட்டி விடலாம். ஆனால் என்

போன்ற உண்மை விளம்பிகள் சிலர் அதைப் பார்த்துப் பாராட்ட மாட்டார்கள். எந்தக் கதைகளை ஆதாரமாக வைத்துக்கொண்டு அதை எழுதினாய் என்று எனக்குத் தெரியும்.''

''தயவுசெய்து சற்று நிதானமாகச் சிந்தனை செய்து பாருங்கள். ஒரு நூலைப் படிக்கும் போதுதான் நமக்கு ஒரு சிந்தனை வருகிறது. அதை நம்முடைய வாழ்க்கையோடு கலந்து கதைகள் எழுத, கவிதைகள் புனைய, நாடகங்கள் இயற்ற முயற்சி செய்கிறோம். இலக்கியமே ஒரு ஒட்டுமாஞ் செடிபோல்தானே!''

''இல்லை. இதை நான் ஒத்துக் கொள்ள முடியாது'' என்றான் சேது.

''அப்படிப் பார்த்தால், எந்த இலக்கிய மேதைகளின், கவிதைகளையும் கதைகளையும் பற்றிக் குறை சொல்லிவிடலாம். 'இதுபோல் ஏற்கனவே அவர் எழுதியிருக்கிறார்' என்று ஆதாரம் காட்டி விடலாம். உண்மை அப்படி அல்ல; இந்த ஆசிரியர் அந்தக் கருத்தை, சம்பவத்தை எப்படிக் கையாண்டிருக்கிறார் என்றுதான் எண்ணிப் பார்த்து அனுபவிக்க வேண்டும். ஒரே அநுபவமும் ஒரே எண்ணமும் பல சமயங்களில் பலருக்குத் தோன்றுவதுண்டு. வார்த்தைகளும்கூட அப்படியே அமைந்து விடுவதுண்டு. ஆகையால் அதை வைத்துக்கொண்டு என் இலக்கியப் படைப்புகளைக் குறைகூறக் கூடாது.''

''ஆமாம். நீ சொல்லுவதும் உண்மைதான். ஏதோ அவசரத்தில், அனுபவக் குறைவால் இப்படிச் சொல்லி விட்டேன். ஆனால் அதற்காக மலர்விழியைத் திருட்டுத்தனமாக அழைத்துப் போவதை ஒப்புக் கொள்ள மாட்டேன். அவள் தந்தையிடம் சொல்லி ஊரறியத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்வதுதான் தர்மம்.''

''அப்படித்தான் செய்யப் போகிறேன். முதலில் வீரப்பனிடமிருந்து மலர்விழியைக் காப்பாற்றி விட்டுப் பிறகு பெரியசாமியைப் பார்த்து' எங்கள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்யப் போகிறேன்.''

''இதெல்லாம் ஊரை ஏமாற்றும் வேலை.''

''அதெல்லாம் இல்லை. நான் உண்மையைத்தான் சொல்லுகிறேன். எனக்கு இதில் உதவி செய்ய வேணும்'' என்று கண்களில் நீர் மல்கக் கெஞ்சினான் இளங்கோவன்.

இளங்கோவன் இவ்வாறு சேதுவிடம் கெஞ்சுவது மலர்விழிக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆனாலும் ஒன்றும் செய்ய வழி தெரியாமல் தன்னுடைய கைகளைப் பிசைந்து கொண்டு நின்றாள்.

சேது என்ன நினைத்தானோ தெரியவில்லை. நாம் தான் அதிர்ஷ்ட மில்லாதவன். இது போன்ற காதல் வாழ்க்கைக்குக் கொடுத்து வைக்கவில்லை. இளங்கோவனின் வாழ்வில் ஏன் குறுக்கிட வேண்டும் என்று எண்ணினான். அந்தச் சமயத்தில் அவனுக்கு உதவி செய்வது என்று தீர்மானித்தான். ''சரி போ! ஆனால் மீண்டும் மலர்விழியின் தந்தையைப் பார்த்துத் திருமணத்துக்கு ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். அதற்கு வேண்டுமானால் நான் உனக்கு உதவி செய்கிறேன்'' என்றான்.

இளங்கோவனுக்கு நன்றி உணர்ச்சி பொங்கியது. ''கொஞ்சம் தமிழ் படித்திருந்தாலே, தமிழிடம் நேசம் இருந்தாலே போதும். அவர்கள் கட்டாயம் இரக்கம் உள்ளவர்களாகத்தான் இருப்பார்கள். எதையும் அனுதாபத்துடன் பருத்து உணரும் சக்தி பெற்று விடுகிறார்கள். நீங்கள் எழுத்தாளர். எதிர்காலத்தில் முன்னுக்கு வர வேண்டிய உயர்ந்த சிந்தனையாளர். நீங்கள் கட்டாயம் எனக்கு உதவி செய்வீர்கள் என்று எனக்கு முன்னமேயே தெரியும்'' என்றான்.

சேதுவின் மனத்தில் அவனுடைய வாழ்நாளில் இதுவரையில் ஏற்படாத ஒரு குதூகலம் ஏற்பட்டு விட்டது. நாடெல்லாம் போற்றும் எழுத்தாளர் இளங்கோவன் தன்னைப் பார்த்து 'முன்னுக்கு வரவேண்டிய உயர்ந்த சிந்தனையாளன்' என்று சொன்னதை எண்ணி மகிழ்ந்து போனான். அடாடா! ஒருவருக்கு நம்பிக்கை அளிக்கும் வகையில் ஊக்கமும் உற்சாகமும் ஊட்டினால் அவர்கள் வாழ்க்கையில் எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டுவிடுகின்றன. நம் நாட்டுக்கு இப்போது வேண்டியதும் இதுதானே! ஒருவரிடம் உள்ள குறையைப் பார்த்துக் குறை கூறுவதைவிட, அவரிடம் உள்ள குணத்தைப் பார்த்துப் போற்ற வேண்டும்; அதற்குத்தான் எல்லாரும் பழகிக் கொள்ள வேண்டும்.

''நான் ஏதோ இதுவரையில் அசட்டுப் பிசட்டென்று பேசியிருப்பேன். அதையெல்லாம் மறந்துவிடு. நீயும் மலர்விழியும் தமிழும் இசையும் போல வாழப் பிரார்த்திக்கிறேன்'' என்று சொல்லி வாழ்த்தினான் சேது.



இவைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மலர் விழியின் கண்கள் ஆனந்தத்தால் மலர்ந்தன. அந்த உற்சாகத்தில் அவள் சற்று வேகமாக நடக்க ஆரம்பித்தாள். அப்பொழுது அவள் தலையிலிருந்த புஷ்பம் தரையில் விழுந்து விட்டது. அதைக் குனிந்து எடுத்தாள். அப்படி எடுக்கும் போதே சேதுவை நன்றி பொங்கப் பார்த்தாள். அடாடா! அந்தப் பார்வை ஒன்றுக்காகவே இந்த வாழ்நாள் முழுவதும் அவளுக்குத் தொண்டு செய்யலாமே என்று தீர்மானித்து விட்டான் சேது. அவனுடைய வாழ்க்கையின் சிகரம் போன்ற இந்த நேரத்தில் அவனுடைய மனத்தில் நல்ல அமைதி நிலவியது.

திடீரென்று கொள்ளிடத்து நாணற் புதரில் ஒரு சிறு சலசலப்புக் கேட்டது. அதைத் தொடர்ந்து ''அதோ! அதோ! போகிறார்கள், பிடி! பிடி!'' என்று பல குரல்கள்

கேட்டன. சேது அலறி அடித்துக்கொண்டு எழுந்திருந்தான். அவனுடைய தூக்கம் கலைந்து விட்டது. கனவு முடிந்து விட்டது.

இப்பொழுது அவனுக்கு உடலெல்லாம் நடுக்க மெடுத்தது. வான வீதியில் நட்சத்திரங்கள் மின்னின. கொள்ளிடத்துத் தண்ணீர் ஏதோ முறு முறுத்தது! ஒரு கணம் ஒன்றும் தோன்றவில்லை. இத்தனைநேரம் தான் கண்டதெல்லாம் கனவுதானா? நல்ல வேளை. அது கனவாகவே இருக்கட்டும் என்று எண்ணினான். இந்த இளங்கோவன் என்னுடைய கனவில் வேறு வந்து தொல்லை கொடுக்க வேண்டுமா? என்று எண்ணிக் கொண்டு வீட்டுக்குப் போனான்.



வீட்டுக்குள் நுழைந்ததும் ஒரு திடுக்கிடும் செய்தியைக் கேட்டான். அவனையும் அறியாமல் 'என்ன கொடுமை!' என்று கத்தினான். அப்படியே திகைத்துப் போனான். சேது கேள்விப்பட்ட பயங்கரச் செய்தி இதுதான் :

*** *** ***

**வ**ழக்கம் போலவே அன்றும் இளங்கோவன் மலர்விழியைப் பார்ப்பதற்குப் புறப்பட்டான். விளக்கை நோக்கி ஓடும் விட்டிலைப் போல மலர்விழியைச் சந்திக்கும் தோப்பை நோக்கி வேகமாகச் சென்றான். வயல்களின் இனிய மணமும், மாலைச் சூரியனின் இனிமையும் அவனுக்கு உற்சாக மூட்டின. அவசரம் அவசரமாக நடந்தான். அவர்கள் இருவரும் சந்திக்கும் தோப்புக்கு அருகில் இப்போது வந்து விட்டான். என்ன ஆச்சரியம்! அவனுக்கு முன்பாகவே மலர்விழி அங்கு வந்து காத்துக் கொண்டிருந்தாள்.

தூரத்தில் இருந்தபடியே மலர்விழியைப் பார்த்தான். நேற்றைய தினத்தை விட இன்று இன்னும் அதிக அழகுடன் காட்சி அளித்தாள் மலர்விழி. அவள் முகம் புதுமையான அழகுடன் பொலிந்தது. கண்கள் பளபளவென்று மின்னின. சின்னஞ் சிறு பெண் போல இளமையுடன் தோன்றினாள். எதையோ சொல்லுவதற்குப் பயப்படுபவள் போல உதட்டைக் கடித்துக் கொண்டிருந்தாள். அவள் உதடுகளில் குறும்புத்தனம் துள்ளி விளையாடியது. அவள் கைகள் இளங்கோவனைப் பிடித்துக் கொள்ள அழைப்பதுபோல் நீண்டிருந்தன. இளங்கோவன், ''மலர்விழி!'' என்றுஅன்போடு அழைத்தான்.

''இளங்கோவே! வந்து விட்டீர்களா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் அருகில் வந்தாள்; அவன் கைகளைப் பற்றினாள்.

இளங்கோவன் இந்த உலகத்திலேயே இல்லை. எங்கேயோ எல்லையற்ற இன்பக் கடலில் மிதந்து செல்வது போல் தன்னை மறந்த லயத்தில் இருந்தான். சுயநினைவு வந்ததும் தன்னுடைய கைகளை விடுவித்துக் கொள்ள முயன்றான்; முடியவில்லை.

''நீங்கள் இன்று வழக்கத்தைவிடச் சற்று முன்னதாக வருவீர்கள் என்று எனக்குத் தெரியும்'' என்றாள்.

அவன் பதிலே பேசவில்லை. மலர்விழியின் கருங் கூந்தலை மெதுவாகக் கோதி விட்டான். அப்படியே அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பிப் பார்த்தான். அடாடா! அந்த முகத்தின் சக்தியைப்பற்றி என்ன சொல்வது? அவனை அதள பாதாளத்துக்கு அழைத்துச் செல்லவோ, வானத்தின் உயரத்துக்குத் தூக்கிச் செல்லவோ அவனை இஷ்டப்படி ஆட்டிவைக்கவோ கூடிய எல்லா மந்திர சக்திகளும் இருந்தன.

''இப்பொழுது உனக்குச் சந்தோஷம் தானே! நான் உன் அருகிலேயே இருக்கிறேன். இனி எப்போதும் உன்னைச் சேர்ந்தவன் நான்'' என்று சொல்லிக் கொண்டே அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு தரையில் உட்கார்ந்தான். அவளுடைய கைவிரல்கள் தன் கைகளில் தவழ்ந்து விளையாடுவதை அவனால் உணர முடிந்தது.

''என்னவோ தெரியவில்லை இன்று காலையிலிருந்தே என் மனம் ஒரு நிலையில் இல்லை. மனம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது. பயமாக இருந்தது. உங்களை உடனே பார்க்க வேண்டும் என்று ஓடோடியும் வந்தேன்'' என்றாள்.

''வீணாக நீயே உன் மனத்தை அலட்டிக் கொள்கிறாய். என்னை இதயமற்றவன் என்று எண்ணிவிட்டாயா? உன்னைக் கைவிட்டு விடுவேன் என்று பயமா?'' என்றான்.

அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் இளங்கோவனுக்கு முன்னால் சாய்ந்து படுத்தாள் மலர்விழி. நீல வானத்தை அண்ணாந்து பார்த்தாள். அப்படியே இளங்கோவன் முகத்தைப் பார்க்கத் திரும்பினான். அவன் முகத்தை ஆசையோடு பார்த்தான். ஏன் அவள் முகம் இப்படிச் சட்டென்று பயங்கரமாக மாற வேண்டும்? இதுவரையில் புது மலர்போல அவள் முகத்தில் பொங்கிக் கொண்டிருந்த குதூகலம் ஏன் மறைந்தது?

''ஏன் இப்படிப் பயங்கரமாகப் பார்க்கிறாய், மலர்விழி?'' என்று கேட்டான்.

அதற்குப் பதில் சொல்லாமல் தன்னுடைய கைகளை உயர்த்தி இளங்கோவனுக்குப் பின்னால் எதையோ காண்பிக்க முயன்றாள். அடுத்த கணம் ''ஆ! ஐயோ!'' என்று பயங்கரமாக அலறினாள் மலர்விழி. இளங்கோவனோ ''ஐயோ, செத்தேன்!'' என்று தலையைப் பிடித்துக் கொண்டு சுருண்டு விழுந்தான்.

வீரப்பனின் ஆட்கள் யாரோ மறைந்து நின்று ஒரு குறுந்தடியால் இளங்கோவனை நன்றாகத் தாக்கி விட்டனர்.

இளங்கோவன் மண்டை உடைந்து ரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தான். (தொடரும்)




# விசித்திரச் சலங்கை

கதை—வாண்டுமாமா
படம் — பாபு













அதோ நம்மை வரவேற்க அவனே வருகிறான். நீ இங்கேயே இரு, மங்களா! நான் போய் அவனைச் சந்திக்கிறேன்.....


யாரடா.. நீ! மனிதப் பூச்சியே? நான் கேட்டிருந்த கிட்டுகியை எனக்குக் காணிக்கையாகக் கொண்டு வந்திருக்கிறாயா? எங்கே..?


ஹ..ஹா..ஹா! என்னோடு போராடவா? சபாஷ்.பலே.பலே! இதோ இப்போதே உன்னைக் கசக்கிப் பொடியாக்கிக் காற்றிலே ஊதுகிறேன், பார்.....
கிட்டுகி அதோ இருக்கிறாள். நான் உன்னோடு போராட வந்திருக்கிறேன்... என்னை வென்ற பிறகு தான் நீ அவளை அடைய முடியும். தெரிந்ததா?


தொடரும்

# உங்கள் விருப்பத்திற்கேற்ற அழகு

உங்கள் சருமத்தை இளமையுடனும், உள்ளத் துடிப்புடனும், புதுமையோடு பொலிவுடனும் வையுங்கள். இயற்கை எழிலின் மோஹனத் தோற்றத்துடன் எப்பொழுதும் விளங்குங்கள்.

''ஹாஸலீன்' ஸ்நோ'' உங்கள் சருமத்தை குளுமையாயும், வெண்மையாயும் வைப்பதோடு அதற்கு தனி அழகும் ஊட்டுகிறது. மற்றும் அது திருட இயலாத பாக்கிங்கில் கிடைக்கிறது.




## "'HAZELINE' SNOW"

(TRADE MARK)



''ஹாஸலீன்' ஸ்நோ''

ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு




பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னுல் கந்தன் என்ற பெயருடைய ஒரு குடியானவன் இருந்தான். அவன் வாழ்ந்தது ஒரு சிறு கிராமம். அந்தக் கிராமத்திலுள்ள மக்கள் எல்லோரும் ரொம்ப ஏழைகள். கந்தனும் ஏழைதான். ஆனுல் உழைப்பாளி. அவனுக்குக் காணி நிலமும் ஒருசில ஆடுமாடுகளும் இருந்தன. புஞ்சை நிலம். ஆகவே நாளெல்லாம் பாடுபட்டு உழைத்தால்தான் பலன் கிடைக்கும். ஆடு மாடுகளை மேயவிட்டு அவை தரும் பாலைக் கொண்டு ஏதோ கந்தனின் வாழ்க்கை நடந்து வந்தது.

கிராமத்திலிருந்து வெகு தூரத்தில் கருநீலமான மலை வரிசைகள் சுவர் வைத்தது போலத் தெரியும். அந்த மலையின் சிகரங்களை யாருமே பார்த்ததில்லை. ஏனென்ருல் அவைகளை எப்போதும் மேகங்கள் சூழ்ந்து மறைத்துக் கொண்டிருக்கும். அந்த உயர்ந்த மலை முடிகளைப் பற்றிப் பலவிதமாகக் கிராமத்து ஜனங்கள் பேசிக்கொள்ளுவதைக் கந்தன் கேட்டிருக்கிருன். அந்த மலைஉச்சியிலே அழகானதொரு தேவகன்னிகை வசிப்பதாகவும், அவளைப் போன்ற அழகியை இந்த உலகத்திலேயே காண முடியாது என்றும் சொன்னுர்கள். அவளால் முடியாததே கிடையாது. மழையையும், காற்றையும், வெய்யிலையும், பனியையும் அவள்தான் அனுப்புகிருள் என்று கூடச் சொன்னுர்கள்.

இப்படிக் கந்தனுக்கு நினைவு தெரிந்ததிலிருந்து, மலையுச்சியிலே கண்களைக் கூச வைக்கும் மாளிகையிலே வாழும் அந்தத் தேவகன்னிகையைப் பற்றி எத்தனை எத்தனையோ கேள்விப்பட்டிருக்கிருன். புள்ளி மான்கள் பூட்டிய வெள்ளி ரதத்திலேதான் அவள் பவனி வருவாளாம். இத்தகைய அதிசய தேவதையைக் காண வேண்டும் என்ற ஆவல் கந்தனின் நெஞ்சிலே நெடு நாட்களாக வளர்ந்து வந்தது.

அப்படி ஒரு நாள் தன் ஆடு மாடுகளை மேய விட்டு விட்டு ஒரு மர நிழலில் உட்கார்ந்திருக்கும் போது சற்றுத் தூரத்தில் ஒரு புள்ளி மானும் அதன் குட்டியும் திடீரென்று தோன்றின. அதன் அழகில் மயங்கி அதையே பார்த்த கந்தனுக்கு அவை தலையை அசைத்துத் தன்னை அழைப்பது போலிருந்தது. ஆவலோடு எழுந்து சென்று அதனைப் பின்தொடர்ந்தான். மான்கள் கந்தனை ஏமாற்றி ஏமாற்றி மலை மீது அழைத்து வந்து விட்டன.

இரண்டு பெரிய மலைகளுக்கு இடையே கணவாய் போன்றதொரு வழி சென்றது. மான்கள் அதில் புகுந்து மறைந்தன. மலையுச்சியை அடைந்து விட்ட கந்தன் அந்த இடைவெளியின் வழியே பார்த்த போது, அப்படியே திகைத்துத் திக்குமுக்காடிப் போனுன். அவன் முன்னே கரடு முரடானபாதை இல்லை. பிரும்மாண்டமான அரண்மனையின் பளிங்குக்கல் நடைபாதை நீண்டு சென்றது. தூரத்திலே வானளாவிய கோபுரங்களோடு கூடிய அரண்மனை தகதகவென்று பிரகாசித்தது.

கந்தன் தாளமிடும் உள்ளத்தோடு தட்டுத்தடுமாறியபடி மெள்ள மெள்ள அந்தப் பளிங்குப் பாதையின் வழியே நடந்து சென்ருன். பாதையின் முடிவிலே விசாலமான மண்டபமொன்றின் நடுவிலே நவரத்தினங்கள் வைத்து இழைக்கப்பட்ட சிம்மாசனத்திலே அழகே உருவாக ஒரு பெண் புன்முறுவல் தவழும் முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். தான் காண வேண்டுமென்று காத்துக் கிடந்த தேவகன்னிகை இவள் தான் போலிருக்கிறது என்று எண்ணினுன் கந்தன். தோளிலே விரிந்து கிடந்த அவள் கேசத்தை விதம் விதமான மலர்கள் அலங்கரித்தன. வண்டு போன்ற கண்களிலே கருணை வழிந்தது. தந்தம் போன்ற அவள் கரத்திலே பொன்னிறமான மலர்க்கொத்து ஒன்றை வைத்திருந்தாள்.

அவளுடைய அற்புத அழகிலே தன்னை மறந்து சிலையாக நின்றுவிட்ட கந்தனைப் பார்த்து அவள் முத்துப்போன்ற தன் பல் வரிசை தெரிய முறுவலித்தாள். யாழினுமினிய குரலிலே பேசினுள்:

''மான்களை அனுப்பி நான்தான் உன்னை இங்கு அழைத்து வரும்படி செய்தேன், கந்தா! உன் வாழ்வும் உன் கிராமத்து மக்கள் வாழ்வும் வளம் பெற்று சந்தோஷமாக இருக்க வேண்டும் என்று நீ பல தடவைகள் உள்ளமுருக ஆண்டவனை வேண்டிக் கொள்வதை நான் கேட்டிருக்கிறேன். நல்லவனுன உன் விருப்பம் நிறை

வேறும் வேளை வந்து விட்டது. இதோ பார்! என் மாளிகையில் தங்கமும், வெள்ளியும், பொன்னும் மணியும் வைரமும் கொட்டிக் குவித்திருக்கிறேன். நீ எதை விரும்புகிறாயோ, அது உன்னுடைய தாகிவிடும்'' என்றாள்.

கந்தனுக்கு ஏற்பட்டிருந்த வியப்பினால் முதலில் பேசவே முடியவில்லை. ''மலையரசியே! உன் கருணைக்கு மிக்க வந்தனம். இந்த மாளிகையிலே கொட்டிக் கிடக்கும் செல்வங்களை எல்லாம் பார்த்தேன். ஆனால் என் வரையில் அதோ தங்கள் கையிலுள்ள அந்தப் பொன் மலர்க் கொத்துக்கு அவை எல்லாம் ஈடாகாது. அந்த மலர்களையே நான் விரும்புகிறேன்'' என்றான்.

கந்தனின் வார்த்தைகளைக் கேட்ட மலையரசியான அந்தப் பெண் மகிழ்ச்சியோடு சிரித்தாள். ''கந்தா! நீ சரியான பொருளைத்தான் தேர்ந்தெடுத்தாய்...இந்த மலர்களை மட்டுமல்ல, இதைப் பயிரிட இதன் விதைகளையே உனக்குத்தருகிறேன்'' என்று சொல்லித் தன் அருகிலிருந்த ஒரு தந்தப் பேழையையும் தான் வைத்துக் கொண்டிருந்த மலர்க் கொத்தையும் கந்தனிடம் கொடுத்தாள். அதைப் பெற்றுக் கொண்ட கந்தன் தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்க நினைத்தபோது பளிரென்று ஒரு ஒளி தோன்றியது. கந்தன் கீழே கீழே கீழே எங்கோ உருண்டு உருண்டு போய்க் கொண்டிருப்பதை உணர்ந்தான். மறுபடியும் அவன் கண் விழித்தபோது மெத்தென்ற புல்தரையிலே தான் படுத்திருப்பதையும் தன் அருகே தந்தப் பேழையும் பொன்னிற மலர்களும் இருப்பதையும் உணர்ந்தான். மாய மாளிகையோ மயக்கும் வனப்புடைய தேவகன்னிகையோ எதுவும் இல்லை. கண்டது கனவல்ல என்பதைப் பேழையும் பூங்கொத்தும் நினைவுபடுத்தின.

மெள்ள எழுந்திருந்து ஆடுமாடுகளை ஓட்டிக்கொண்டு தன் குடிசைக்கு வந்தான் கந்தன். மறுநாளே தன் நிலத்தை உழுது பேழையிலிருந்த விதைகளை விதைத்தான்.

சிலநாட்களில் 'பசேல்' என்று செடிகள் முளைத்து வளர்ந்தன. ஒருநாள் காலை தன் நிலத்தில் கந்தன் கண்கொள்ளாக் காட்சி! யொன்றைக் கண்டான். தேவ கன்னிகையின் கையிலிருந்த பொன்னிற மலர்களைப் போலவே நிலத்திலிருந்த செடிகளெல்லாம் பூத்துக் குலுங்கின. கந்தன் மகிழ்ந்து போனான். பூக்கள் வண்ணமிழந்து வாடின. அதன் அடியிலே காய்கள் தோன்றின. காய்கள் உலர்ந்து வெடித்த போது அதன் உள்ளிருந்து பாலின் நுரையைப் போன்ற ஏதோ ஒன்று வெளிப்பட்டது. இப்போது அவன் நிலமெல்லாம் வானத்திலுள்ள வெண் மேகங்களைப் பூமியிலே பிய்த்துப் போட்டது போல அங்கங்கே வெண்மையான வஸ்துக்கள் சிதறிக் கிடந்தன.

அது என்ன என்பதை அறியாத கந்தனின் முன்னால் ஒரு நாள் தேவ கன்னிகை தோன்றினாள். ''கந்தா! நான் கொடுத்த விதைகளைத் தெளித்து, நன்றாகப் பாடு பட்டுப் பயிர் செய்கிறாய். நீ பட்டபாட்டுக்குப் பலனும் கிடைத்திருக்கிறது. நீ பயிரிட்ட செடியின் பெயர்தான் பருத்தி. இந்தச் செடி உனக்கும் உன் கிராம மக்களுக்கும் செல்வத்தையும் சுக வாழ்வையும் சந்தோஷத்தையும் கொடுக்கப் போகிறது. உன் சகோதரர்களான கிராம மக்களைக் கூப்பிடு. இந்தப் பருத்திச் செடியின் பஞ்சிலிருந்து அழகான ஆடைகள் தயாரிப்பதுஎப்படி என்பதைச் சொல்லித் தருகிறேன்'' என்றாள்.

மகிழ்ச்சி பொங்கும் உள்ளத்தோடு கந்தன் ஓடிப் போய்க் கிராம மக்களை அழைத்து வந்தான். தேவகன்னிகை அவர்களுக்குப் பஞ்சிலிருந்து நூல் நூற்று ஆடை தயாரிப்பது எப்படி என்பதைக் கற்றுக் கொடுத்துவிட்டு மறைந்தாள்.

கந்தனுக்கும் அந்தக் கிராமத்து மக்களுக்கும் — ஏன் யாருக்குமே — அதுவரை பருத்தி ஆடையைப் பற்றித் தெரியாது. மரப்பட்டைகளையும், பிராணிகளின் தோலையும் இலை தழைகளையும் தான் ஆடையாக அவர்கள் அணிந்து கொள்ளுவது வழக்கம்.

அது முதல் அக் கிராம மக்கள் ஏராளமாகப் பருத்திச் செடியைப் பயிரிட்டனர். கிடைத்த பஞ்சிலிருந்து அழகான ஆடைகள் நெய்து பக்கத்து ஊர்களுக்கெல்லாம் கொண்டுபோய் விற்றார்கள். பல ஊர்களிலிருந்தெல்லாம் ஜனங்கள் கந்தனின் கிராமத்தை முற்றுகை போட ஆரம்பித்தனர்.

தேவகன்னிகை அளித்த பொன்னும் மணியும் வேண்டாமென்று வந்துவிட்டான் கந்தன். ஆனால் வேண்டாமென்ற அந்தப் பொன்னும் மணியும் அவன் காலடியில் தானாகவே வந்து குவிந்தன. காரணம் அவன் உழைப்பினால் தோன்றிய அப் பொன்மலர்களே.





அவள் அழகி — அவள் அருகாமை

மகிழ்ச்சியூட்டுகிறது



அவள் உபயோகிப்பது

டாடாவின்

# ஜேய்

மனங்கவரும் மணமுள்ள சௌம்யமான டாய்லெட் சோப்பு!

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

TJ. 5635

# சிலம்புக் கம்பு

பைங்காநாடு

முதலியாருடைய வண்டி வாசலில் வந்து நின்றது. மரகதம் கவலைப்பட்டது வீண் போகவில்லை. இரண்டு ஆட்கள் வீரப்பத் தேவரை வண்டியிலிருந்து கைப்பிடியாகக் கொண்டு வந்து கயிற்றுக் கட்டிலில் கிடத்தினார்கள். கூட வந்திருந்த இருவரும் ''நாங்க வரோம். தேவரை நல்லாக் கவனிச்சுப் பாருங்க'' என்று சொல்லி விட்டுச் சென்றனர்.

''தங்கச்சி! பயப்படாதே. கொஞ்சம் தோள் பட்டையிலே அடி பட்டிடுச்சு; அவ்வளவுதான்! மயக்கமா விழுந்திட்டாரு. கொஞ்சம் போனால் மயக்கம் தெளிஞ்சிடும்'' என்று கூட வந்தவர்களில் ஒருவன் சொன்னான்.

''ஆ! யாரு அடிச்சுப் போட்டாங்க, அப்பா! உங்களை அடிக்கவும் இந்த வட்டாரத்திலே ஒரு பயல் இருக்கானா? நீங்க ஏதுக்கு அப்பா சண்டைக்குப் போனீங்க?''

மரகதம் தந்தையின் அருகில் உட்கார்ந்து 'ஓ'வென்று கதறினாள்.

''அழாதே அம்மா! எழுந்திருச்சுக் கொஞ்சம் மோர்த் தண்ணி கொண்டு வா. பசி வேறு! காப்பித் தண்ணியாவது கடவைச்சளடுத்தா. அண்ணே! கொஞ்சம் தள்ளிக் குந்திக்க. காத்து வரட்டும்'' என்றான் ஒருவன்.

''ஆமாம், அண்ணே! எதிர்க் கட்சியிலே ஒரு சின்னப் பயல் என்ன மவுசா விளையாடினான் பார்த்தீங்களா! ரொம்பக் கெட்டிக்காரப்பயல். சினிமாப் படத்திலே வருகிறப்பலே இல்லே துள்ளித் துள்ளிக் குதிச்சான்'' என்றான் அவன்.

அவர்களில் கொஞ்சம் வயதில் சிறியவன் கூறினான்: ''ஆமாம். ஆமாம். தேவரு கூட அடிக்கடி சபாசு போட்டாரு. அவனுக்குக் குஷி வந்திடுச்சு. சண்டையாகவே தோணல்லே. நல்ல பந்தயக் காட்சிபோல் தமாஷா யிருந்திச்சு. ஆனால் கடைசி நேரத்திலேதான் தேவரு ஏமாந்து போயிட்டாரு.''

''எப்ப அண்ணே! ஆமாம். அந்தப்பயல் கம்புதான் என்ன அமைச்சல். தேவரு அந்தக் கையிலிருந்த கம்பைத் திரும்பிப் பார்த்தாரு. [பாருங்க. அந்த நொடியிலேதான் அந்தப் பயல் கம்பு வந்து தோளிலே விழுந்திடுச்சு. அதுகூடப் பிரமாதமில்லே தேவருக்கு. 'ஆ! மாணிக்கம்!' அப்படின்னாரு. குரல் சன்னமாகத்தான் என் காதிலே விழுந்திச்சு. நல்ல வேளையா நான் அவரு முகத்தைக் கவனிச்சுக்கிட்டிருந்தேன். உடனே தாவிப் பிடிச்சுக்கிட்டேன் பாருங்க!''

''ஆமாம்! அது யாரு மாணிக்கம்?''

''என்னமோ ஒண்ணும் புரியல்லே. இந்தச் சந்தடியிலே எல்லாப் பசங்களும் எடுத்தாங்க பாரு ஓட்டம், அதை நினைச்சால் இப்ப 'கிர்'ன்னு தலையைச் சுத்துது.''

இவர்கள் சம்பாஷணையை அரை மயக்கத்தில் கேட்டுக் கொண்டிருந்த மரகதத்தின் மனம் குழம்பிக் கிடந்தது. காப்பித் தண்ணீரை ஒரு வாய் குடித்து விட்டுக் கண்களை மூடி நாக்கைச் சப்புக் கொட்டினார் வீரப்பத் தேவர்.

வீரப்பத் தேவர் என்றால் வீரவநல்லூரில் அழுத பிள்ளையும் வாய் மூடும். முதல் மகா யுத்தத்தில் பட்டாளத்தில் சேர்ந்திருந்தார். அவர் வெளியில் கிளம்பினால், 'பட்டாளத்தார் வராரு' என்றுதான்

எல்லோரும் சொல்லுவார்கள். கற்றை மீசை, மேல் உதட்டை மறைத்திருக்கும். அதை அடிக்கடி முறுக்கி விட்டுக் கொண்டே இருக்கும் அவருடைய இடது கை.

யுத்தத்திலிருந்து திரும்பி வந்த அவர் தம் சொந்த நிலத்தை வளமாக்குவதுடன் உடலையும் பலப்படுத்திக் கொண்டார். அவருடைய பெயரைக் கேட்டவுடன் பல கலகங்கள் அடங்கிப் போயின. அவர் அடி எடுத்து வைத்தவுடன் தலைதெறிக்க ஓடி விடுவார்கள். நியாயமான கட்சிக்கே தேவர் உதவி செய்வார். வீரமும் பண்பும் உடைய தேவர் சிலம்பக் கம்பைக் கையில் எடுத்து நின்றால் ஊர் எல்லையிலுள்ள வீரபத்திரக் கடவுளை நினைப்பூட்டும் அவர் உருவம்.

ஒவ்வொரு வாலிபனும் திடசாலியாக இருக்க வேண்டும் என்பது அவர் விருப்பம். தம் வீட்டுக்குப் பின் பக்கத்தில் சிலம்பப் பயிற்சி அளித்து வந்தார். அவருடைய சிலம்பக்கூடத்தில் இளம் வாலிபர்கள் பலர் 'விர்விர்' என்று கம்புகளைச் சுழற்றிவந்தனர்.

சலாம் வரிசை முடிவதற்குள்ளே கையிலும் காலிலும் அடிபட்டு ஓடி விட்டனர் பலர். மாணிக்கம் ஒருவன்தான் சமாளித்துக் கொண்டு சிலம்பப் பயிற்சியை முழுதும் கற்றுக் கொள்வது என்ற ஆர்வத்துடன் துணிந்து நின்றவன். தேவரும் மகிழ்ச்சியுடன் மாணிக்கத்துக்கு நெளிவு சுளிவுகளைச் சொல்லிக் கொடுத்தார். கம்பு எடுக்கும் முறை, சுழற்றும் விசை எல்லாம் தம்மைப்போலவே இருப்பதைக் கண்டு தேவருக்கு உள்ளூற மகிழ்ச்சி. படார் படார் என்று தேவர் அடிக்கும் அடிகளையெல்லாம் அலட்சியமாகத் தேக்கி நிறுத்துவான் மாணிக்கம். சற்றுத் தொலைவிலிருந்து மாணிக்கத்தின் துணிவைக் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து நிற்பாள் மரகதம்.

**ம**ரகதம் தேவரின் அருமை மகள். மாணிக்கத்தின் சிலம்ப வித்தைக்குக் கொஞ்சமும் சளைக்காமல் கண் வீச்சினால் அவனைக் கட்டி இழுத்துக் கொண்டு விட்டாள். மாணிக்கமும் மரகதமும் வெள்ளி செவ்வாய்க் கிழமைகளில் சிலம்பக் கம்புக்குச் சாம்பிராணிப் புகை போடும் சாக்கில் தங்கள் அன்பையும் ஊதி எரிய விட்டார்கள். அவள் தணலைக் கீழே வைத்துவிட்டு நிமிர்வதற்குள் சாம்பிராணித் தூளைக் கொட்டி அவளைத் திணற அடிப்பான் மாணிக்கம்.

அன்று மாலை மரகதம் மாவு ஆட்டிக் கொண்டிருந்தாள். ஒருக்களித்த கதவைத் திறந்து கொண்டே "ஐயா!" என்றான் மாணிக்கம். மாணிக்கத்தின் குரலைக் கேட்டுச் சிரித்தபடி "ஐயா இல்லே. அம்மாதான் இருக்கு" என்றாள்.

"அப்போ பழம் நழுவிப் பாலிலே விழுந்திடுச்சு" என்று உள்ளே வந்தான்மாணிக்கம்.

"அட! எங்கே கிளம்பிட்டீங்க? திருவிழாவுக்கா? நானும் வரட்டுமா?"

"அதுக்குள்ளாறே அவசரப்படறயே! இப்படியா மருமவன் திருவிழாவுக்கு உன்னை அழைச்சுக்கிட்டுப் போவான்? அதுக்கு வேறே சோடனையில்லே!"

"நான் சொல்லட்டுமா? காதிலே கடுக்கன், மயில்கண் வேட்டி, சரிகை அங்கவஸ்திரம், சில்க் சட்டை......"

"ஆமாம் ஆமாம்! பட்டுச்சேலை, சோளி ரவிக்கை, காதிலே தொங்கட்டான், தலையிலே மருக்கொழுந்து...மேலே பேசிக்கிட்டே போனால் நேரமாகிவிடும். கையைக் கழுவிக்கிட்டு வா. ஒரு சேதி சொல்கிறேன்."

அவனுடைய அவசரத்தை அறிந்து கொண்டு மரகதம் கையைக் கழுவிவிட்டு வேகமாக வந்தாள்.

"ஐயா, யுத்தத்துக்குக் கிளம்பிட்டாரு. ராசா யுத்தத்துக்குக் கிளம்பினால் மகாராணி கத்தியை எடுத்துக் கையிலே கொடுத்து, 'வெற்றியோடு திரும்பி வாங்க!' என்று சொல்லி விடை கொடுத்து அனுப்புவா. அது மாதிரி இப்ப நான் ராசா. நீ என்ன செய்யணும் தெரியுமா! சிலம்பக் கம்பை எடுத்துக் கொண்டு வந்து சிரிச்சுக்கிட்டுக் கொடுத்து, என்னைப் போயிட்டு வாங்க'ன்னு சொல்லணும்."

"என்னது யுத்தமா? எங்கே நடக்குது! எந்த ஊரிலே? நீங்களும் பட்டாளத்திலே சேர்ந்துட்டீங்களா! அட கடவுளே!"

மரகதம் பிரமித்துப்போய் நின்றாள். அவள் கண்கள் கலங்கின.

"அட பாவமே. தேவரு மவள் இவ்வளவு கோழையாகவா இருப்பா. பட்டாளத்திலே சேர்ந்து விடல்லே. பயந்து நடுங்காதே. சும்மா தமாசா சிலம்பம் கற்றப்போறேன். நாளைக்கு ஒரு இடத்திலே பந்தயம். உங்க அப்பாரு சிலம்பக் கம்பைக் கேட்டு வாங்கிப் போகணு மென்று வந்தேன். அவுங்களை நேரிடையாக எப்படிக் கேட்கிறது என்று யோசிச்சுக் கிட்டே வந்தேன். நல்லவேளையாகப் போச்சு. நீ மட்டும் இருக்கே. என்ன நீ யோசிக்கறே?"

"இல்லே. அப்பா. யாருக்கிட்டேயும் அவுங்க கம்பைக் கொடுக்க மாட்டாங்களே."

"நிசந்தான். ஒரு நாளைக்கு அந்தக் கம்பை எடுத்துச் சுத்திப் பார்க்கணுமின்னு ரொம்ப நாளா ஆசை. அப்பாதான் அதை எங்கேயும் எடுத்துப் போறதில்லையே."

"ஆமாம். உங்ககிட்டே அதைக் கொடுக்கறதிலே என்ன தப்பு? அப்பாருக்கு அந்தக் கம்புமேலே உசிருதான். ஆனால் நீங்க வந்த பிறகு உங்க மேலேதான் இப்ப அவரு உசிரு திரும்பியிருக்கு."

"அப்படியா? சந்தோஷம். நீ இப்போ அதை எடுத்துக்கொடு. அவருகிட்டே சொல்லி மன்னிப்பு வாங்கிக்கிடறேன்."

"இந்தாங்க. ஜாக்கிரதை! அவுங்க இதை ஏன் தேடப்போறாங்க. கேட்டால் பார்த்துப் போம்.........நீங்க போயிட்டு வெற்றியோடு திரும்பி வாங்க. என்னங்க அப்படிப் பார்க்கறீங்க?" என்றாள்.

"இப்ப ராணியைக் கண்டு ராசாவே வெட்கப்பட வேண்டியதாகப் போயிடுத்து. சண்டைக்குப் போகாதீங்கன்னு சொல்லுவாளாக்கும் என்று நான் நினைச்சேன். உன்னை விட்டு விட்டு நான் எப்படிப் போறது?"

"நல்ல ராசபார்ட் போங்க. இந்த வீராதி வீரனுக்குத்தான் என்னைக் கட்டிக் கொடுக்கணும்னு அப்பா நினைச்சிருக்காரு. உங்களைப்

பிடிச்சு அவுங்க வித்தையைக் கத்துக் கொடுத்தாங்களே! நல்ல ஆம்பிள்ளை, முதல் முதல் பந்தயத்துக்குக் கிளம்பியிருக்கீங்க; முன்னே வைச்ச காலைப் பின்னே இழுக்காதீங்க. அப்பாவை நினைச்சுக் கும்பிட்டுக்கிட்டுப் போய் வெற்றியோடு வாங்க.''

* * *

''அம்மா மரகதம்!'' என்று கூப்பிட்டபடியே தேவர் உள்ளே நுழைந்ததும்தான் மரகதம் மாணிக்கத்தைப் பற்றிய நினைவிலிருந்து விழித்துக் கொண்டாள்.

''கருக்கல்லே வெந்நீர்த் தண்ணி போட்டு வை. இவ்வளவு நாளைக்குப் பிறகு நாளைக் காலை ஒரு படைக்குப் போறேன். அதான் அத்திபூர் பிள்ளை இருக்காரு இல்லே. அவருக்கும் நம்ம முதலியாருக்கும் ஒரு தென்னந்தோப்புத் தகராறு. அவரைப் பார்த்துவிட்டுத்தான் வரேன். நம்ம சிலம்பக் கம்பை எடுத்துச் சுத்தமாகத் துடைச்சு வை. நம்ப மாணிக்கத்தையும் அங்கே அழைத்துப் போகலாம்னு நினைக்கிறேன்.''

மரகதத்துக்குக் கம்பு என்றதும் அடி வயிற்றில் கரீர் என்றது.

''ஆமாம்! மாணிக்கம் வந்தானா?''

''வந்தாரு. ஆனா அவுங்க...''

''சும்மா சொல்லு. என்ன சொன்னான்?''

''எங்கேயோ வெளியூருக்குப் போகிறதாக......'' என்று இழுத்தாள் மரகதம்.

''என்னிடம் சொல்லி விட்டுப் போகலாம்னு வந்திருப்பான். சரி, அப்ப நாளைக்கு அவன் என்னோடு வரமுடியாது. அவன் வந்துதான் என்ன செய்து விடப் போகிறான்? சின்னப்பயல். ஆனால் மரகதம், கூட்டத்திலே கம்பு சுத்தி மாணிக்கத்துக்குக் காட்டலாம்னு நினைச்சேன். சரி, எல்லாம் நல்லத்துக்குத்தான். அவன் இருந்திருந்தால், நீங்க எதுக்கிங்க வயசு காலத்திலே புறப்படுகிறீங்க? உங்களுக்குப் பதிலாக நானே போயிட்டு வாரேன்னு கிளம்பியிருப்பான். என்ன மரகதம், பதிலே பேசவில்லை. தம்பி மாணிக்கம் தங்கக் கம்பியில்லையா?''

மரகதம் முகமாறுதலை மறைக்கத் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். அவள் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது. இப்பொழுது அவளுக்கு எல்லாம் விளங்கிவிட்டது. முதலியாருக்காக, தேவர் கிளம்பியிருக்கிறார். அவருக்கு எதிர்ப்படைக்கு மாணிக்கம் போயிருக்கிறான். தேவரின் சிலம்பக் கம்பைப் பற்றிய கவலை அவளை அரிக்கத் தொடங்கியது.

தேவர் இருட்டோடு கிளம்பி விட்டார்.

தேவர் குதிபோட்டுக் கொண்டு சென்றார். மரகதம் கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்து விசித்து விசித்து அழுதாள். மாலையில் மாணிக்கம் வந்து அவள் மனத்தைக் கிறுகிறுக்கச் செய்தது. சிலம்பக் கம்பை வாங்கிச் சென்றது எல்லாம் நினைவுக்கு வந்தன. மாணிக்கம் சிலம்பம் விளையாடுவதை எண்ணிப் பார்த்து மகிழும் நேரத்தில் தேவரின் எதிர்ப்படையான படையெழுச்சி அவளைத் திணற அடித்தது. களத்திலே மாணிக்கமும் அப்பாவும் நேருக்கு நேர் சந்தித்தார்களானால் என்ன ஆகும்?

அதை எண்ணும் போதே அவள் உடல் நடுங்கியது. 'மாரியாத்தா! இன்றையப் பொழுது நல்லதாகப் போகணுமே' என்று வேண்டிக் கொண்டாள். அன்று முழுவதும் வாசலுக்கும் உள்ளுக்கும் நடந்து நடந்து அலுத்துப் போனாள்.

* * *

வீரப்பதேவர் புரண்டு படுத்தார்.

''அப்பா! இந்தாங்க கஞ்சி. வாயைத் திறங்க. எதுக்கப்பா கண்ணுலே இப்படித் தண்ணீர் விடறீங்க?''

''மரகதம்! என்னுடைய மனக் கோட்டை இடிஞ்சு போயிடுத்து. அந்தப் பயல் என்னை ஏமாற்றி விட்டான். எவ்வளவு நாட்களாகக் கருவிக்கிட்டிருந்தானோ தெரியவில்லை. தோள் பட்டையிலே சரியான அடி. அசைக்க முடியவில்லை. ஆ! என்னமோ ஒட்டிக்குதே!''

''ஒன்னுமில்லே. புற்று மண்ணும் சாம்பிராணியும் அரைச்சுப் பத்துப் போட்டிருக்கிறேன். அசையாமல் படுத்துக்குங்க.''

''பாரு தங்கச்சி! என் சிலம்பக் கம்பே என்னைப் பதம் பார்த்திடுச்சு. அதைக் கொஞ்ச நாளாகக் கவனிக்கல்லே. அதுக்கும் என் மேலே கோபம் வந்திடுச்சு. மரகதம், நான் தோற்றுப் போனேன். இந்த அவமானம் என்னால் தாங்க முடியாதம்மா!''

''அப்பா! அழாதீங்க. என்னால்தான் உங்களுக்கு......''

அதற்குள் தேவர் மயக்கமடைந்து விட்டார். மரகதம் கண்ணீர் விட்டபடி விசிறிக் கொண்டிருந்தாள்.

''மரகதம்!''

வாசலிலிருந்து மெல்லிய குரல் கேட்டது. மரகதம் எழுந்து சென்றாள். மாணிக்கமா அது? பரிதாபகரமாய்க் குழைந்து குனிந்து நின்றுகொண்டிருந்தான். மரகதத்துக்கு அழுகையும் ஆத்திரமும் பீறிட்டுக் கொண்டு வந்தன. ''அத்தான்! உங்களுக்கு சந்தோஷமாகப்போயிடுச்சில்லே?'' என்றாள்



## காரணம்!

ரயில் கார்டு:-வண்டி இந்த இடத்தில் நிற்காது. நீங்கள் ஏறக்கூடாது, ஸார்!



ஏறினவர்:-நிற்காம போயிருந்தா நான் ஏறியிருக்கமாட்டேனே, ஸார்!

"மரகதம், நீயா பேசறே! நிசமா அப்பா அங்கே வருவார்னு நினைக்கவே இல்லே. நீ ஒரு வார்த்தைசொல்லியிருந்தா."

"எனக்கும் தெரியாதே, அத்தான்! நீங்க அப்பாவைக் கண்டதும் திருப்பி வந்து விடலாமில்லே."

"நானும் அப்படித்தான் நினைச்சுக் கிளம்பி விட்டேன். 'எலே! எங்கே ஓடி ஒளியறே! கம்மா ஒரு சுத்து சுத்து. சப்பு பிடிச்சக் கத்தத் தெரியுதான்னு பார்க்கறேன்!' என்றார். வளர்த்த கடா மார்பிலே பாய்ந்த மாதிரி என் கையினுலே அவுங்களைப் பதம் பார்த்துப் பிட்டேனே!"

மாணிக்கம் கண்ணீர் விட்டுக் கதறினன்.

"மரகதம்! மாணிக்கம் வந்தானு?"

மரகதம் வாய் திறக்கவில்லே.

"எப்படி வருவான்? என் உயிருக்குத்தான் உலே வைச்சுட்டானே! திருட்டுப் பயல். போகும்போது ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போனுனு? அத்தியூர் பக்கம் போறேன்னு சொன்னுல் நான் அந்த எல்லேயை மிதிச்சிருப் பேனு? மரகதம்! நான் எவ்வளவோ நினைச்சிருந்தேன். அந்தப் பயலுக்கு எல்லாத்தையும் கற்றுக் கொடுத்தாச்சு. எதற்குத் தெரியுமா? என் அருமை மகளைக் கட்டிக்கப்போகிறவன் ஏப்பை சாப்பையா யிருக்கக் கூடாது; என் பெயரை விளங்க வைச்சு ஊரிலே கியா தியா விளங்கணுமின்னு கனவு கண்டேன். அவன் என்னடான்னு நல்ல கைம்மாறு செய்து விட்டான். சரியான குருதட்சிணை கொடுத்திட்டான். அவன் அதோட விட வில்லே. என் உயிருக்கு உயிரான சிலம்பக் கம்பை என்னேக் கேட்காமல் திருடிக்கிட்டு வேறு ஓடிப் போயிட்டான்."

"அப்பா! அவரு எங்கேயும் ஓடல்லே!"

"முழுக்கக்கேட்டுக்கம்மா. ஓடாட்டி என்ன வந்தது? இனி இந்த ஜன்மத்திலே அவன் முகத்திலே விழிக்கப் போறேனு? இதைக் கேளு. நான் முதலிலே அந்தக் கட்டிப் பயல் யாராயிருக்குமின்னு பிரமிச்சுப் போயிட்டேன். வாலிப்பான உடல். மாணிக்கத்தைப்போலத் தோணிச்சு. ஆனுல் அந்த நேரத்திலே அவனே நான் அங்கே எதிர் பார்க்கல்லே. அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி பெரிய முண்டாசு, கலர்வரி போட்ட பனியன். நான் அசந்தே போயிட்டேன். என்னே மறந்து சபாஷ் போட்டேன். எனக்கே சந்தோஷம் பிடிபடல்லே. இன்னொரு மாணிக்கப் பயல் கிளம்பியிருக்கான்னு தோணித்து. மரகதம், நிசமா சொல்லறேன். என் மனசிலே கூடச் சபலம் தட்டித்து. இந்தப் பயலுக்குத்தான் நிச்சயமா மரகதத்தைக் கட்டிக் கொடுத்திடணுமின்னு......."

"அப்பா, அத்தான் மேலே தப்பு இல்லே."

"நீ அப்படி நினைக்காதே மரகதம். அந்தப் பயல் கிராதகன். கடைசியிலே பார்த்துக்க. முண்டாசு அவிந்துபோச்சு. கையைத் தூக்கிச் சுத்திக்கப்போறுன். கீழே நழுவின கம்பைக் கவனிச்சுட்டேன். அதிலே பதிச்சிருந்த நீலக் கல் என் கண்ணேப் பறிச்சுது. நான் நிமிர்ந்து அந்தப் பயலேப் பார்த்தேன். என் கையி லிருந்த கம்பு என் கம்பு இல்லே. சித்த நேரத்திலே மனசு கலங்கிப் போச்சு. என்னேச் சமாளிச்சுக்கறத்துக்குள்ளே எக்கச்சக்கமா அடி தோளிலே விழுந்திடுச்சு."

"ஐயா! என்னே மன்னிக்கமாட்டீங்களா?" என்று கதறியபடி தேவரின் கால்களில் வந்து விழுந்தான் மாணிக்கம்.

"மன்னிப்பா? உனக்கா?"

"இந்தாங்க உங்க சிலம்பக்கம்பு. தெரியாத்தனமாக உங்களேக் கேட்காமல் உங்க கம்பை எடுத்துப் போயிட்டேன். நான் இனிமேல் சிலம்பத்தையும் மறந்து விடறேன். மரகதத்தையும் மறந்து விடறேன். என்னே மன்னித்தேன்னு ஒரு வார்த்தை சொல்லிப்பிடுங்க, போதும்." விழுந்தவன் எழாமல் கதறினன்.

"அப்பா, பிசகு அவருமேலே இல்லே. நான் தான் உங்க கம்பை அவருக்கு........"

தேவரின் இதழ்க் கடையில் புன்னகை தெளிந்து மறைந்தது. எழுந்து உட்கார்ந்தார். அவர் உடலில் புது இரத்தம் பாய்ந்தது போல் கம்பீரமாகக் காணப்பட்டார்.

"மாணிக்கம்! இந்தா, பிடி என் சிலம்பக் கம்பை" என்று அவன் கையில் கொடுத்தார். மாணிக்கத்தின் கைகள் நடுங்கின. "நான் பட்ட பாட்டுக்கு எனக்குப் பலன் கிடைத்து விட்டது. உன் சிலம்பப் பயிற்சிக்கு நேற்றுப் பரீட்சையில் உனக்குத்தான் வெற்றி. இனி இந்தச் சிலம்பக் கம்பு உன்னுடையதுதான்!"

மாணிக்கம் தயங்கியபடி நகர்ந்தான்.

"அப்பா! என்னே மன்னிக்க மாட்டீங்களா? அத்தான், நீங்க அப்பாகிட்டே சொல்லுங்களேன்."

"முடியாது அம்மா, என்னுல் முடியாது."

"ஏன் முடியாது?" மரகதம் விசித்தாள்.

"எனக்கு நேர்ந்த அவமானம் தீரவேண்டாமா?" இடி இடி என்று சிரித்தார் தேவர். அவருடைய சிரிப்பின் பயங்கரத்தைக் கண்டு மாணிக்கமும் மரகதமும் நடுங்கினர்.

"ஐயா! எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் உங்களுக்கு இழைத்த அநீதிக்குக் கண்காணுத இடத்தில் சென்று கண்ணீர் விட்டுக் கதறி உயிரை விட்டு விடுகிறேன்."

"மாணிக்கம்! நில். உன்னேயும் விடப் போவதில்லே. மரகதத்தை உன் கழுத்தில் கட்டிப்போட்டு என் அருமை மகள் வயிற்றில் பிறக்கும் சிங்கக்குட்டியின் பிஞ்சு விரல் களினுல் என் காயத்தைத் தடவும்போது தான் என்னுல் உங்களே மன்னிக்க முடியும். அதுவரை நான் காத்திருப்பேன்" என்று கூறி மாணிக்கத்தின் கையையும் மரகதத்தின் கையையும் சேர்த்து இணைத்தார். அவர் கரங்கள் ஆனந்தக் கண்ணீரால் நனைந்தன.



# உயர்தரத்திற்கும் சிறப்பான த்வனிக்கும்

இணையற்ற இரு

## அற்புதமான நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல்கள்!



இதோ செவிக்கினிய விருந்தளிக்கும் இருநேர்த்தியான நேஷனல்-எக்கோ ரேடியோ மாடல்கள். உயர்தரம் வாய்ந்த இந்த ரேடியோக்களில் ஒலிபரப்புகளை அற்புதமாகக் கேட்கலாம்! இவைகள் 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டவை. மற்றும் ஒரு வருஷத்திற்கு உத்திரவாதம் கொண்டவை. உங்களுக்கு அருகாமையிலுள்ள நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடம் இவைகளை இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!



மாடல் 717: தங்கவர்ண வேலைப்பாட்டுடன்கூடிய, மருன் நிற பிளாஸ்டிக் காபினெட். மாடல் U-717: 5 வால்வுகள்; 3 பாண்டுகள்; 230 வோல்ட் ஏஸி/டிஸி ஸெட். மாடல் B-717: 4 வால்வுகள்; 3 பாண்டுகள்; டிரை பாட்டரிஸெட். ரூ. 250/-

விலைகள் நெட்.
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 187: 6 வால்வுகள், 5 பாண்டுகள். அழகிய மர காபினெட். மாடல் A-187 ஏஸி ஸெட்: மாடல் U-187 ஏஸி/டிஸி ஸெட். ரூ. 475/-

நேஷனல்-எக்கோ
ரேடியோக்கள் சிறந்தவை —
அவைகள்




செய்யப்பட்டவை



**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிமிடெட்**

ஆபெரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13 • 1/18 மௌண்ட் ரோடு, மதராஸ் • 30/79 ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் • ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 51. முக மினுக்கு!

அனுசூயா தேவி, சீதாதேவிக்கு ஒரு 'ஸ்நோ' தந்து உதவியதாகவும், அந்த முகப்பூச்சை உபயோகித்த சீதாதேவி நிரந்தரமான முகப் பொலிவுற்று விளங்கியதாகவும் ராமாயணம்.

ரகுவம்ச மகா காவியத்தில் காளிதாஸன் இவ்விஷயத்தை ரொம்பப் பிரமாதமாக, ஆனால் வெகு சுருக்கமாக, 'அனுசூயாதேவி தந்த முகப்பூச்சை உபயோகித்ததால் நீங்காத-நிரந்தரமான ஒளிக்கற்றை, அள்ளி அள்ளி வீசும் ஒரு ஒளி மண்டலமாக சீதாதேவியின் முகம் பொலிவுற்று விளங்கியது' என்னும் கருத்துப்படக் கூறுகிறார்:

**"ஸா பிப்ரதீ சாச்வதம் அங்க ராகம் ஸ்புரத் பிரபா மண்டலம் ஆனுஸூயம்."**

இப்படியாகத்தானே சரித்திர காலந்தொட்டு நிகழ்ந்து வருகிறது. சமீபத்தில் நம்மிடையே வாழ்ந்த பட்டினத்தடிகளும் என்ன சொல்கிறார், பாருங்கள்:

**"முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டு, பொட்டிட்டு, பித்தளையோலை விளக்கியிட்டு..."**

வாழையடி வாழையாக வந்த திருக்கூட்டம் போல் விளங்கி வரும் இந்த முக மினுக்கல் கலை இன்று நமது சகோதரிகளின் தினசரித் திட்டத்தில் ஒரு முதன்மையான இடத்தைப் பற்றிக் கொண்டு விட்டது.

"முகத்தில் அடிக்கடி வரும் பருக்கள், வந்த பருக்கள், ஆறும் முன்பே புதியதாக ஏற்பட்டு விடும் பருக்கள்-இப்படியாக முகத்தைக் கழுவவும், துடைக்கவும் சாத்தியப்படுவதே இல்லை. ஆறினை ஒருசில பருக்களோ கருமையான நிரந்தரமான வடுக்களை ஸ்தாபிக்கின்றன. முகம் பார்க்கவேவிளங்குவதில்லை. இந்த லட்சணத்தில் எனக்கு இன்னும்......"

சகோதரிகள்தான் இப்படிக் கடிதம் எழுதுகிறார்கள் என்றால், சில பிள்ளை குட்டிகளைப் பெற்ற தாய்மார்கள், "எனக்குச் சொல்லவே வெட்கமாயிருக்கிறது. இந்த வயதிலே போய் இந்த முகப் பரு இப்படிப் படுத்துமோ? கேட்கிறவர்களுக்குப் பதில் சொல்ல முடியவில்லை......" என்று எழுதுகிறார்கள்.

'அட! நீர் ஒரு கர்நாடகம் ஐயா! பெண்பிள்ளைகளுக்கு அப்படித்தான் இருக்கும்' என்கிறீர்களா? ஆண் பிள்ளைகளும் இதே பல்லவியைப் பாடுகிறார்களே! அதற்கு என்ன செய்வது?

"ஏன்? ஆண் பிள்ளைக்கு அழகு வேண்டாமோ? ஆண் மயிலைப் பாருங்கள்...... சேவல் கோழியைப் பாருங்கள்!" என்று கூக்குரலிட்டு, 'ஆணழகைப் பேணிடுக' என்ற லட்சியத்துக்காக ஒரு இயக்கத்தையே தொடங்கச் சித்தமாயுள்ளவர்களும் இருக்கிறார்கள்.

"சகோதரிகளுக்காவது இந்தப் பருக்களைப் போக்க, பருக்கள் விட்டுச் சென்ற தழும்புகளை மறைக்க ஏதாவது உபாயமிருந்தால் எழுதுங்களேன்!" என்று உருக்கமாகக் கேட்கும் சாமர்த்தியசாலிச் சகோதரர்கள் எத்தனை பேர்கள்! எனவேதான் இது விஷயமாக இனியும் தாமதியாமல் எழுதித்தானாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

முகாலேபம்—முகமினுக்கு என்னும் கலையைப் பிரதான விஷயமாக்கி நமது வைத்திய சாஸ்திரங்களில் ஒரு கணிசமான பாகத்தை இதற்காகவே ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். முகாலேபம் என்னும் வடமொழிச் சொல்லுக்கு முகப் பூச்சு என்று பொருள். இது பொதுவாக மூன்று வகைப்படுமென்று சாஸ்திரம் கூறுகிறது.

வாத கப தோஷங்களின் விபவத்தால் ஏற்படும் முக விகாரங்களைப் போக்குவதற்கென்று உபயோகிக்கும் பூச்சுக்கள் ஒரு வகை.

விஷத்தினாலும் பித்தத்தினாலும் உண்டாகும் முக விகாரங்களைப் போக்குவதற்கென்று உபயோகிக்கும் பூச்சுக்கள் இன்னொரு வகை.

"வர்ண கிருத்" என்பது மூன்றாவது வகை. இதை உபயோகிப்பதால் முகத்தின் பொலிவு அதிகரிக்கும்; முகத்தின் ஒளியும் காந்தியும் அதிகரிக்கும். அதிகரித்த காந்தி நிலைத்தும் நிற்கும். இது எல்லோரும் எல்லா வயதிலும் உபயோகிக்கத் தக்கது.

வாத கபத்தினால் உண்டாகும் முக விகாரங்களில் பூச்சு மருந்தை இளஞ்சூடாக உள்ளபோது உபயோகிக்க வேண்டும். இவ்விதம் நேரிடுவது மிகவும் துர்லபம்.

பித்தத்தினாலோ விஷத்தினாலோ ஏற்படும் விகாரங்களில் இப் பூச்சுக்களை மிகவும் தண்மையுள்ளதாக உபயோகிக்க வேண்டும். பெரும்பாலோருக்கு இவ்விதம் தான் உபயோகிக்க நேரிடும்.

அளவு: அவரவர் கண்டுவிரலின் கனத்தில் நான்கில் ஒரு பாகம் அல்லது கண்டு விரல் கனத்தில் பாதியளவு கனமுள்ளதாக இப் பூச்சு மருந்துகளைப் பூச வேண்டும்.

ஒரே தரமாக மருந்தை எடுத்து, வேண்டிய அளவு கனமிருக்குமாறு முகத்தின் மேல் அப்பி விடக்கூடாது. முதலில் சாதாரணமாக நாம் பூசிக் கொள்ளச் சந்தனத்தைக் குழம்பாக்குகிறோமே, அவ்விதம் பூச்சு மருந்துகளைத் தண்ணீரில் குழைத்துக் குழம்பாக்கிக் கொள்ள வேண்டும். பிறகு முகம் முழுவதும் ஒரு சீரான கனத்தில் பூச வேண்டும். பிறகு இது சிறிது உலர உலர மேன்மேலும் பூசிக் கொண்டே வந்து குறிப்பிட்ட அளவு கனமானதும் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

முகத்தில் பூசிய பூச்சு ஈரமாகவுள்ள வரையில் தான் முகத்தில் இருக்கலாம். பூரணமாகஉலர்ந்துபோகவிடக்கூடாது. அப்படி உலர்ந்து போக விட்டால் அது முகத்தின் சருமத்தின் நன்நிலையைக் கெடுத்து விடும்.

அவ்விதமே, பூசிய பூச்சு ஓரளவு உலர்ந்ததும்-ஆனால் முழுவதும் உலர்ந்து விடாத நிலையில் உள்ளபோது, அப் பூச்சின் மேல் சிறிது ஜலங்கொண்டு நன்ருக ஈரமாக்கிப் பிறகு அதை எடுத்துக் களைய வேண்டும்.

ஆகவே ஈரமற்றதும் வறட்சி மிக்கதுமான பொடிகளை—பிற நாட்டாரின் வழக்கத்தை யொட்டி—நம் நாட்டினர் பூசிக் கொள்வதோ அல்லது பூசிக் கொள்ளும்போது நெய்மையோ — ஈரமோ உள்ளதா யிருப்பினும், பிறகு அதை அவ்விதமே காய்ந்து போகும் வரையில் விட்டு விடுவதோ நம் நாட்டுச் சீதோஷ்ண நிலைக்குப் பொருந்தாது. இதனால் தீமைதான் விளையும்.

இவ்வாறு பூச்சு மருந்தைக் களைந்த பிறகு, முகத்தைத் தண்ணீரினால் கழுவிச் சுத்தமாக்கி, மிருதுவான சுத்தமான துணியினால் ஒத்தி ஒத்தி ஈரத்தைப் போக்க வேண்டும். பிறகு முகத்தின் மேல் தைலங்களைத் தடவி அல்லது உடம்பு முழுவதுக்குமே தைலங்களைத் தடவி, சற்று நேரம் ஊறின பிறகு எண்ணெய்க் குளி போல் செய்யவும்.

முக மினுக்கிப் பூச்சுக்களை உபயோகிக்கும் காலத்தில் பகல் உறக்கம், பிரசங்கங்கள் செய்தல், நெருப்பின் அருகிலோ-வெய்யிலிலோ போதல், கண்ணீர் வரும்படி அழுதல், கோபமுறுதல், இரவில் கண் விழித்தல், லாகிரி வஸ்துக்களை உபயோகித்தல் ஆகியவற்றை அறவே தவிர்க்க வேண்டும்.

**முகமினுக்கிகளை உபயோகிக்கத் தகாதவர்:** பீனஸரோகம் உள்ளவர், அஜீர்ணமுற்றவர், நஸ்ய சிகிச்சையைப் பெறுபவர், ஹனுஸ்தம்பம் என்னும் ரோகம் [இதில் வாயைத் திறக்க முடியாமல் தாள் கட்டி விடும்] உள்ளவர், அரோசகம் அன்னத்துவேஷம் முதலியவை உள்ளவர், இரவு கண் விழித்தவர் ஆகியோர் இந்த முகமினுக்கிப் பூச்சுக்களை உபயோகிக்கக் கூடாது.

**முகமினுக்கிப் பூச்சுக்களின் குணம்:** நியமப்படி இம் முகாலேபங்களை உபயோகிப்பதால், அகாலத்தில் ஏற்படும் மூப்பின் சின்னங்கள், வ்யங்கம் [முகத்தில் மட்டும் ஏற்படும் ஒருவகை கருமை நிறம். இதை 'வங்கு' என்றும் சொல்வர்] திமிரம் என்னும் கணரோகம், வ்யங்கத்தைப் போல் சரீரத்தின் மற்றப் பாகங்களில் ஏற்படும் நீலிகா என்னும் நிற பேதம் ஆகியவை குணமாகும்.

முகாலேபனம் என்னும் இச் சிகிச்சையை மேற்கொள்பவர்கள் அந்தந்தப் பருவத்துக்கும் ஏற்றதெனத் தெரிவித்த மருந்துகளைப் பூச்சுக்களாகத் தினந்தோறும் உபயோகிப்பார்களேயானால் கண் பார்வை தரம் குறையாமல் நிலைத்திருக்கும். முகம் மலர்ந்த தாமரைப் பூவைப் போல் வசீகரமாயிருக்கும்.

பருவகாலத்தின் காரணமாக உலகத்தின் சீதோஷ்ண ஸ்திதியும் நிலம், நீர், காற்று ஆகியவற்றின் இயல்பும் மாறிக் கொண்டிருக்கும்.

இவ்வாறு காலத்தின் மாறுபாட்டுக்கு ஏற்றபடி முகப் பூச்சுக்களில் சேரும் மருந்துகளையும் மாற்றிக் கொள்ளுதல் அவசியமென்று சாஸ்திரம் சொல்கிறது.

வேனிற்காலத்தில் வேர்க்குருக்களும் கோடைக் கொப்புளங்களும் முகத்தில் வெடிக்கும். பனி காலத்தில் முகமும்—ஏன்? உடல் முழுதுமே வறட்சியால் 'சோறுபூத்து' உதடுகள் வெடித்துப் பல வித உபத்திரவங்கள் ஏற்படும். ஆகவே அந்தந்தப் பருவத்துக்குத் தேவையான படி பூச்சு மருந்துகளை நிச்சயிப்பது தான் நல்லது.

**வஸந்த ருதுவில்:** தர்ப்பத்தின்வேர், சந்தனம், விலாமிச்சன் வேர், வாகைப்பூ, சதகுப்பை, செந்நெல்லின் அரிசிமாவு ஆகியவற்றைப் பொடி செய்து நுண் பொடியாகச் சீலையில் சலித்ததைத் தண்ணீரில் குழைத்துக் குழம்பாக்கி, முகாலேபத்துக்கு உபயோகிக்கவும்.

**க்ரீஷ்ம ருதுவில்:** குமுதம், உத்பலம், [ஆம்பல் கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, தாமரைக் கிழங்கு, அல்லிக் கிழங்கு ஆகியவற்றுள் கிடைத்தவைகளையும்] அருகம்புல், அதிமதுரம், சந்தனம் ஆகியவற்றையும்,

**வர்ஷ ருதுவில்:** அகில்கட்டை, எள், விளாமிச்சன் வேர், ஜடாமாஞ்சில், கிரந்திகரத்தின் வேர், செம்மரம் ஆகியவற்றையும்,

**சரத் ருதுவில்:** தாளிச்சபத்ரி, கோரைப் புல்லின் வேர், கரும்பின் வேர், அதிமதுரம், நாணல்புல், தகரைவேர், அகில் கட்டை ஆகியவற்றையும்,

**ஹேமந்த ருதுவில்:** இலந்தங்கொட்டையின் உட்பருப்பு, ஆடாதோடையின் வேர், வெள்ளிலோத்திய பட்டை, வெண்கடுகு ஆகியவற்றையும்,

**சிசிர ருதுவில்:** கண்டங்கத்திரியின்வேர், எள், வெள்ளை மிளகு, மரமஞ்சளின் தோல், உமிநீக்கிய பார்லி அரிசி ஆகியவற்றையும் முன் சொன்ன விதம் உபயோகிக்கலாம் என்பது சாஸ்திரம்.

இவற்றில் யாவற்றையும் ஒன்றாய்க் கூட்டி ஒவ்வொரு கூட்டிலும் கிடைத்தவைகளை எல்லாம் சமன் எடையில் எடுத்துப் பொடித்துக் கொண்டு, மொத்தப் பொடிக்குச் சமன் எடையில் பார்லியின் மாவும் அரிசியின் மாவுமாக ஒன்றாகக் கூட்டி எல்லாப் பருவத்திலும் உபயோகிக்கலாம்.

இரவில் படுக்கும் முன்பு இப்பூச்சை உபயோகித்துக் களைந்து முகத்தைக் கழுவிய பிறகு இலேசாக எண்ணெய் பூசிப் படுத்து உறங்குவது நல்லது.

# “உங்கள் பற்களை பாதுகாருங்கள்!”

**விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்**



மிகச் சீரான பற்களும் சில சமயங்களில் ஈறுகளில் தொத்து வியாதி காரணமாக பாழாகியிருக்கின்றன. இரவிலும் காலையிலும் 'விஸ்டம்' டூத் ப்ரஷால் பற்களை நன்றாகத் துலக்கி பாதுகாருங்கள்...

முகவாய் எலும்பைச் சுற்றியுள்ள ஆயிரக்கணக்கான நுண்ணிய நார்களால் பற்கள் உறுதியாய் நிற்கின்றன. ஒழிந்த ஈறுகளுக்குள் கிருமிகள் புகுந்து இந்த நார்களைத் தாக்கி அழித்து விடுகின்றன.



இந்த நிலைமை (பயோரியா) உடனே தடுக்கவேண்டும். இல்லையேல் பற்கள் தளர்ந்து கொட்டிவிடும். ஈறுகளில் இரத்தம், மற்றும் வீக்கம் சுருங்கல் ஆகியவை ஆரம்ப அறிகுறிகள்.



இந்த அறிகுறிகளைக் கண்டதும் உடனே பல் வைத்தியரிடம் சென்று வைத்தியம் செய்துக் கொண்டு பற்களை பாதுகாருங்கள். உங்கள் ஈறுகள் சுகமாக ஆரோக்கியமாயிருந்தாலும் தினமும் டூத் ப்ரஷால் தேய்த்தால் ஈறுகள் கெடாமல் இருக்கும்.



உங்கள் பற்களை ஆரோக்கியமாய் வையுங்கள். இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள்! துலக்க சுலபமாயிருக்க அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப் பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறுப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் டூத் ப்ரஷை உபயோகியுங்கள்!

**காலகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்**



# *Wisdom*

**நீடித்து உழைக்கும் டூத் ப்ரஷ்**

794




**வ**ண்ண வண்ணப் பாவாடைகளும், சிற்றுடைகளும் உடுத்திக் கொண்டு இளம் முகங்களில் மகிழ்ச்சி பொங்க, புள்ளி மான்களைப் போல் துள்ளிக் குதித்துக் கொண்டு பாடசாலையிலிருந்து, புத்தகப் பைகளுடன் மாணவிகள் வெளியே வந்தனர். அந்த எழிற் காட்சியை ரசித்தவாறு வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருந்த சேஷிப் பாட்டியின் சுருங்கிய முகத்தில் ஒரு புன்னகையின் ரேகை நெளிந்தது.

வேலூர் உயர்தரப் பெண் பாடசாலையின் கடைசி மணி அடிக்கும்போது நாள் தவறாமல் சேஷிப்பாட்டி வாசல் திண்ணையில் ஆஜராகி விடுவாள்.

ஒரு நாளா, இரண்டு நாளா! ஐம்பது வருடங்களாக அதே வீட்டுத் திண்ணையில் ஆயிரக்கணக்கான பெண் குழந்தைகளின் எதிர்கால வாழ்க்கையை எடை போட்டுப் பார்த்து விட்டது அவள் மனம்!

பாவாடை தாவணியாகி, பிறகு புடவையாக மாறி, பின்பு இடையில் குழந்தையுடன் எத்தனையோ பெண்கள் கல்யாணமாகிப் புக்ககம் போய் விட்டனர். ஏன், அவள் அந்த வீட்டுக்கு வந்த போது முதல் வகுப்பில் படித்த விசாலம் கூடப் பத்தாவது வரை படித்துப் பிறகு கல்யாணமாகி இப்போது பேரன் பேத்திகளுடன் கொழித்துக் கொண்டிருக்கிறாளே!

இதை நினைக்கும் போது பழைய நினைவுகள் சர்ப்பம்போல் படையெடுத்துச் சீறின.

**ந**டுங்கும் கரங்களில் மாற்று மாலையை ஏந்தி மையிட்ட விழிகள் கலங்க, மரப்பாச்சி மாதிரி நின்று கொண்டிருந்த பச்சிளங் குமரியின் கழுத்தில் மாலையைப் போடுவதற்குள் மாப்பிள்ளை குப்புசாமி படுத்திய பாடு எந்நாளுமே அழியாத சித்திரமாக அவள் உள்ளத்தில் பதிந்து விட்டது.

வேண்டாத பெண்ணின் கழுத்தில் பெற்றோரின் கட்டாயத்துக்காகத் தாலி கட்டிய குப்புசாமி சேஷியை விஷம் போல் வெறுத்தான். காரணம், அவள் ஒரு எழிலோவியமாகத் திகழாததுதான்! குப்புசாமி பி. ஏ. படித்தவன்; கட்டுக் குடுமியுடன் செக்கச் செவேரென்று ஒளி வீசும் கண்களும் சிரித்த முகமும் உருண்டு திரண்ட அங்க அவயவங்களும், கவர்ச்சியான தோற்றமுமுடைய கட்டழகனான வாலிபன். தன் அழகுக்கேற்ற எழிலரசியைத் தேர்ந்தெடுத்து அவன் மணக்க விரும்பியதில் தவறென்ன இருக்கிறது?

அவனது பெற்றோர் பெண்ணின் அழகை அவ்வளவாகப் பாராட்டாமல், சேஷியைப் பெண் கொள்ள விழைந்தனர்.

மகா பண்டிதரான தீட்சிதரின் பெண் சேஷியின் உயர்ந்த குணமே குப்புசாமியினுடைய தாயாரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தது. குடும்பப் பெண்களுக்கு அதிக அழகு தேவையில்லை என்று வாதாடிப் பிள்ளையை எப்படியோ பெண் கழுத்தில் மூன்று முடிச்சுகளைப் போடச் செய்து விட்டாள்! ஆனால் அதன் முடிவு இத்தகைய பயங்கரத்தை விளைவிக்கும் என்பதை அவள் கொஞ்சமாவது எண்ணியிருந்தால், அநியாயமாக ஒரு பெண்ணின் வாழ்வைப் பாழடிப்பதற்குத் துணிந்திருப்பாளா!

புக்ககத்தில் நுழைந்த சேஷியின் மேல் அவள் மாமியார் அன்பு மழையைப் பொழிந்தாள். அதே சமயம் அவள் கணவன் அவளைக் கண்ணில் காணவொட்டாமல் கரித்துக் கொட்டினான். காரணமில்லாமல் அவளைக் கண்டபடி அடித்து நொறுக்கினான்! வாய் விட்டு அழக்கூடத் தெரியாத பரம சாதுவான சேஷி அத்தனை உதைகளையும் பட்டுக் கொண்டு சிரித்த முகத்துடன் அவன் அன்புக்காக ஏங்கித் தவங் கிடந்தாள்.

சேஷியின் துரதிர்ஷ்டம் அவள் புக்ககத்தில் கால் வைத்த சில மாதங்களில் அவளிடம் அன்பைச் சொரிந்த மாமனார் கண்ணை மூடி விட்டார். அத்துயரைத் தாங்கச் சக்தியற்றவளாய் மாமியாரும் கொடியவனான தன் மகனிடம் சிறகொடிந்த பட்சிபோல் சேஷியைத் தவிக்க விட்டு விட்டுப் பறந்து போய் விட்டாள்! மாமனாரையும், மாமியாரையும் உருட்டித் தள்ளிய பாவி என்ற குற்றச்சாட்டையும் சுமந்து கொண்டு, அவனது அடியையும் திட்டையும் தாங்கச் சக்தியற்றவளாய், கல்யாணமான ஒரு வருடத்துக்குள் பிறந்தகம் வந்து சேர்ந்து விட்டாள் சேஷி. அவளது வாழ்க்கையின் முதல் அத்தியாயம் முடிவுற்றது. பிறந்தகம் வந்த சேஷியைப் பிறகு அவள் கணவன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. சேஷியின் தகப்பனார் வேதாந்த மனப்பான்மையுடைய குணசீலரானதால், மாப்பிள்ளை குற்றத்தை உணர்ந்து தானாகவே மனைவியை அழைத்துக் கொள்வான் என்று எண்ணினார். ஆனால் குப்புசாமி தன் மனத்துக்குப் பிடித்த அழகியைத் தைரியமாக மணந்து கொண்டு விட்டான்.

தன் தலையெழுத்து அவ்வளவுதான் என்று மனம் தேறிய சேஷியின் தகப்பனார் உள்ளத்தில் குமைந்து கொண்டிருந்த துயரச் சுமையைத் தாங்க முடியாமல் வெகு சீக்கிரத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தார். கைம்மையின் கொடுமைக்கு இலக்கான சேஷியின் தாயார், குமரிப் பருவத்திலே வாழ்வை இழந்து நிற்கும் பெண்ணுடன் தனது ஒரே சொத்தான கூரை வீட்டில் தனது துயர வாழ்வைத் துவக்கினாள்.

வீட்டின் முன்பகுதியிலுள்ள ஒரு சிறு அறையை மட்டும் தங்களுக்காக ஒதுக்கி வைத்துக் கொண்டு மற்றப் பகுதிகளை வாடகைக்கு விட்டனர். வயது வந்த பெண்ணை வீட்டில் வைத்து விட்டுத் தான் மட்டும் வெளியில் சென்று சமையல் வேலை முதலிய

வற்றைச் செய்து வந்தாள் தாயார். இதைத் தவிர அப்பளம் இடுவது, ஹோட்டல்களுக்கு மா அரைத்துக் கொடுப்பது போன்ற வேலைகளையும் செய்து வந்ததில் இரண்டு வயிற்றைக் கழுவப் போதிய ஊதியம் கிடைத்து வந்தது அவளுக்கு!

காலச்சக்கரம் சுழன்றது. சேஷியின் நாற்பத்தாறுவது வயது நடந்து கொண்டிருக்கையில் ஒரு வைகுண்ட ஏகாதசியன்று ஈசன் பொன்னடியை அடைந்தாள் அவள் தாயார். இனி சேஷி தன்னந்தனியாக வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பழகிப்போன வாழ்க்கைப் பாதையில் சறுக்கி விழாமல் உலவி வர ஒரு வழி வகுத்துக் கொடுத்த பின்பே அவள் தாயார் கண்ணை மூடினாள். காலம் அவளைச் சேஷி மாமியாக்கி நாளடைவில் சேஷிப் பாட்டியாக மாற்றிவிட்டாலும் அவளது மனநிலை மட்டும் சற்றும் மாறுதலடையாது, லட்சியத்தின் எல்லைக் கோட்டுக்குள்ளேயே நின்று போய் விட்டது.

உலகம் மாறியது. மக்கள் மாறினார்கள். மனிதர்களின் மனப்பான்மை, நடையுடை பாவனைகள் எல்லாவற்றிலுமே மாறுதல்கள் தோன்றின. ஆனால் சேஷியின் தொழில் முறை மட்டும் அழியாத சிரஞ்சீவித்துவம் பெற்றிருந்தது.

இளமையில் எழுந்த ஆசைக் கதிர்களையெல்லாம் அவ்வப்போது கட்டுப் போசுக்கி விட்டாள். முருகனின் உருவத்தில் தன் கணவனின் உருவைக் கண்டு மகிழ்ந்தாள் அந்தப் பேதை! அவரை மானசீகமாக வணங்கினாள். நாள் தவறாது சுப்பிரமண்யசுவாமி கோவிலுக்குப் போய் அங்கு வள்ளி தெய்வயானை சமேதராய் எழுந்தருளியிருக்கும் அழகனைக் கண்டு பக்தி பரவசத்தில் பல மணி நேரம் தன்னை மறந்து கிடப்பாள். உருப்போட்டு மனப்பாடமான அவளது ஒரே பிரார்த்தனையை முருகன் புன்முறுவல் பூத்த வதனத்துடன் செவி மடுத்து வந்தான்.

''வள்ளி மணாளா! எங்கிருந்தாலும் அவர் க்ஷேமமாக இருக்கட்டும். அவர் குடும்பம் செழிக்க வேண்டும். என்னை மட்டும் அவர் உயிருடனிருக்கையிலே இந்த மஞ்சள் குங்குமத்துடன் சுமங்கலியாக உன் பாதத்தில் சேர்த்துக் கொள்ளப்பா'' என்று ஒரு நாள் விடாமல் வேண்டும் சேஷியின் ஆவலை ஆண்டவன் பூர்த்தி செய்வானா?

ஊரில் குண்டு வீச்சு நடந்தாலும் சரி, கலகம் ஏற்பட்டாலும் சரி, மழை வெள்ளம் வந்தாலும் சரி, எந்த நிலையிலும் அவள் தனது ஒரே பிரார்த்தனையைச் செய்யத் தவறியதே கிடையாது.

இப்போது சேஷிப் பாட்டி, பல பெரிய மனிதர்களின் மதிப்புக்குரியவளானாள். எந்தக் கல்யாணம் ஆனாலும் சரி, அங்கு சேஷிப்பாட்டியைப் பார்த்துக் கொள்ளலாம். இனிப்பு, உப்பு பட்சணங்கள் செய்வதில் அவளுக்கு ஈடு அந்த வட்டாரத்திலேயே ஒருவரும் இல்லை. மிகவும் நாணயமாகவும் பொறுமையாகவும் சாமான்களைப் பாழாக்காமல் வெகு திறமையாகப் பட்சணங்களை இயந்திரம்போல் செய்து குவித்து விடுவாள். சேஷிப்பாட்டி பட்சணம் செய்கிறாளென்றால் அந்தக் கல்யாணத்தின் தரம் ஒரு படி உயர்ந்துவிடும்.

சிலைபோல் உட்கார்ந்து கொண்டு சிந்தனை வலையில் சிக்கியிருந்த சேஷியின் கனவை ''அம்மா, பால்!'' என்ற குரல் கலைத்தது.

பாலை வாங்கிக் கொண்டு உள்ளே போகக் காலை எடுத்து வைக்கும்போது பால்காரன் பல்லையிளித்தபடி ''அம்மா! கலெக்டர் வீட்டு அம்மா உங்களைக் கட்டாயம் வரச் சொன்னாங்க. அவங்க வூட்டுக் கொழந்தைக்குக் கண்ணாலமாம்'' என்றான்.

இதைக் கேட்ட சேஷி 'ஆகட்டும்' என்பதற்கு அறிகுறியாய்த் தலையை ஆட்டி விட்டுத் தன்னறையைப் பூட்டிக் கொண்டு கோவிலை நோக்கி நடையைக் கட்டினாள். கலெக்டர் வீட்டு விசேஷங்களுக்குச் சேஷிக்கு அடிக்கடி அழைப்பு வரும். மறுப்புக் கூறாமல் சேஷிப் பாட்டி உடனே சென்று அவர்களது தேவைகளைப் பூர்த்தி செய்து வருவாள்.

கலெக்டரின் ஒரே பெண்ணான மாலதிக்குக் கல்யாணமென்றால் கேட்கவா வேண்டும்! சுவாமி தரிசனத்தை முடித்துக் கொண்டு, சேஷி கலெக்டர் வீட்டை நோக்கிப் புறப்பட்டாள். அறுபத்தைந்து வயதைக் கடந்து விட்டாலும், அவளது நடையின் வேகம் சிறிதும் குறையவில்லை.

சேஷிப் பாட்டியை மலர்ந்த முகத்துடன் வரவேற்ற கலெக்டர் மனைவியின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. ''வாருங்கோ, பாட்டி! நம்ம மாலதிக்கு நல்ல இடம் கிடைத்து விட்டது. இன்னும் எட்டு நாட்களில் கல்யாணம். பிள்ளையின் தகப்பனார் பூனாவில் பெரிய உத்தியோகத்திலிருக்கிறாராம். பிள்ளை டாக்டருக்குப் படித்திருக்கிறான். மேல் நாடெல்லாம் போய்விட்டு வந்திருக்கிறானாம். பூனாவில் வீடு கட்டி இன்னும் ஒரு வருஷம் கூட ஆகவில்லையாம். அரண்மனைபோல் வீடு ரொம்ப அழகாக இருக்கிறதாம். பணக்கார இடமாக இருந்தாலும் அவர்கள் வரதட்சிணை வேண்டாமென்று கூறிவிட்டதால் கல்யாணத்தை மிகவும் நன்றாக நடத்த வேண்டுமென்று எண்ணியிருக்கிறோம். எனக்கும் பெரியவர்கள் சகாயம் இல்லாததால் நீங்கள்தான் முன்னிருந்து கல்யாணத்தைச் சிறப்



பாக நடத்தி வைக்கவேண்டும். கல்யாணம் முடிகிற வரையில் நீங்கள் இங்கேயே இருக்க வேண்டும்'' என்றாள்.

அன்புக் கட்டளைக்கு மறுப்பு உண்டா! ஒண்டிக் கட்டை எங்கு கிடந்தாலென்ன? சரீரத்தில் தெம்பு உள்ளவரை உழைப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்த சேஷி அந்தச் சந்தர்ப்பத்தை இழக்க விரும்புவாளா! சிரித்த முகத்துடன் தன் வீட்டுக் கல்யாணத்தைப் போல் பொறுப்பேற்றுக் கொண்டு கல்யாணக் காரியங்களில் ஈடுபட்டாள்.

பட்சண வகைகளை யெல்லாம் மடமடவென்று செய்து தள்ளி விட்டாள். வேலை செய்து காய்த்துப்போய் உரம் பெற்ற கைகளல்லவா அவள் கைகள்! அவள் கை வைத்த கல்யாணம் சோடையாகவே போனதில்லை. மிருந்த கைராசிக்காரி என்று அனைவரும் அவளை வாயாரப் புகழ்ந்தார்கள்.

கல்யாண தினம் வந்தது. அப்பப்பா! பந்தல் போடுவதற்கே ஐந்நூறு ரூபாய் செலவழித்தார்களென்றால் இதர விஷயங்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ! சரிகைப் புடவைகளும் வைர நகைகளுமாக அள்ளிச் சொரிந்து கொண்டு வந்திறங்கிய சம்பந்திகளைக் கண்டவர் ஜனங்களெல்லாம் அயர்ந்து போனார்கள்.

செல்வத்தில் திளைக்கும் சம்பந்தியம்மாள் சற்றும் கர்வமில்லாமல் சிரித்த முகத்துடன் எல்லோருடனும் சரளமாகப் பழகினாள். சேஷிப் பாட்டியின் கைத்திறமையால் சுவையுற்ற பட்சண வகைகளைப் புகழ ஆரம்பித்து விட்டாள். கல்யாணம் ஆனவுடனே கிருகப் பிரவேசத்தை நடத்த வேண்டுமென்று சம்பந்தி வீட்டார் அபிப்பிராயப்பட்டனர்.

''பாட்டீ! வீட்டுக்குப் பெரியவரான, கல்யாணப் பிள்ளையின் தாத்தா படுத்த படுக்கையாக இருக்கிறாராம். அதனால் தான் பாட்டியும் கல்யாணத்துக்கு வரமுடியவில்லை. பூனாவில் கட்டியிருக்கும் புது வீட்டிலேயே கிருகப்பிரவேசத்தை நடத்தவிரும்புகிறார்கள். கிழவரின் நிலை கவலைக்கிடமாக இருப்பதால் சீக்கிரத்தில் சுபகாரியத்தை நடத்த வேண்டுமென்று துடிக்கிறார்கள். இன்னும் எட்டு நாட்களில் முகூர்த்தம் பார்த்திருக்கிறது. நீங்களும்கூட வந்திருந்து கிருகப்பிரவேசத்தை நன்கு நடத்தி வைக்க வேண்டும். உங்களைத் தவிர பெரியவர்கள் எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்?'' என்று சேஷிப் பாட்டியைக் கலெக்டரின் மனைவி வெகுவாக வேண்டினாள். அவளது வேண்டுகோளை மறுக்க முடியாமல் சேஷியும் அவர்களுடன் புறப்பட்டு விட்டாள்! சேஷிக்கு இது முற்றிலும் புதிய அனுபவம்! வேலூர் மண்ணைவிட்டு அவள் அகன்றதே இல்லை. ரயில் பிரயாணத்தின் இன்பத்தை நுகரும் வாய்ப்பு அவளுக்கு அறுபதைந்தாவது வயதில் தான் கிடைத்தது.



பூனா ஸ்டேஷனில் கல்யாண கோஷ்டியை வரவேற்க, முன் ஏற்பாட்டின்படி, ஐந்தாறு மோட்டார்கள் ஸ்டேஷனுக்கு வெளியில் தயாராகக் காத்துக் கொண்டிருந்தன. சேவகர்கள் மூட்டை முடிச்சுகளை யெல்லாம் இறக்கித் தலையில் சுமந்து சென்றனர்.

வழுவழுப்பான தார் ரோட்டில் மோட்டார் ஓடும் போது சேஷி சுவர்க்க போகமே அனுபவித்தாள். வாழைகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுப் பசுமையாக விளங்கும் புத்தம் புதிய பங்களாவின் போர்டிகோவில் கார் நுழைந்தது. சம்பந்திப் பேர்களை வரவேற்க வந்த பழுத்த சுமங்கலியைக் கண்ட சேஷிப் பாட்டியின் உள்ளத்தில் ஒருவிதக் குறுகுறுப்பு ஏற்பட்டது. செக்கச் செவேரென்று இரத்தச் சிவப்பேறிய குங்குமப் பொட்டு நெற்றியில் பளிச்சிட, வைரத் தோடுகள், சின்னச் சரிகைப் பட்டுப் புடவை உடலைத் தழுவ, புன்னகை பூத்த முகத் தோற்றத்துடன் மகாலட்சுமி போல் விளங்கும் அந்த ஸ்திரீயை வைத்த விழி வாங்காமல் பார்த்தாள் சேஷி.

அவளது பேச்சிலிருந்து அவள் தான் கல்யாணப்பிள்ளையின் பாட்டி என்று நொடியில் விளங்கி விட்டது.

கிருகப் பிரவேசம் அமர்க்களமாக நடந்தேறியது. எழில்மிக்க நாரீமணிகளும் செல்வம் கொழிக்கும் சீமாட்டிகளும் உலவிக் கொண்டிருந்த அந்த அழகிய வீட்டில் வறுமைக்கு எடுத்துக்காட்டாக வற்றிப்போன உடலுடைய சேஷிப் பாட்டி அவமானத்தால் குன்றியவளாய், சமையலறையில் ஒளிந்து கொண்டு விட்டாள்.

சிரிப்பும் கொம்மாளமுமாக ஸ்திரீகள் நடுஹாலில் அமர்ந்து உல்லாசமாகப் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தனர். இரவு சில முக்கியமான பெரிய மனிதர்களுக்கென்று ஏற்படுத்தப்பட்டிருந்த விருந்துக்கு ஜிலேபி தயாரிப்பதில் தனது முழு கவனத்தையும் செலுத்திக்கொண்டிருந்தாள் சேஷி. சமையலறையை ஒட்டினாற் போலிருந்த அறையில்தான் நோயாளியான கிழவர் படுத்திருந்தார்.

சேஷியின் மனம் ஜாங்கிரியுடன் போட்டி போட்டுக் கொண்டு சுழன்று கொண்டிருந்தது. முற்றிலும் புதிய சூழ்நிலையில் புதிய மனிதர்களிடையே இருக்கும் வாய்ப்பு அவளுக்குக் கிடைத்திருந்தாலும் அவளுக்கு வேண்டிய பொருள் அங்கு இருக்கவில்லை. முருகப்பெருமானின் திருவுருவத்தைக் காணாமல் அவளால் எத்தனை நாட்கள்தான் இருக்க முடியும்!

தற்செயலாக அவளது பார்வை சாளரத்தினூடே தெரிந்த பூஜை அறையை நோக்கித் தாவியது! என்ன விந்தை! அவளது சிந்தையைச் சிதற அடிக்கும் மோகன உருவம் ரோஜா மாலையால் அலங்கரிக்கப்பட்டு 'இதோ நானிருக்கிறேன்' என்று பறை சாற்றுகிறதே! என்னே என்னப்பனின் கருணை! இந்த ஏழைக் கிழவியை மறக்க முடியாமல் அவனே இங்கு ஓடிவந்து விட்டானே! மாலையில் தினம் அவள் கோவிலுக்குச் செல்லும் அதே வேளையில் அந்தக் குறும்புக்காரன் 'என்னைப் பார்' என்று அவளைத் தட்டியழைக்கிறானே! இரத்தத்திலே

## நெருக்கடி

பாங்க் மானேஜர் :—நீ பாங்கு வேலைக்கு வருகிறதற்குக் காரணம் என்ன ?



வேலை தேடி வந்தவன் :—எத்தனையோ இடங்களைப் பார்த்தேன். அங்கெல்லாம் பண நெருக்கடியாயிருக்கு. பாங்கிலே அந்த நெருக்கடி இல்லே, பாருங்க !

ஊறிய அவள் நினைவு அவளை மெய் சிலிர்க்கச் செய்தது ! கை வேலையைப் போட்டுவிட்டு அவள் வெகு உரிமையுடன் பூஜை அறைக்குள் நுழைந்து விட்டாள் ! பளிச்சென்று தேய்த்து வைக்கப்பட்டிருந்த வெள்ளிக் குத்துவிளக்கை ஏற்றி வைத்தாள். படத்தைப் பார்த்துக் கொண்டு பக்தி பரவசத்துடன் ஒரு கணம் நின்று விட்டாள். வழக்கம்போல் தினசரி பிரார்த்தனையை முடித்துக் கொண்டதும், அவளது குழி விழுந்த கண்கள் அவ்வறையை ஆராய ஆரம்பித்து விட்டன. என்ன இது ? திடீரென்று அவள் முகம் ஏன் இப்படிப் பேய் அறைந்தமாதிரி வெளுத்து விட்டது ? கண்கள் ஏன் நீரை ஆறுகப் பெருக்குகின்றன ?

சேஷி நிலை குலைந்தாள். மனத்தில் எழுந்த தாபத்தில் வெப்பத்தைத் தாங்க முடியாமல் அவள் உடல் பதறியது. விவரிக்க முடியாத உணர்ச்சியால் கை கால்கள் நடுங்கின ! அவள் பார்த்த பொருள்தான் என்ன ! எந்த நினைவை நெஞ்சை விட்டுப் பெயர்த்தெறிய முயன்ருளோ அந்த நினைவை ஸ்திரமாக நிலைக்கச் செய்யும் அந்தப் பாழாய்ப்போன படம் இங்கு எதற்கு இருக்க வேண்டும் ? பலவந்தமாகப் பிடித்து இழுத்து உட்காரவைத்து, வேண்டாத மனைவியுடன் மாலையும் கழுத்துமாக எப்போதோ எடுத்த அவளது கல்யாணப் புகைப்படத்தைப் பார்க்கப் பார்க்க அவளது இதயம் எரிமலை போல் குமுறியது !

''சேஷி மாமி, என்ன பார்க்கிறீர்கள் ! அடாடா விளக்கை ஏற்றி விட்டீர்களா ! அதற்குத்தான் வந்தேன். இன்று சாயங்காலம் ஏழு மணி தாண்டிவிட்டால் கிழவருக்கு அபாயமில்லை என்று டாக்டர் சொன்னார். அந்த முருகன் எனக்கு மங்கிலியப் பிச்சை யளிப்பானே, என்னவோ !'' என்று கூறிக் கொண்டே வந்த கிழவரின் மனைவியைக் கண்டதும் சேஷி தனது உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டாள்.

''ஒன்றுமில்லை. ஸ்வாமி படங்களுக்கிடையே இந்த அவலட்சணமான படத்தை மாட்டி விருக்கிறீர்களே என்று பார்த்தேன்'' என்று சேஷி கூறும்போது அவளது நாத் தழுதழுத்தது.

''சேஷியம்மா ! அந்தப் படத்திலிருக்கும் புண்ணியவதி தெய்வப்பிறவி ! அவளது ஆசியினால்தான் நாங்கள் இன்று அமோகமாக வாழ்கிறோம் என்பது எனது அசையாத நம்பிக்கை. அந்த உத்தமிக்கு என் கணவர் மகத்தான துரோகம் இழைத்து விட்டார். அதற்குப் பிராயச்சித்தமாக நான் ஏது வேண்டுமானாலும் செய்யத் தயார். அழகாக இல்லை என்று ஒரு பெண்ணை ஒதுக்கி விட்டு வேறு ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்ட குற்றத்துக்கு வேறு பெண்ணாக இருந்தால் கொடிய சாபமிட்டிருப்பாள் ! அந்தச் சாபம் குடும்பத்தையே நாசமாக்கி விடாதா ! அந்த உத்தமி எங்கேயோ உழைத்து எளிய வாழ்வு நடத்துகிறாள் என்று கேள்வி. அவளைத் தேடி அழைத்து வந்து இந்த வீட்டுச் சாவிக் கொத்தை அவளிடம் அளித்து விட்டு, அவளை எசமானியாக்கி, அவள் உள்ளத்தின் அரிய அழகை ரசிக்கத் தவறிவிட்டார் அவர். அவள் உயிருடன் இருக்கிருளோ ! இறந்து விட்டாளோ ! எப்படியிருந்தாலும், எனது தற்போதைய ராஜ வாழ்க்கையை எனக்கு அளித்த அந்தத் தெய்வத்தை நான் வணங்கி வருகிறேன்'' என்று கூறும் போது கிழவியின் தொண்டை கரகரத்தது. இதைக்கேட்ட சேஷிப்பாட்டிக்கு உலகமே சுழல்வதுபோல் இருந்தது. அவளால் நிற்க முடியவில்லை. நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு நிலைமையைச் சமாளிக்க முயன்ருள். கண்ணீர் திரையிட்டது.

''என்ன மாமி? உடம்பு சரியில்லையா?'' என்று கேட்ட கிழவியின் முகத்தில் கவலையின் ரேகை படர்ந்தது. சேஷி கஷ்டப்பட்டுப் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, ''ஒன்றுமில்லை. வயசாச்சோல்லோ ? இலேசாக மார் வலிக்கிறது போலிருக்கு. தண்ணீர் குடித்தால் சரியாகி விடும்'' என்று கூறிவிட்டுச் சமையலறைக்குள் நுழைந்து விட்டாள்.

அவளால் தொடர்ந்து ஜிலேபி பிழியமுடியவில்லை. கைகள் நடுங்கின. அவள் பலமெல்லாம் எங்கு போயிற்று ?

என்ன விந்தை ! ஐம்பது வருஷங்களுக்குப் பின் கடுகாட்டை எட்டிப் பார்க்கும் பருவத்தில் கணவனின் இல்லத்திலேயே பணிபுரியவா முருகன் பலநூறு மைல்களுக்கப்பால் அவளை அனுப்பி வைத்தான் !

எண்ணச் சுழல்களில் தத்தளித்த அவள் மனத்தில் திடீரென்று மின்னல் போல் ஒரு தீர்மானம் தோன்றியது. இது வரை அவள் ஒன்றிலுமே பட்டும் படாததுமாக உலவி வந்தாள். இப்போது கிழவரைப் பார்க்க அவள் மனம் விழைந்தது. நோயாளியின் அறையில் அவளுக்கென்ன வேலை ! ஆனால் இப்போது மட்டும் தைரியம் எங்கிருந்து வந்தது ? கட்டுக் குடுமியுடன் ராஜா மாதிரி செக்கச் செவேர் என்று விளங்கிய அந்த மன்மத வடிவத்தை, சாவை எதிர்நோக்கி நிற்கும் சுருங்கிய கிழ வடிவத்தில், மற்றொரு முறை தேடிப் பார்க்க அவள் துணிந்து விட்டாள் ! விடுவிடு வென்று நோயாளியின் அறைக்கு வெளியே நின்று திரையை விலக்கி எட்டிப்புறம் நோக்கினாள்.

காலடிச் சத்தத்தைக் கேட்ட கிழவர் மூடிய கண்களைத் திறந்து, ''கொஞ்சம் வெந்நீர் வேண்டும்'' என்று கம்மிய குரலில் கேட்டார். அவரது குரலின் சத்தம் அவள் இதயத்தைத் தொட்டது. ஓடோடியும் சென்று ஒரு

**ஓஹோ, அப்படியா!**

சாமான் வாங்கினவர் :- **திருப்திகரமாய் இல்லா விட்டால் பணத்தைத் திருப்பித் தரேன்னு சொன்னேளே?**



கடைக்காரர் :- **ஆமாம்! நீங்க கொடுத்த பணம் எனக்குத் திருப்திகரமாயிருக்கு!**

வெள்ளி டப்ளரில் வெந்நீர் கொண்டு வந்து கட்டில் அருகில் நின்றான்.

மணமாலையும் இரண்டாம் முறையாக அந்தத் தம்பதிகளைச் சேர்த்து வைத்து விட்டது விதி! ஆனால் முற்றிலும் வேறு விதமான சூழ்நிலையில். முதன் முறை மணவறையில் பிஞ்சு உள்ளம் படைத்த சேஷியைக் காரணமில்லாமல் அழ வைத்த கணவன், இரண்டாம் முறை பேசக்கூடச் சக்தியற்று மரண வாயிலே நெருங்கிக் கொண்டிருக்கும் துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டு விட்டது! தனி அறையின் முதல் சந்திப்பொரு முறை அந்தத் தம்பதிகளைப் பிரித்து வைத்தது. இரண்டாம் சந்திப்பு அவ்விருவரையும் சேர்த்து வைக்குமா!

கிழவர் தமது பஞ்சடைந்த விழியால் சேஷியை நோக்கினார். அவளை அவருக்கு எப்படி அடையாளம் தெரியும்! யாரோ சமையற்காரி என்றே எண்ணினார். ஆனால் அவள்மீது அருவித அநுதாப உணர்ச்சி எழுந்தது. அவளுக்கும் அவருக்கும் ஏற்பட்ட தெய்விகப் பிணைப்பின் சக்தியினால் ஏதோ நூலிழைபோல் ஒரு தொடர்பு ஒட்டிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது. நடுங்கும் கரங்களுடன் அவளது கைகளிலிருந்த டப்ளரை வாங்கும்போது இருவரது கரங்களும் உரசின. சேஷிப் பாட்டியின் உடலில் ஏதோ மின்சாரம் பாய்வது போலிருந்தது. முதன் முதல் இளங் காதலர்களுக்கு ஏற்படும் ஸ்பரிச உணர்ச்சி அல்ல அது! அறிவுக்கே எட்டாத ஒரு உணர்ச்சி வேகத்தால் கட்டுப்பட்டவளாய்க் கிழவரது சுருங்கிய முகத்தை ஒரு விநாடி உற்று நோக்கினாள். கிழவர் ஆயாசத்துடன் கண்களை மூடிக் கொண்டார். சேஷி சுற்று முற்றும் பார்த்து விட்டுச் சடாரென்று அவர் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டதும் விடு விடுவென்று வெளியே வந்தாள். அவள் வெளியேறின சமயமும் கிழவரின் பிள்ளை உள்ளே நுழையும் சமயமும் ஒன்றாக இருந்தது.

சேஷிப்பாட்டி அறைக்கு வெளியே தாளாரத்தையடுத்த தூணைப் பிடித்துக் கொண்டு சிலை போல் நின்று விட்டாள்.

காதுகளில் யாரோ பஞ்சையடைத்து விட்டது போலிருந்தது. அதையும் மீறிக் கொண்டு சில வார்த்தைகள் அவள் செவிகளினூடே புகுந்து இதயத்தைத் தொட்டன.

"அம்பீ! நான் இனி அதிக நேரம் இருக்க மாட்டேன். கடவுள் அருளால் குழந்தை கல்யாணம் நடந்த பின் என் பிராணன் போவதைப்பற்றி மகிழ்ச்சியடைகிறேன்.

"நேற்று டாக்டர் என் உடலில் குஷ்ட ரோகத்தின் குறிகள் காணப்படுவதாகக் கூறியது என் காதுகளில் விழுந்தது. அப்போதே என் மனத்தை அந்த ரோகம் அரிக்கத் தொடங்கியது. அன்று கண்ணீர் விட்டுக் கதறிய கைப்பிடித்த மனைவியைக் காலால் உதைத்துத் தள்ளினேன்! 'என்னை விலக்கினாலும் தாங்கள் சுகமாக வாழ வேண்டுமென்றே இறைவனை வேண்டுவேன்' என்று கடைசியாக அவள் கூறிப் போன அமுத மொழி பொய்க்காது. அவள் சாபமிட்டிருந்தால் அன்றே எனக்கு இந் நோய் கண்டிருக்கும். சேஷி நான் அக்னி சாட்சியாக மணந்த மனைவி. உயிரோடு இருந்தால் கடைசிக் காலத்தில் அவளிடம் மனமார என் மன்னிப்பைக் கோரியதாகக் கூறி அவளை அழைத்து வந்து இந்த வீட்டில் சகல உரிமைகளையும் அனுபவிக்கச் செய்ய வேண்டியது உன் கடமை. உன் அம்மாவின் விருப்பமும் அதுதான்......"

இந்த வார்த்தைகளைக் கேட்ட சேஷிக்கு யாரோ குடம் குடமாகத் தேனால் தனக்கு அபிஷேகம் செய்தது போலிருந்தது.

"முருகா! கருணை வள்ளலே! இந்தக் கிழவியைச் சோதிக்காதே! ஐம்பது வருடங்களாக நான் செய்து கொண்ட பிரார்த்தனையை உதறித் தள்ளிவிடாதே!" என்று சேஷியின் வாய் முணுமுணுத்தது.

அவள் கண்கள் இருண்டன. உலகம் அந்தகாரத்தில் மூழ்கியது. அந்தகாரத்தில் ஒரு ஒளிப் பிழம்பு அதனிடையே வேல் தாங்கிய உருவம் சேஷியை அணைத்துக் கொண்டு எங்கோ தூக்கிச் செல்வது போன்ற பிரமை! சேஷி மயக்கமடைந்து விழுந்து விட்டாள்!

உடனே அங்கு பெரிய கூட்டம் கூடிவிட்டது. ஒரே பரபரப்பு. சேஷி கட்டிலில் கிடத்தப்பட்டாள். கூப்பிய கரங்களுடன் நெற்றியில் குங்குமம் பளிச்சிடப் புன்னகை தவழும் முகத்தினளாய் அந்தப் பழுத்த சுமங்கலி மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டாள் என்பதையறிய அதிக நேரம் ஆகவில்லை. அவள் ஆவி பிரிந்தபோது சரியாக ஆறடித்து ஐம்பத்தைந்து நிமிஷங்களாகியிருந்தன!

குமரன் அவளைக் கைவிடவில்லை. கணவன் இல்லத்திலே, அவர் காலடியிலே, அதுவும் தனது அன்புக் கரங்களால் அவருக்கு ஒரு வாய் குடிக்கத் தண்ணீரும் கொடுத்து விட்டே தான் அவள் தன் பிராணனை விட்டாள்!

துயரத்தைச் சுமந்து கொண்டு மௌனமாக நின்ற அனைவரையும் கடிகாரம் தட்டி எழுப்பியது. மணி ஏழடித்து ஓய்ந்ததும் மறுபடியும் வீட்டில் அலறலும் பரபரப்பும் எழுந்தன. தெரிந்தோ தெரியாமலோ சேஷியின் கோரிக்கையை நிறைவேற்ற, கஷ்டப்பட்டு உயிரைப் பிடித்து உடலில் இருத்தி வைத்துக் கொண்டிருந்த குப்புசாமி, சேஷியின் கணவர், அவள் விரும்பிய 'சுமங்கலி'ப் பட்டத்தை அளித்தபிறகே, அவள் இறந்த ஐந்தாவது நிமிடத்திலே உயிரை விட்டார்.

இரண்டாம் முறையாகக் கணவனுடன் சேர்ந்து ஊர்வலம் வரும் பாக்கியத்தை அந்தத் தீர்க்க சுமங்கலி பெற்று விட்டாள்.

# கான்ஸ்டபிள் கந்தசாமி

## இருபத்திமூன்றாம் அத்தியாயம்
## பனம்பழப்பட்டி

முனியம்மாளை ஊருக்கு அனுப்புவதற்காகத் தின்பண்டங்கள் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்த முத்தம்மாள் பக்கத்து வீட்டில் ஏதோ பலமான பேச்சு கேட்கவே கை வேலையை அப்படியே விட்டு விட்டுக் கூடத்துக்கு வந்தாள். தெருப் பக்கத்திலிருந்து ஓடி வந்த முனியம்மாளின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

''பக்கத்து வீட்டிலே போலீஸ்காரங்க வந்திருக்காங்க! மருதம்மாளை மிரட்டி மிரட்டி என்னென்னவோ கேள்வி கேட்கிறாங்க. அந்தம்மா முழிக்கிறத பார்க்கணும்!'' என்றாள்.

முத்தம்மாளின் வயிற்றிலே பாலை வார்த்தது போலிருந்தது. தன் தம்பியின் திட்டம் வேலை செய்கிறது போலும் என்று நினைத்து அவளது உள்ளம் குளிர்ந்தது.

''இன்ஸ்பெக்டரோடு அவங்களும் வந்திருக்காங்க!''

''அவுங்க! உன்னுடைய அத்தானைப் பற்றித்தானே சொல்கிறாய்?''

''இல்லை! இங்கே அத்தானைத் தேடிக்கிட்டு வருவாரே!''

''முருகேசனைச் சொல்கிறாயா?''

''ஆமாம்! அவருதான்!''

மருதம்மாளின் வீடு முழுதும் சோதனை போடப்பட்டது. இன்ஸ்பெக்டர் பூவராகம் கண்களை உருட்டி உருட்டிக் கேள்விகள் கேட்ட போது அவள் பாடு வியர்த்து விருவிருத்துப் போய்விட்டது.

''தங்கவேலு எனக்கு அண்ணன் மகன் இல்லைங்க! எங்க அண்ணாருக்குத் தெரிஞ்சவங்க மகன். அண்ணார் இறந்து ரொம்பக் காலமாச்சு! தங்கவேலு எங்கே இருக்கிறான், என்ன பண்ணுகிறான் என்று எனக்குச் சத்தியமாகத் தெரியாதுங்க. எப்போதாவது வந்தால் ஏழெட்டு நாட்கள் 'அத்தை! அத்தை!' என்று உறவு கொண்டாடிக்கிட்டுத் தண்டச் சோறு தின்னுட்டுத் திரும்பிப் போவானுங்க.

''இந்தத் தடவை அவன் வெளியேபோய் இரண்டு நாளாச்சு. திரும்பி வரவில்லை! என் உண்டிப் பெட்டியிலே போட்டிருந்த



ஏ. கே. பட்டுசாமி

இருபத்தேழு ரூபாயைக் கூடக் காணோ நுங்க!'' என்று பிரலாபித்தாள்.

''உண்மையைச் சொல்லுகிறாயா, பிடிச்சு 'லாக்கப்'பிலே தள்ளி உதைக்க வேணுமா?'' என்று பயமுறுத்தினார் இன்ஸ்பெக்டர் பூவராகம்.

''எனக்குச் சத்தியமாகத் தெரியா துங்க! நான் எந்தத் தப்புத்தண்டாவுக் கும் போகவே மாட்டேன். என் வேலை உண்டு, நான் உண்டு; நம்ப பக்கத்து வீட்டுப் போலீஸ்காரர் இருக்கிறாரே, அவங்க வீட்டிலே வேணுமானாலும் என் னைப் பற்றிக் கேட்டுப் பாருங்க!''

பூவராகம், முருகேசனைப் பார்த்தார்.

''பக்கத்து வீட்டிலே இருப்பது நம்ப கந்தசாமி ஸார்!'' என்றான் முருகேசன்.

''இதோ பார் மருதம்மா! உனக்கு இருபத்தி நாலு மணி நேரம் அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள்ளே உண்மையை நீ சொல்லி விடு! இல்லையென்றால் அப்புறம் நடப்பதை அனுபவிக்க வேண்டியதுதான்! நீ எங்கேயும் ஓடிவிட முடியாது! உன்னைப் போலீஸ்காரர்கள் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள்!'' என்று எச்சரித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டார் இன்ஸ்பெக்டர்.

போலீஸ்காரர்கள் போனதுமே மருதம்மாள் தலைவிரிகோலமாக முத்தம் மாளின் வீட்டுக்கு ஓடி வந்தாள்.

''அக்கா ஆ!...... நீதான் என்னைக் காப்பாத்தணும், அக்கா ஆ!'' என்று ஒரேயடியாகக் கதறிக் கொண்டே அவளது காலடியில் விழுந்தாள்.

முத்தம்மாளுக்கு மருதத்திடம் எவ் வளவோ வஞ்சம்தான். அவளது கர் வத்தை அடக்க வேண்டுமென்று அது வரையில் அவள் துடித்துக் கொண்டு தான் இருந்தாள். ஆனால் இப்போது அதே மருதம்மாள், நிலைகுலைந்து கர்வ மடங்கி ஆணவம் ஒடுங்கி, பரிதாபமாகக் கதறிச் 'சரணாகதி' என்று அவளது காலில் விழுந்ததும் அவளது மனம் மெழுகுபோல் உருகி விட்டது. 'அக்கா!' என்று அவள் அழைத்தது ஒன்றே அவளது உள்ளத்தில் சகோதர உணர்ச்சியைத் தூண்டி விட்டது. தரையில் வேரோடு



பிடுங்கி எறியப்பட்ட செடி போலச் சாய்ந்து கிடந்த அவளைத் தன் இரு கரங்களாலும் அப்படியே தூக்கித் தனது மார்போடு தழுவிக்கொண்டாள்.

''மருதம், அழுவாதே!...... நான் இருக்கிறவரைக்கும் நீ எதற்கும் பயப் படவேணாம். தப்பி வரட்டும், அதுங் கிட்ட சொல்லி......'' என்று அவளைத் தேற்றிக் கொண்டிருக்கையிலேயே கந்த சாமி வாசற்படியில் வந்து நின்றான்.

ஜன்ம விரோதிகள் இருவரும் ஆலிங் கனத்திலிருந்ததைக் கண்டு இது கனவா

நனவா என்று புரியாமல் விழித்தான் கந்தசாமி. மருதம்மாள் தன்தோழியின் பிடியிலிருந்து விலகித் தலை குனிந்து நின்றாள். முத்தம்மாள் ''தம்பி! நம்பமருதம்மா வந்து......'' என்று இழுத்தாள்.

''இப்பத்தான் இன்ஸ்பெக்டரைப் பார்த்தேன். எனக்கு எல்லாச் சமாசாரமும் தெரியும் ஆனல் உனக்கு இப்பவே சொல்லி விட்டேன். அக்கா! என் உத்தியோக விஷயத்திலே மாத்திரம் நீ தலையைக் கொடுக்காதே! ஆமாம், நான் ரொம்பக் கண்டிப்புக்காரன்!''

''சே, பாவம்! கண்ணீர்விட்டு அழுவுதுடா தம்பி!''

''என்ன அக்கா நீ! நான் இங்கு வந்த அன்றைக்கு அந்தத் திருட்டுப் பயலும் இந்த அம்மாளுமா சேர்ந்துக்கிட்டு என்ன குதிகுதிச்சாங்க!''

மருதம்மாள் அவனைத் தீனமாக ஏறிட்டுப் பார்த்தாள்.

''நான் சொன்னதையெல்லாம் மறந்து என்னை மன்னிச்சுடு, தம்பி! எப்படியாவது பெரிய மனசு பண்ணி...''

''ஆமாம். இப்பத்தான் பெரிய மனசு. சின்ன மனசு எல்லாம் தெரியுது! காரியம் ஆகணும்னு காலைப் பிடிக்க வருவீங்க! இல்லேன்னு மென்னியைப் பிடிச்சு டுவீங்க...சேச்சேச்சே! பொழுது விடிஞ்சால், பொழுது போனால் எத்தனை



எத்தனை சிபாரிசு, தாட்சிண்யம்!'' என்று அலுத்துக் கொண்டான் அவன்.

முத்தம்மாள் மருதத்திடம் ''நான் கவனித்துக் கொள்கிறேன், பயப்படாமல போ!'' என்று ஜாடை காட்டி நம்பிக்கையூட்டி அனுப்பினாள்.

அவள் போனபிறகு கந்தசாமி தன் அக்காளை நோக்கிப் பெருமையோடு, ''என்ன அக்கா, இப்ப என்ன சொல்றே! நம்ம இட்டம் எப்படி வேலை செய்யுது பார்த்தியா?'' என்று கேட்டான்.

முத்தம்மாள் இரண்டு கைகளாலும் கந்தசாமியின் கன்னங்களை அன்போடு தொட்டுத் திருஷ்டி கழித்தாள்.

**ப**னம்பழப்பட்டி ஒரு சின்னஞ்சிறிய கிராமம். மொத்தம் சுமார் நாற்பது ஐம்பது கூரை வீடுகளும் முப்பது நாற்பது குடிசைகளும்தான் இருந்தன. எத்தனையோ கிராமங்கள் காலவேகத்தில் புது மெருகு பெற்றுவிட்டபோதிலும், பனம்பழப்பட்டி இருபது முப்பது ஆண்டுகளுக்கு முன்னல் எப்படி இருந்ததோ, அந்த நிலையை விட்டு ஒரு அங்குலம்கூட அசையாமல் இருந்தது. திண்ணைப் பள்ளி, படிப்பு வாசனையும் நாகரிகமும் அற்ற மனிதர்கள், புழுதி நிறைந்த குண்டும் குழியுமான வீதி, ஜீர்ணோத்தாரணம் செய்வாரின்றி ஜீரணமாகிக் கொண்டே வந்த சிவன்கோயில் ஆகிய இவற்றில் எவ்வித அபிவிருத்தியும் ஏற்படவில்லை. அதற்கு நேர்மாறாக நாளுக்கு நாள் அவற்றின் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. கிராமத்திலிருந்தவர்களில் பலர், பல காரணங்களினால் நகரங்களில் சென்று குடியேறி விட்டதால் அவர்களது வீடுகள் கவனிப்பாரின்றிச் சிதிலமாகிக் கொண்டே வந்து, காலக்கிரமத்தில் வீதியில் இடையிடையே குட்டிச் சுவர்களும் பாழ்மனைகளும் காட்சியளிக்கத் தொடங்கின.

ஊருக்குச் சுமார் மூன்று கல் தூரத்தில் பஸ்கள் ஓடும் பெரிய ராஜபாட்டை இருந்தது. பஸ்ஸிலிருந்து வழியில் இறங்கி வயல்வெளிகளைக் கடந்து வந்தால் கிராமத்தையடையலாம்.

**க**ந்தசாமி பனம்பழப்பட்டிக்குப் புறப்பட்டபோது மறக்காமல் தனதுபோலீஸ் உடையை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டுதான் வந்தான். பஸ்ஸை விட்டு இறங்கிக் கிராமத்தில் புகுந்ததும், போலீஸ் உடையை எடுத்து மாட்டிக்

கொண்டான். 'ஆள் பாதி ஆடம்பரம் பாதி' என்பதைப் போல் ஆடம்பரம் இருந்தால்தான் இந்தக் கிராமவாசிகள் ஆளை மதிப்பார்கள் என்று அபிப்பிராயப்பட்டான் அவன்.

அவன் எண்ணியது சரியாகத்தான் இருந்தது. அந்தப் பட்டிக்காட்டு மக்களுக்கு, பட்டணத்து 'தாணுக்கார ஜவா'னைப் பார்த்ததும் ஏற்பட்ட ஆச்சரியத்துக்கு அளவில்லை. அவனது உடையையும் ராஜநடையையும் கண்டு அவர்கள் மலைத்து நின்றனர்.

அவன் வீதியில் நுழையும் போதே கோவிலருகில் கிளி விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் தங்கள் விளையாட்டை மறந்து, காட்சிச்சாலைக்குப் புதிதாக வந்துள்ள ஒரு விசித்திர மிருகத்தைப் பார்ப்பது போல் திறந்த வாயை மூடாமல் அவனைப் பயத்தோடு வேடிக்கை பார்த்துக் கொண்டே பின்னால் வந்ததைக் கண்டு அவனுக்குப் பரம திருப்தியாக இருந்தது. கழுத்தில் கலப்பையை மாட்டிக் கொண்டு வயலுக்குச் செல்லும் குடியானவனைப் பார்த்து அவன், தனக்கே உரித்தான தோரணையில் ''ஏய்!'' என்று சும்மா கூப்பிட்டால் கூட அவன் அஞ்சி நின்று விழித்ததைக் காண அவனது புஜங்கள் பூரித்துப் போயின.

ஸ்திரீகள் அவனைச் சுட்டிக் காட்டிக் கசமுசவென்று காதோடு ரகசியம் பேசிக் கொண்டனர். எல்லாம் இந்த உடுப்பு பண்ணுகிற வேலை! அந்தக் கிராமம் முழுவதுமே அவனை ஒரு ஏகசக்ராதிபதியாக நினைத்துக் கொண்டு, ஒரு பயம் கலந்த மரியாதையை யல்லவா செலுத்தியது!......

இந்தச் சர்க்காரும்தான் என்னென்னவோ பண்ணுகிறது! இதைப்போன்ற கிராமத்தில் ஒரு சிறிய போலீஸ் ஸ்டேஷனை ஏற்படுத்தி அதை அவனிடம் ஒப்படைத்து விட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

**மா**லை மூன்று மணியிருக்கும். வீதித் திண்ணையில் தருமலிங்கம் தமது நண்பர்களோடு உட்கார்ந்து சீட்டாடிக்கொண்டிருந்தார். கந்தசாமிக்குப் பொழுது போகவில்லை. அவனோடு பேச அவனுக்குச் சமதையானவர்கள் யாருமே கிடைக்கவில்லை.

''மாமா, இந்த ஊரிலே போலீஸ் ஸ்டேஷன் ஏன வைக்கவில்லை?''

சீட்டுத் துருப்பை எடுத்து ஓங்கி டைமண்ட் ஜாக்கியின் மண்டையில் அடித்துக் கொண்டே, ''இது கிராமமாச்சே தம்பி!'' என்று பதில் கூறினார்.

''எங்க ஊருக்கு எதுக்கு போலீஸ் ஸ்டேஷன்!'' என்றார், 'ஆஸை'ப் போட்டு மேல் வெட்டு வெட்டலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்த மற்றொருவர்.

''சட்! சுத்தப் பட்டிக்காடு! ஊருக்கு லட்சணமா ஒரு கொலையா, களவா, பிக்பாக்கெட்டா, சண்டையா ஒண்ணு கிடையாது இங்கே!......''

திண்ணையில் உட்கார்ந்திருந்தவர்கள் அவனை ஒருவிதமாகப் பார்த்தார்கள். அவனது முகத்தைப் பார்த்துக் கொண்டே 'கிளாவருக்'குப் பதில் 'இஸ்பேட்'டைத் தவறாக இறக்கிவிட்டார் ஒருவர்.

அவ்வளவுதான்! அவருக்குப் பக்கத்தில் இருந்தவர், ''த பாட்டம்! சுப் பாட்டம்! கையிலே 'கிளாவர்' வைச்சுண்டே 'இஸ்பேட்'டை இறக்கறான்!'' என்று குடியே முழுகி விட்டது போல் வீதியே அதிரும்படி கத்தினர்.

''நீ ஏனய்யா! என் சீட்டைப் பார்க்கறே!''

''உன் சீட்டு மூஞ்சியை யாரையா பார்த்தது?''

கலவரம் வலுத்துக் கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டு கந்தசாமியால் மேலும் சும்மா உட்கார்ந்திருக்க முடியவில்லை.

''ஹூம்! நிறுத்துங்கய்யா! உங்க சண்டையை! இந்த ஊருக்குப் போலீஸ் ஸ்டேஷன் ஏன் வேணுமின்னு கேட்டீங்களே! இப்பத் தெரியுதா? காசு வைச்சுச் சீட்டாடுகிறதே சட்டப்படி பெரிய தப்பு! அதுவும் இதுபோலச் சண்டை வேறே போட்டீங்கன்னு சொல்லவே வேணும். நீங்க மெட்ராஸிலே இதுபோலப் பண்ணியிருந்தீங்கன்னு 786வது 'செக்ஷன்' கீழே உங்களை 'அரஸ்டு' பண்ணி 'லாக்கப்புலே' தள்ளியிருப்பேன்!'' என்று வீர முழக்கம் செய்தான் அவன்.

திண்ணையில் நிசப்தம் நிலவியது. 'செக்ஷன்' 'அரஸ்டு' 'லாக்கப்' என்ற வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் ஸ்தம்பித்துப் போயினர்.

''தம்பி! மொதல்லே அந்த உடுப்பைக் கழட்டி வைச்சுட்டு வா!'' என்றார் மாமன் தருமலிங்கம்.

''ஏன் மாமா?''

''சும்மாத்தான் சொல்றேன்! அழுக்காப் போயிடும் பாரு!''

''இல்லே மாமா! நான் இந்த வயக்காட்டு வரையிலே போய்க் கிணற்றிலே இறங்கிக் குளிச்சுட்டு வரலாம்னு பார்க்



# சிக்கனமான, சிறந்த சமையல் சாதனம்...

ஹோட்டல்கள், ஹாஸ்டல்கள் போன்ற விடுதி ஸ்தாபனங்களுக்கு "காமதேனு" இருமுறை சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய் அவசியம். சாஸ்திரீய முறையில் கைபடாமல் தயாரிக்கப்பட்டது. இல்லங்களுக்கும் இன்றியமையாதது.

37 பவுண்டு (மொத்தம்) டின்களிலும் 10 பவுண்டு (நிகரம்) டின்களிலும் கிடைக்கும்.



## காமதேனு

**இருமுறை சுத்திகரிக்கப்பட்ட தாவர எண்ணெய்**

தயாரிப்பு:

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை R. S. — சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜெண்ட்ஸ்

**சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

MC 439

ஒறேன்!'' என்று விஷயத்தைப் புரிந்து கொண்டவன்போல் எழுந்து நடக்க ஆரம்பித்தான் கந்தசாமி.

''இந்த உடுப்போடவா போகிறே! வேஷ்டி கட்டிக்கிட்டுப் போப்பா!''

''பரவாயில்லே மாமா!'' என்று புறப் பட்டான் அவன்.

வெகு தூரத்துக்கு வெகு தூரம் பச்சைப் பசும் வயல்கள் பரந்து கிடந் தன. இடை இடையே சின்னஞ் சிறு வாய்க்கால்களில் தண்ணீர் சலசல வென்று ஓடிக் கொண்டிருந்தது. கந்த சாமி சிந்தனையில் ஆழ்ந்தவண்ணம் வரப்புகளின் மீது நடந்து சென்றான்.

வந்த முதல் நாளே முனியம்மாளின் விஷயமாக எழுந்த கேள்விக்கு மாமா தருமலிங்கத்திடம் பக்குவமாகப் பதில் சொல்லி விட்டான்.

''சின்ன வயசிலிருந்தே முனியம்மா வைத் தங்கச்சிமாதிரி நினைச்சுக்கிட்டிருக் கேன் மாமா!......ஆனால் நீங்க அவள் கல்யாணத்தைப் பற்றிக் கவலைப்படவே வேண்டாம்! அக்கா அவளுக்கு நல்ல இடமாகப் பார்த்து வச்சிருக்குது! அந்த ஆசாமியும் எங்ககூடப் போலீஸிலே வேலை பார்க்கிறவன்தான். யோக்கிய மானவன்! முனியம்மாவுக்கும் சம்மதம் தான்! தை பொறந்ததும் முடிச்சுட லாம்!'' என்று அவன் கூறிய பிறகு தருமலிங்கம் வாயைத் திறக்கவே இல்லை. முத்தம்மாள் பார்த்து வைத் திருந்தால் சரிதான் என்று பேசாமல் இருந்து விட்டார்.

மறுநாள் ஊருக்குத் திரும்பிவிட வேண்டும்; போனதும் தங்கவேலு விஷயமாகக் கவனம் செலுத்த வேண் டும்; அவனைப் பற்றி ஏதாவது கண்டு பிடித்தால்தான் ஜோஸ்யர் சொன்னது போல் 'சிங்காரக் கன்னி சேர்வாள்!' என்று நினைத்தது அவன் மனம்.

எதிரே ஒரு பெரிய துரவு தென் பட்டது. எட்டிப் பார்த்தான். அகல மான படிகள். பளிங்கு போன்ற தெளி வான தண்ணீர். சுகமாக இறங்கிக் குளிக்க விழைந்தது அவன் மனம்.

உடையைக் களைந்து எங்கே வைக்க லாம் என்று சுற்றுமுற்றும் பார்த்தான். சிறிது தூரத்தில் கிணற்றங் கரையின் எதிர்ச் சரகில் தரையில் கிடந்த ஒரு பொருள் அவனது கவனத்தைக் கவர்ந் தது. பார்வைக்குப் பொம்மைபோல இருந்தது. அருகில் சென்று பார்த்தான். அவனது மனம் துணுக்குற்றது. அங்கே கிடந்தது ஒரு குழந்தையின் சவம்!

## இருபத்திநான்காம் அத்தியாயம்

# போலிச் சாமியார்!

கந்தசாமியின் மூளை சரசரவென்று வேலை செய்தது! இதை வைத்துக் கொண்டு இந்தப் பட்டிக்காட்டை ஒரு கலக்குக் கலக்கினால் என்ன? பட்ட ணத்து ஜவானின் சாமர்த்தியத்தைக் காண்பிக்க இதைவிட அரிய சந்தர்ப்பம் எங்கே கிடைக்கப் போகிறது! இன்னும் கொஞ்சம் தீவிரமாக யோசித்தால் ஒரு கொலைக்கேஸையே ஜோடித்து ஏழெட்டு பேரையாவது 'தோடா' போட்டு இழுத்துக் கொண்டு போகலாம். நினைத் ததை உடனே காரியத்தில் நிறைவேற்றி விட எண்ணினான் கந்தசாமி.

கேஸை எப்படித் துவக்குவது என்று யோசித்தான். இதுபோன்ற துர்மரண விஷயங்களில் போலீஸ்காரனுடைய முதல் வேலை 'பிரேதம் அங்கு எப்படி வந்தது? அதன் சொந்தக்காரர்கள் யார்? எப்படி இறந்தது? கொலையா தற்கொலையா?' என்பது போன்ற விஷயங்களைத் தீவிரமாகப் புலன் விசா ரணை செய்வதுதான்.

சுற்றுமுற்றும் பார்வையால் துழாவி னான். கூப்பிடு தூரத்தில் ஒரு கிராம வாசி தலையில் முண்டாசுடன் வயலில் வேலை செய்து கொண்டிருந்தான்.

''ஏய், இங்கே வா!''

கிராமத்தான் அஞ்சியவண்ணம் கையிலிருந்த மண்வெட்டியைக் கீழே போட்டு விட்டு அவன் அருகே வந்து கைகட்டி நின்றான்.

''இதோ பார், இந்தப் பிரேதம் இங்கே எப்படி வந்தது?''

குடியானவன் பயந்து போனான்.

''எனக்குத் தெரியாதுங்க!......''

''ஏய், யார் கிட்ட அளக்கிறே! சென்னைப் பட்டணத்திலே பெரிய பெரிய கொலைகாரனுங்களை யெல்லாம் அப்படியே தூக்கி 'லபக்'குன்னு விழுங்கி யிருக்கிறேன்! நீ எனக்குச் சுண்டைக் காய்க்குச் சமானம்!......''

வரப்பின் மூலையிலிருந்த எல்லைக் கல்லின் மீது கம்பீரமாக உட்கார்ந்தான் கந்தசாமி. எப்போதும் தயாராக வைத் திருந்த குறிப்புப் புத்தகத்தையும் பென் ஸிலையும் கையில் எடுத்தான்.

''இதோ பார், நான் கேட்கிற கேள்வி களுக்கெல்லாம் ஒழுங்காப் பதில் சொல்

விக்கிட்டே வரணும்! இல்லேன்னு உன்னைப் பிடிச்சுது சனி!''

குடியானவன் மெதுவாக நகர்ந்தான். கந்தசாமி சடக்கென்று எழுந்து அவனைப் பிடித்தான்.

''ஓடவா பார்க்கிறே! அந்தப் 'பாச்சா' தான் என்கிட்டே பலிக்காது. புடிச்சு 'லாக்கப்'பிலே தள்ளிவிடுவேன்!'' என்று கந்தசாமி மிரட்டியதும் அவன் மனத்தில் விதியைச் சபித்துக் கொண்டு நின்றான்.

''உம் 'சத்தியமாகச் சொல்றேன்'னு சொல்லு!''

''சத்தியமாய்ச் சொல்றேனுங்க!''

''உன் பெயர் என்ன?''

''சொடலைமுத்து, ஐயா!''

''உன் தகப்பனார் பெயர்?''

''மருதமுத்துங்க!''

கந்தசாமி மளமளவென்று எழுதிக் கொண்டே வந்தான்.

''எந்த ஊர்?''

''இந்த ஊர்தானுங்க!''

''சூ! 'இந்த ஊரு'ன்னு ஒரு ஊர் இருக்குதா? ஊர் பேரைச் சொல்லு!''

''பனம்பழப்பட்டி!......ஏனுங்க இது எல்லாம்? எதுக்குக் கேக்கறீங்க?''

''உஸ்!......குறுக்கே பேசாதே!...... என்ன வயசு?''

''முப்பதுங்க!''

''யார் வயசைச் சொல்றே?''

''என் வயசுதானுங்க!''

''நான்ஸென்ஸ்! கேட்பதற்குப் பதில் சொல்லு! நான் இந்தக் குழந்தையின் வயசு என்னான்னு கேட்டேன்?''

''எனக்கு எப்படித் தெரியுமுங்க?''

''உனக்குத் தெரியாட்டி எனக்கா தெரியும் பின்னே!......இந்தக் கொலைக் கேஸை விசாரிக்கத்தானே நான் பட்டணத்திலிருந்து வந்திருக்கிறேன்!...''

கிராமவாசி திருதிருவென்று விழித்துக் கொண்டே, ''ஐயா, என்னை உட்டுடுங்க, ஐயா! உங்களுக்குப் புண்ணியமாகப் போகட்டும்! கோடிவீட்டு குமாரசாமிப் பிள்ளை வீட்டிலே போன வாரம் பிறந்த கொழந்தை இரண்டு நாளைக்கு முன்னே இறந்து போச்சுங்க! ஒருகால் அது வாகத்தான் இருக்குமய்யா இது! என்னை எதுக்காக......''

''சபாஷ்! அப்படி வா வழிக்கு!...... குமாரசாமிப் பிள்ளை குழந்தையா இது? முதல்லே கேட்டால் ஒண்ணுமே தெரியாதுன்னு சொன்னியே? என்னைக் கூட உங்க ஊர் தலையாரிப் பயல்னு நினைச்சயா? மேலே சொல்லு! ஆணா அல்லது பொண்ணா?''

''பொண்ணுங்க!''

''கல்யாணமாயிடுச்சா?''

''ஆயிடுச்சுங்க. ரெண்டு கொளந்தை கூட இருக்குது!''

''யாருக்கு?''

''எனக்குத்தான்!''

''அட உன்னை யாரையா கேட்டது! இந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் ஆயிடுச்சா?......ஆயிடுச்சுன்னா புருஷன் அல்லது மனைவியின் பேர் என்ன?...... இதோ பாரு, இதெல்லாம் பட்டணத்துப் போலீஸ் மரண விசாரணை 'பாரத்'திலே முக்கியமான 'ஷரத்'துக்கள்... ஜல்தியா சொல்லு! நேரமாகுது!''

''எனக்கு வேலை இருக்குதய்யா!...''

''அதெல்லாம் நடக்காது! சொல்லிவிட்டு வேலையைப் பார்க்கப் போ!''

''இது சின்னச் சிசுவாச்சுங்களே! இதுக்குப் போய்க் கண்ணாலமாச்சான்னு என்னைக் கேக்கறீங்களே!''

''டேய்! துளிக்கூடப் பயமில்லாமல் எனக்கேயா கேள்வி போடறே! கல்யாணம் ஆகலேன்னா இல்லேன்னு சொல்லிவிட்டுப் போ? உம், ஆச்சா இல்லையா?''

''இல்லேங்க!''

''சரி, இந்தப் பெண்ணை யார் கொலை பண்ணினது?''

கிராமவாசியால் அதற்குமேல் தாங்க முடியவில்லை. மெதுவாக அவன் பிடியிலிருந்து தப்பி ஓடத் தலைப்பட்டான். கந்தசாமி ஒரே டாய்ச்சலாகப் பாய்ந்து அவனைப் பிடித்துக் கொண்டான். அந்தத் துரதிருஷ்டசாலி "ஐயோ ஐயோ!" என்று அலறினன்.

இந்தச் சமயத்தில், நீண்ட காவி அங்கி யணிந்த சாமியார் ஒருவர் வரப்பின்மேல் நடந்து வந்து கொண்டிருந்தார். அவரைக் கண்டதுமே சொடலைமுத்து கெஞ்சத் தொடங்கினன்.

"சாமி, சாமி! காப்பாத்துங்க!"

அபயக்குரலைக் கேட்ட சாமியார் அருகில் வந்தார். கந்தசாமியும் தனது பிடியைச் சிறிது தளர்த்தினன். கந்தசாமியின் பரம்பரைக்கே சிவனடியார்களிடம் ஒரு தனி விசுவாசமுண்டு. அவரைக் கண்டதும் "சாமி வணக்கமுங்க!" என்று ஒரு கும்பிடு போட்டான்.



சொடலைமுத்து அவரிடம் தன் குறையைச் சொல்லி முறையிட்டான். விஷயங்களை யறிந்ததும் சாமியார் புன்முறுவலுடன் பேசினர்:

"அவர்களெல்லாம் அரசாங்கத்து அதிகாரிகளப்பா!......அவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ளவேணும்!" என்று அவர் தன் பக்கம் பேசியதைக் கேட்டுக்கந்தசாமியின் உச்சிகுளிர்ந்தது.

அவர் கந்தசாமியைப் பார்த்துச் சாந்தமாக, "உன் பெயர் என்னப்பா?" என்று கேட்டார்.

"கந்தசாமிங்க!"

"ஆஹா! அந்த மகாதேவனின் திருக்குமாரன் சாட்சாத் கந்தபெருமானைப் போலவே வீரனுக இருக்கிறுய்! சென்னைப் பட்டணமோ?"

"ஆமாமுங்க!"

"இதோ பாரப்பா கந்தசாமி! இதோ அருகாமையிலே இருப்பது கடுகாடு. அங்கிருந்து இந்தச் சிகுவைக் கழுகோ, நரியோ இங்கே கொண்டு வந்து எறிந்திருக்கலாம். போனல் போகிறது. இந்தப் பயலை மன்னித்து விட்டு விடு!"

சாமியாரின் கிச்சுக் குரலிலிருந்த இனிமையும் அதில் தொனித்த சாந்தமும் கந்தசாமியை வெகுவாகக் கவர்ந்தன. அவனுல் அவரது வார்த்தையைத் தட்ட முடியவில்லை. அரை மனத்துடன் சொடலைமுத்துவை விட்டு விட்டான். சொடலைமுத்து திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. ஒரே ஓட்டமாக அங்கிருந்து ஓட ஆரம்பித்தான்.

குடியானவன் சென்ற பின்னர் சாமியார் கந்தசாமியுடன் வெகு நேரம் அவனது தொழிலைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தார். கந்தசாமியும் தன் வீர சரித்திரம் முழுதும் தான் பிறந்தது முதல் அப்போது அங்கே வந்தது வரையில் அவரிடம் ஒப்புவித்தான்.

"ஓ! ஸ்நானம் செய்ய வந்தாயா, முருகா...நானும் அதற்குத்தான் வந்தேன். முதலில் நீ இறங்கி ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வா. பிறகு நான் குளிக்கிறேன்" என்ருர்.

கந்தசாமி போலீஸ் ஆடைகளைக் களைந்து கிணற்றங் கரையின் மீது வைத்து விட்டு, அரையில் உள் கால் சட்டையுடன் கிணற்றில் இறங்கினன். சாமியார் கரையில் முருக ஜபம் செய்து கொண்டிருந்தார்.

பட்டணத்தில் இருப்பவர்களுக்கு இது போல் ஆனந்தமாகக் குளிப்பதற்கு எங்கே வாய்ப்பு கிடைக்கிறது! கந்தசாமிக்கு அந்த விசாலமான கிணற்றில் ஸ்நானம் செய்வதில் ஒரு புது உற்சாகம் ஏற்பட்டது. இடதுசாரி வலதுசாரியாக நீச்சலடித்து முழுகி முழுகி எழுந்தான். தண்ணீரை விட்டு எழுந்து வரவே அவனுக்கு மனமில்லை. ஆனுல் கரையில் சாமியார் காத்திருக்கிருரே!

"சாமி உங்களுக்குக் குளிக்க நேரமாச்சுங்களா?"

பதில் இல்லை.

சரிதான் தியானத்தில் ஆழ்ந்திருக்கிருரோ! அல்லது எங்கேயாவது வரப்புப் பக்கம் போயிருக்கிருரோ என்று நிம்மதியுடன் மீண்டும் தண்ணீரில் முழுகினன் கந்தசாமி.

சுமார் பத்து நிமிடங்கள் கழிந்து மீண்டும் "சாமி!" என்ருன்.

பதிலே இல்லை.

அவன் கரையேறி வந்தான். கிணற்றங்கரையில் சாமியாரைக் காணவில்லை. பனியனை எடுத்து உடம்பைத் துடைத்துக் கொள்ளலாம் என்று உடைகள் வைத்த இடத்தைப் பார்த்தான். அவனுக்குப் பகீரென்றது! அவனது போலீஸ் உடை அங்கே இல்லை! அதற்குப் பதில் சாமியாரின் காஷாயம் அவனைப் பார்த்துச் சிரித்தது!

(தொடரும்)

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

# போர்ஹான்ஸ்

## டூத்பேஸ்ட்

## அநேக முக்கிய விதங்களில் மேம்பட்டது!

**1** **ஈறுகளுக்குச் சிறந்தது :** ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாக தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப்படுத்திய பல் நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

**2** **பற்களுக்குச் சிறந்தது :** விசேஷ துவர்ப்புப் பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், திடமாயும், ஆரோக்கியமாயும் பற்களுள்ள 45-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும் கலந்து கொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகித்து வருவதே காரணமென அவர்கள் யாவரும் கூறினர்.

**3** **வாய்க்கு மணமூட்டுவதில் சிறந்தது :** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய்க்கு நறுமணமூட்ட உங்கள் நாக்கும், மேல்வாயும் கூட சுத்தமாக இருக்கவேண்டும் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின் மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்டை வைத்து, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத்துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4** **உங்கள் புன்னகையை எடுத்துக் காட்டுகிறது :** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், பற்களின் எனாமல் சிதைய விடாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பதுபோல சுத்திகரிக்கும் குணம் வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தை தவறாமல் பேணி வருவதன் மூலம் உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டைத் தவறாமல் உபயோகியுங்கள்.




ஒரு பல் வைத்தியரால்
தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD.

H 113

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



## பூவைப் போல...
## உங்கள் மேனியை மலரச்செய்வது ரெக்ஸோனா

ரெக்ஸோனா சோப்பில் இருப்பது கேடில் — பற்பல எண்ணெய்கள் கலந்த விசேஷத் தைலமாகிய கேடில். சருமத்திற்கு ஊட்டமளித்து உங்கள் இயற்கை அழகை வெளிக் கொணரத் துணைபுரியும்.






கேடில் கலந்த டாய்லெட் சோப்
இது ஒன்றே

RP. 151-50TM